## இக்கால இல்லங்களிலே ஸர்ப்...

# 'வெள்ளோட்டம் பாருங்களேன்...'

என்கிறார் வங்காளப் பெண்மணி ஸ்ரீமதி நந்திதா ராய்.

'புதுமை நாடிய எனக்குப் பூரண திருப்தி அளித்துவிட்டது புதுமை மயமான ஸர்ப். இன்று எல்லாத் துணிகளுக்கும் நான் உபயோகிப்பது ஸர்ப்' என்று கூறும் ஸ்ரீமதி ராய் பல்வேறான ஈடுபாடுகள் உடையவர். 'ஸர்ப் உபயோகிக்கிறேனா, ஓய்வு நேரம் மிஞ்சுகிறது; அவ்வளவு இலகுவான சலவை. வெள்ளைவெளேரென்ற சலவை !' என்கிறார் அவர்.






## ஸர்ப் மூலம் உங்களுக்கு

# வெள்ளைவெளேரென்ற சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

SU.21-X52 TM

# Be Smart use a... BLACKBIRD PEN








Self-filling and Regular Pens available in variety of colours with Gold Nib.

PRICE Rs. 8/76



*100 years of good writing*

SWAN INDIA PRIVATE LIMITED, BOMBAY-1.

*Distributors:*

M. G. SHAHANI & CO. PRIVATE LIMITED

62, MALAYAPERU MAL! STREET, MADRAS

heros'-SWI 31



# கல்கி



## பொருளடக்கம்

பிலவ
கார்த்திகை 25

டிசம்பர் 10, 1961



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

ஆந்திரத்தின் குண்டூர், கிருஷ்ணா, கிழக்கு கோதாவரி, மேற்கு கோதாவரி ஜில்லாக்களில் புகையிலை பதனிடல் நூதன முறையில் நடைபெறுகிறது. அந்த ஜில்லாக்களில் விரிவுள்ள பண்டகசாலைகளில் சிகரெட் தயாரிப்புக்காக வர்ஜீனியா புகையிலை கணப்புப் போடப்பட்டுப் பக்குவப்படுத்தப்படுகிறது. அத்தகைய புகையிலையை, அதற்கான விற்பனைத் தலமாகிய குண்டுரில், ஐக்கிய ராஜ்யம், ருஷியா மற்றும் இதர நாடுகளின் சிகரெட் தயாரிப்பாளர்கள் வாங்கி ஏற்றுமதி செய்கின்றனர்.



# புகையிலையின் வரலாறு... 5

Panama

20

CIGARETTES




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

## பனமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.703 TM

Obens' Advtg



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 19

# தர்மம் பிறந்த தினம்

'தோற்றமும் நீக்கமுமற்ற பரம்பொருள் பிறந்ததாகச் சொல்லுவதுண்டா? அவ்வாறிருக்க, பரம்பொருளினின்றும் பிரிக்கமுடியாத தர்மத்துக்கு ஏது பிறந்த தினம்?' என்று வாசகர்கள் கேட்க மாட்டார்கள்.

ஏனென்றால் தோற்றமும் நீக்கமுமற்ற பரம்பொருள் மானுட வடிவம் தாங்கி இப் பூமியில் பலமுறைகள் பிறந்து வளர்ந்ததாகப் படித்திருப்பவர்கள் நாம். அதே போல் தர்மத்தைத் தழைக்கச் செய்வதற்கென்றே தோன்றிய மகா புருஷர்களைப் பற்றியும் கேட்டிருப்பவர்கள் நாம்.

அப்படிப் படித்ததும், கேட்டதும் பொய்யல்ல என்று இன்று கண்ணுக்கு மெய்யாக விளக்கிவரும் ராஜாஜியைக் காணும்போது, அறம் பிறந்ததென்று சொல்வதில் ஆச்சரியப் படுவதற்கென்ன இருக்கிறது?

ராஜாஜிக்கு இந்த டிசம்பர் ஒன்பதாம் தேதியன்று எண்பத்திமூன்றாவது ஜயந்தி தினம். 'வாழ்க்கையென்பது கதையைப் போன்றதே—அது எவ்வளவு நீண்டது என்பது முக்கியமல்ல; எவ்வளவு சிறப்பானது என்பதே முக்கியமானது' என்று ரோமாபுரி ஞானியொருவன் கூறினான். ராஜாஜி அவர்களின் நீண்ட வாழ்க்கையோ அதன் ஒவ்வொரு வினாடியிலும் பொருள் நிறைந்தது. இந்த எண்பத்திமூன்றாவது ஆண்டி லும் ஜீவத்துடிப்புடன் துலங்கும் பயனுள்ள வாழ்க்கை அது.

> யௌவன நாள் முதற்கொடுதான் எண்பதின் மேல் வயதுற்ற இன்றுகாறும்
> செவ்வியுறத் தனதுடலம் பொருளாவியால் உழைப்புத் தீர்தலில்லான்
> கல்வியைப் போல அறிவும், அறிவினைப்போலக் கருணையும், கருணைபோலப்
> பல்வித ஊக்கங்கள் செயும் திறனுமொரு நிகரின்றிப் படைத்த வீரன்

என்று அமரகவி பாடியதெல்லாம் பொருந்த நிற்கும் பெருந்தகை நம் ராஜாஜி.

அவரது இந்த அறிவும், அருளும், ஆக்கத் திறனும் அறத்தை நிலைநாட்டவே பயனுகின்றன. அவர் அரசியலில் ஈடுபட்டிருப்பதும் அறவாழ்வை அடிகோலுவதற்குத் தான். 'புவிமிசைத் தருமமே அரசியலதனிலும், பிற இயலனைத்திலும் வெற்றி தருமெனு வேதம் சொன்னதை முற்றும் பேணி' நிற்கும் பாரதப் பண்பாட்டின் பிரதிநிதி அவர்.

அரசியலைவிட அறம்தான் அவருக்கு முக்கியம் என்பதற்கு ஒரே உதாரணம் போது மானது. "எங்களுடைய தேர்தல் அறிக்கையைக் கண்டபின் அதில் உள்ள கொள்கை களை ஆளும் கட்சி பின்பற்றுமானால் அதுவே எனக்குப் போதும்; தேர்தலில் ஒரு கட்சியாக நின்று வெற்றி பெற்று என்ன ஆகவேண்டும்?" என்கிறார் ராஜாஜி.

ஆம், அவருக்கு ஆகவேண்டியது இனி என்ன இருக்கிறது? வாழ்க்கையில் அநுப விக்க வேண்டியதெல்லாம் அநுபவித்தாயிற்று. சிறைவாசத்திலிருந்து சிம்மாசனம் வரை எல்லாம் பார்த்தாயிற்று. இந்தச் சிறுமை, பெருமை இரண்டையும் ஒன்றாகக் கருதும் ஸ்திதப்ரக்ஞை பெற்ற அவருக்கு இனி தனி வாழ்வில் கிட்ட வேண்டியது எதுவும் இல்லை தான். எனினும், 'எனக்குக் கர்மத்தால் ஆவதொன்றுமில்லை; ஆனபோதிலும் நான் கர்மத்தில் ஈடுபட்டிருக்கிறேன்' என்று கீதாசாரியன் கூறியதுபோல் உலகுக்கு உபகாரம் செய்வதொன்றே நோக்கமாகக் கொண்டு அவர் இந்தத் தள்ளாத பருவத்திலும்

ஓய்வை நீத்து அயராது உழைத்து வருகிறார்.

மத்திய சர்க்காரில் பதவிகள் வகித்து விட்டு ராஜாஜி ஓய்வு பெற்றபோது பிரதமர் நேருஜி கூறினார், 'தேவை ஏற்படும் போது தேசம் அவரை வேறு பணிகளுக்கு அழைக்கும்' என்று. அவர் கூறியது, ஒரு விசித்திரமான முறையில், ஓரளவு வேதனை தரும் முறையில் இன்று உண்மையாகி விட்டது. தேசத்தின் அழைப்பை, தர்ம தேவதையின் அழைப்பை, ஏற்றுக் கொண்டு

**அறமே பெரிதென அறிந்திடு மனத்தனும்**
**மறமே உருவுடை மாற்றலர் தம்மைச்**
**சுற்றமும் நோக்கான், தோழமை மதியான்**

என்றபடி விடுதலைப் போர் நடத்தி வருகிறார் ராஜாஜி. சுதந்திரத்தைத் தினந்தோறும் பறிகொடுத்து மாக்களாகிவரும் மக்களையெல்லாம் தட்டி எழுப்புகிறார். கண்ணன் தனஞ்சயனை ஊக்கியது போலவே அச்சத்தை உதறுமாறு நாட்டினரை அழைக்கிறார்.

அச்சமின்மை எதற்குத் தேவை? உள்ளத்தில் பட்டதை அப்படியே சொல்லுவதற்குத்தானே? இந்த அந்தரங்க சுத்தம் காரணமாகத்தான் ராஜாஜி அன்று ஸ்ரீநிவாச அய்யங்கார், மோதிலால் நேரு, சி. ஆர். தாஸ் முதலிய சிங்கங்களுக்கும் எதிராக நிற்கும் துணிச்சலைப் பெற்றிருந்தார். பின்பு பாகிஸ்தான் பிரிவினை செய்ய வேண்டும் என்று கூறி அந்த அளவுக்குத் தீர்க்க தரிசனமில்லாத மற்றத் தலைவர்களின் அதிருப்தியைத் தேடிக் கொண்டார். 1942-ம் ஆண்டு நடந்த பலாத்காரப் புரட்சியில் ஈடுபடவில்லை என்பதற்காக அவர்மீது சுமத்தப்பட்ட அவதூறுகள் தர்மப் பாதையிலிருந்து அவரை அணுவளவும் அசைக்கவில்லை. அணு ஆயுத சோதனைகளை எதிர்த்து உலக அரங்கிலே அவர் தொடுத்திருக்கும் வாதப் போர் தனிப் பெருங்குரலாகத் திகழ்கிறது. இன்று தர்ம யுத்தத்துக்கு துவஜாரோகணம் செய்திருக்கிறார் அவர். இவ்வாறு பிறரை எதிர்ப்பதெல்லாம் கூடப் பெரிதல்ல. தம்மையே மறுத்துத் தம் கருத்துக்களை மாற்றிக் கொள்வதற்கு அதைவிடத் துணிச்சல் வேண்டும். இந்த வகையில் ராஜாஜியைப் போன்ற துணிச்சல்காரர் யாருமே கிடையாது. உள்ளத்துக்கு விரோதமாக நடக்க முடியாத சித்தசுத்திதான் இதற்குக் காரணம். அவரது உள்ளம் தெளிவின் உறைவிடமாகும். புலனை அடக்கி, விருப்பு, வெறுப்பில்லாமல், 'வருக வருவதென்றே' வாழ்வாங்கு வாழ்பவர்கள் பெறும் உள்ளத் தெளிவு அது. கீதை கூறும் இந்தத் தெளிவு காரணமாகவே அவர் சிந்தனை தூய்மையாக இருக்கிறது; சொல்



புனிதமாக இருக்கிறது; செயலெல்லாம் பாவனமாக உள்ளன.

ராஜாஜியின் அருமை பெருமைகளை எண்ணிப்பார்த்தால் அதிசயமாகத்தானிருக்கிறது. அவர் தேர்ந்த அரசியல்வாதியோ, ராஜதந்திரியோ மட்டுமல்ல; பழுத்த வேதாந்தி; வருவதை முன் கூட்டியே காணக்கூடிய தீர்க்கதரிசி; தலைசிறந்த எழுத்தாளர்; கதை உலக மன்னர்; கட்டுரையிலும்வேந்தர்; புதுப் புது உவமைகளைக் காணும் காவிய உள்ளத்தினர்; மக்களை வசப்படுத்தும் பேச்சாளர்; பரம ரசிகர்.




பல துறைகளிலும் தமக்கு ஒப்பாக ஒருவரின்றி வாழும் ராஜாஜியின் காலத்தில் வாழும் நாம் பாக்கியசாலிகள் தாம். ஆனால் அவரோ இந்த ஆண்டு சுதந்திர தினத்தன்று எழுதினார்: 'இன்று இவ்வுலகத்திலிருந்து துயரப்படுவதற்கில்லாமல் கண்ணை மூடிவிட்ட சுதந்திர பாரதச் சிற்பிகள் பாக்கியசாலிகள்' என்று. முற்றும் துறந்த முனிவரின் மனப்பான்மை கொண்ட அவர், உள்ளம் நொந்து அப்படி எழுதியதற்குக் காரணம் இன்று தர்ம நெறிகள் சிதிலமாகி யிருப்பதுதான். ராஜாஜி கூறும் வழியே சென்று பழுதுபட்டிருக்கும் இந்தப் பண்பு மாளிகையைப் புதுப்பிப்போமாக. அவருடைய மனநோக்காட்டையும் தீர்ப்போமாக.

'அறிவற்ற அதிகாரம் நடப்பதாகக் கூறும் ராஜாஜி அதிகாரமற்ற அறிவின் உறைவிடமாக விளங்குகிறார்' என்று 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' பிரதம ஆசிரியர் சமீபத்தில் எழுதினார். உலக சர்க்கார் என்று ஒன்று ஏற்படுமானால் அதன் ஆட்சி பீடத்தில் இருக்க வேண்டியவர் ராஜாஜி. ஆனால் ஆட்சி பீடத்தை என்றுமே அவர் நாடியதில்லை. ஆட்சியிலிருந்தாலும் இல்லாவிட்டாலும் உலகுக்காகவே உயிர் வாழும் அந்த உத்தமரை நம் இதயபீடத்துக்கு வரவேற்போமாக!

தெய்வ சாபம் நீங்கவே நங்கள் சீர்
தேசமீது தோன்றுவாய் வா வா வா
ஒற்றுமைகளுய்யவே நாடெல்லாம்
ஒரு பெரும் செயல் செய்வாய் வா வா வா

என்று கூறி வரவேற்றுப் பல்லாண்டு கூறுவோமாக!

# பதினோராவது அதிசயம்!

ஆக்ராவிலுள்ள தாஜ்மகால் உலக அதிசயங்கள் ஒன்பதில் ஒன்று இல்லையா என்பது பற்றிக் கருத்து வேற்றுமை இருக்கக்கூடும். ஆனால் அந்த ஆக்ராவில் சென்ற மாதம் கடைசி வாரத்தில் வேறோர் அதிசயம் நிகழ்ந்துவிட்டது. அதைத்தான் பதினோராவது அதிசயம் என்று குறிப்பிட்டிருக்கிறோம். பத்தாவது அதிசயம் நேரு சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கையே என்பதைத்தான் ராஜாஜி விண்டு கூறி விளக்கியிருக்கிறாரே! அதை ஒப்புக்கொண்டாலும் ஒப்புக் கொள்ளாவிட்டாலும் ஆக்ராவில் சென்ற மாதம் நடைபெற்ற சுதந்திரக் கட்சியின் சம்மேளனம் ஓர் அதிசயம் என்பதைப் பிரதமரவர்கள் ஒப்புக்கொண்டே தீருவார். நேரு அவர்களும் வேறு பல மத்திய மந்திரிகளும் பிறந்து வளர்ந்த ராஜ்யம் உத்தரப் பிரதேசம். காங்கிரஸ் கட்சி ஆணி வேர் சல்லி வேர் விட்டுக்கொண்டு படர்ந்த பகுதி. அங்கேயுள்ள மக்கள் சுதந்திரக்கட்சிக்குப் பேராதரவளித்தது ஒரு பேரதிசயமே அல்லவா? அதையும் தவிர இந்தப் 'பணக்காரக் கட்சி'யின் பிரதிநிதிகளில் தொண்ணூறு சதவிகிதத்தினர் அசல் நாட்டுப்புறத்து எளிய மக்கள் என்ற அதிசயத்தையுமல்லவா இம் மகாநாடு உணர்த்தி விட்டது.

இரண்டாண்டில் சுதந்திரக் கட்சி புரிந்த அற்புத சாதனைகளுக்கு ஒரு சிகரமாக விளங்கியது ஆக்ரா மகாநாடு. மக்களின் மனத்தில் உருவாகி வரும் சுதந்திர உணர்ச்சிக்கு ஒரு சின்னம் போல் ஆக்ரா கோட்டையின் எதிரே எழும்பியது சுதந்திர நகரம். அங்கு இருபது வாயில்களுடன் உயர்ந்து நின்றது பிரம்மாண்டமானதொரு பந்தல். விஸ்தாரமான மேடைக்குப் பின்னணியாக நீல நிறத்தில் தீட்டப்பட்டிருந்த ஓர் இந்தியத் தேசப் படத்தில் ஒவ்வொரு ராஜ்யத்திலும் நட்சத்திரச் சின்னமிட்டிருந்தது. மத்திய சர்க்காரின் சர்வாதினம் குறைந்து ஒவ்வொரு ராஜ்யத்தின் சுதந்திரமும் அதிகமானால் 'ஸ்டார் வால்யூ'வுக்குக் கேட்பானேன்! உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்யும் கட்சியின் சுதந்திரப் பொருளாதாரக் கொள்கைக்கு அடையாளமாக விவசாயிகள் சாகுபடி செய்வது போலவும், தொழிற்சாலைப் புகைபோக்கிகள் புகைவிடுவது போலவும் சித்திரங்கள் காட்சி தந்தன. எம் மதமும் சம்மதமாகக் கருதிமக்களது சமயஉணர்வைப்போற்ற ஆலயமும், மசூதியும், மாதா கோவிலும் ஓவியமாக இலங்கின. எல்லாவற்றுக்கும் மேலாக அருமைத் தலைவர் ராஜாஜி அவர்களின் சித்திரம் மேடைக்குப் பின்னாலுள்ள சுவரை அலங்கரித்தது. ஒரு பந்தல் மட்டும் சுதந்திர நகராகி விடுமா? மகாநாட்டுக்கு வந்த ஓராயிரம் பிரதிநிதிகளுக்கும் இட வசதி அளிப்பதற்காக ஐம்பது கூடாரங்களும் அமைக்கப்பட்டிருந்தன. அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்ய ஒரு கடைத் தெருவும் தபால் நிலையமும் தோன்றி விட்டன. வந்தவர்களை உபசரிக்கும் பொறுப்பை ஐந்நூறு தொண்டர்கள் ஏற்றிருந்தார்கள். இவர்களில் நூறு பேர்கள் பெண்மணிகள்.

இந்தச் சூழ்நிலையில்தான் ஒரு மகோற்சவமாக நடந்தேறியது சம்மேளனம். நவம்பர் 23-ந் தேதியன்று ராஜாஜி ஆக்ரா வந்தவுடனேயே களை கட்டி விட்டது. 'களை இழந்த நாட்டிலே முன் போலே களைசிறக்க வந்தவர்' அல்லவா அவர்? அகில இந்திய, ராஜ்யத் தலைவர்கள் பலரும், பிரமுகர்களும் விழாவில் கலந்து கொண்டனர். அந்நியதூதரகப் பிரதிநிதிகளும் சம்மேளனத்துக்கு வந்திருந்து சிறப்பித்தது குறிப்பிட வேண்டிய விஷயம்.

இருபத்து நான்காம் தேதியன்று பொதுக் குழுவின் கூட்டம் நடைபெற்றது. பொதுக் காரியதரிசி ஸ்ரீ மஸானி அன்று மகாநாட்டுக்குச் சமர்ப்பித்த அறிக்கையிலிருந்து இந்நாட்டின் பதினான்கு பெரு நகரங்களில் பொதுஜனக் கருத்தைச் சேகரித்ததில் காங்கிரசுக்கு அடுத்தபடி சுதந்திரக் கட்சிக்குத்தான் அதிக ஆதரவு கிடைத்திருக்கிறது என்று தெரிந்தது. பெருங்காயம் வைத்த பாண்டத்தைப்போல் காங்கிரஸ் பழைய புகழிலேயே இன்னமும் ஏதோ ஓடிக்கொண்டிருக்கிறது போலும்!

மறுநாள் பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது. இந்தக் குழந்தைக் கட்சிக்கு ஆயிரம் பிரதிநிதிகள் கூடியிருந்தது பெருமிதப்பட வேண்டிய விஷயமாகும்.

இந்தக் கூட்டத்துக்கு முன்னுரை வழங்கிய ஸ்ரீ ரங்கா அவர்கள் சுதந்திரக் கட்சியானது தேசியக் கொள்கை, சர்வ தேசியக் கொள்கை இரண்டிலுமே காங்கிரஸிலிருந்து தெற்றென மாறுபடுவதை நன்கு விளக்கினார். முதுமையைப் பயனுள்ள செல்வக் கருவூலமாக்கி அந்த ஆஸ்தியை மக்களுக்கு அளித்து வரும் ஸ்தாபகர் ராஜாஜியை அவர் உணர்ச்சியுடன் போற்றினார். இந்தக் கூட்டத்தில்தான், சீன ஆக்கிரமிப்பு விஷயத்தில் இந்தியா கடைப்பிடிக்கும் கொள்கையைக் கண்டித்து ராஜாஜி ஒரு தீர்மானத்தைப் பிரேரித்துப் பேசினார். இந்த உரையின்போது அவரது உள்ளம் எவ்வளவு பரந்தது என்பது வெளியாயிற்று. அந்நியக் கொள்கைத் தவற்றுக்காகப் பாதுகாப்பு மந்திரியை ஸ்ரீ உத்தம் சிங் நாகோகி தனிப்படத் தாக்கியதையும், பிரதமரைப் பொறுப்பாளியாக்கி அவர் மீது நடவடிக்கை

1. மகாநாட்டின் அழகிய முகப்பு. 2. சுதந்திரக்கட்சித் தலைவர்களின் ஊர்வலம். 3. ஜெயப்பூர் மகாராணி ஸ்ரீமதி காயத்ரி தேவி. 4. 26-ம் தேதி மகாநாட்டு மேடையில் டுங்கர்பூர் மன்னர் லக்ஷ்மண்சிங், மஸானி, ராஜாஜி, கே. எம். முன்ஷி முதலிய தலைவர்கள் 5. பிரதிநிதிகள் கூட்டத்தில் நமது வெளிநாட்டுக் கொள்கை பற்றிய தீர்மானத்தை ராஜாஜி பிரேரேபிக்கிறார். படத்தில் ஸ்ரீ உத்தம்சிங் நாகோகி, ஸ்ரீ காமாக்ய நாராயண்சிங் ஆகியோரையும் காணலாம். 6. ஆக்ரா மகாநாட்டில் கொடியேற்று வைபவம் நடைபெறுகிறது. கட்சிக் கொடியின் நிழலில் தலைவர்களையும் மகாநாட்டுக்கு வந்திருந்த திரளான கூட்டத்தில் ஒருபகுதியையும் (படம்7) பார்க்கலாம்.

எடுக்கவேண்டும் என்று மேஜர் கே. எஸ். சிங் கூறியதையும் ராஜாஜி ஆட்சேபித்து, பொதுவில் அரசாங்கத்தின் கொள்கைகளைத்தான் கண்டிக்க வேண்டும் என்று கூறினார்.

சுதந்திரக் கட்சி அங்கத்தினரின் ஆண்டுச் சந்தாவை 50 காசிலிருந்து 25 காசாகக் குறைக்கும் தீர்மானத்தை ஜெய்ப்பூர் ராணி காயத்ரி தேவி கொண்டு வந்தார். கட்சியின் தமிழ்நாட்டுக் காரியதரிசி ஸ்ரீ எஸ். எஸ். மாரிசாமி உட்படப் பல தலைவர்கள் பிரேரித்த தீர்மானங்கள் நிறைவேறிய பின்னர், பொதுக்குழுவிலும் திருத்தங்கள் செய்யப்பட்ட கட்சியின் தேர்தல் விஞ்ஞாபனத்தை அங்கீகரிக்குமாறு கேட்டுக் கொள்ளும் தீர்மானத்தை ஸ்ரீ கே.எம். முன்ஷி கொண்டு வந்தார். அப்போது அவர் நிகழ்த்திய உரையில் விவசாயிகள் நலனே கட்சியின் பிரதானமான குறிக்கோள் என்று குறிப்பிட்டார். 'இன்று மத்திய ஆட்சிபீடத்திலிருந்து தனியொரு மனிதரின் அதிகாரம் நடைபெற்று வருகிறது. சர்க்கார், ராணுவம், திட்டக்கமிஷன் எல்லாம் அவர் கீழ்தான் உள்ளன. இந்த ஆதிக்கத்தை எதிர்த்தேயாக வேண்டும்' என்றார் அவர்.

'சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கையானது அரசாங்கத்தின் ஆட்சி நெறிக் கோட்பாடாக ஆனாலன்றி நாட்டில் ஜனநாயகம் அழிந்துவிடும். இப்போது மக்கள் தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக்கொள்ளாவிட்டால் தேர்தலுக்குப் பின் ஜீவாதார உரிமை யாவும் பறிமுதலாகி விடும்' என்றும் அவர் எச்சரித்தார்.

'மதப் பற்றுள்ள இந்த நாட்டில் இன்று நான் ஒரு மதஸ்தாபனத்துக்கு நன்கொடை அளித்தால் அதற்கு வரி உண்டு; அதையே ஒரு நாட்டியப் பள்ளிக்கோ காங்கிரஸுக்கோ கொடுத்தால் வரி கிடையாது' என்று நகைச்சுவையுடன் கூறிப் பாரதப் பண்புகளை எவ்வளவு கேவலமாகக் கருதுகிறது காங்கிரஸ் என்பதனைப் புரிய வைத்தார் ஸ்ரீ முன்ஷி. தீர்மானங்கள் யாவும் நல்ல முறையில் நிறைவேறின.

மறுநாள் காலை ராஜாஜி கொடி ஏற்றுவதற்காக வந்த போது மக்களின் உற்சாகம் கங்கு கரையில்லாமல் புரண்டோடியது. கண்ணுக்கும், எண்ணத்துக்கும் இனிய நட்சத்திரக் கொடியை ராஜாஜி ஏற்றுவித்த போது சத்திய யுத்தத்துக்கு அவர் கொடியேற்றி வைத்ததாகவே தோன்றியது. 'வழி தப்பாதபடி மக்களுக்குத் திசை காட்டும் துருவ நட்சத்திரக் கட்சி இது' என்று அழகான விளக்கம் தந்தார் ராஜாஜி.

அன்றுதான் பொது மக்கள் அனுமதி பெற்ற பகிரங்கக் கூட்டம் நடைபெற்றது. 'பொது மக்கள் அனுமதி பெற்ற' என்றது உபசாரத்துக்குச் சொன்ன வார்த்தையல்ல. பிரவேசக் கட்டணம் கொடுக்கா விட்டாலும் தங்களைச் சம்மேளனத்துக்கு அனுமதித்தே தீரவேண்டும் என்று பிடிவாதம் பிடித்துக் காரிய சாதகம் செய்து கொண்ட ஒரு லட்சம் மக்கள் குழுமியிருந்த மகத்தான கூட்டம் அது. இட நெரிசலால் ஏதேனும் துர்ச்சம்பவம் நடந்துவிடப் போகிறதே என்பதால் பலரை வெளியேற்ற நேரிட்ட மாபெரும் ஜனத்திரள் அது. கூட்டத்துக்கு முன்பு நடைபெற்ற ஊர்வலத்திலும் மக்கள் காட்டிய உற்சாகம் சொல்லிச் சாத்தியப்படாத விஷயமாகும். யானைகளும் குதிரைகளும் ஒட்டகங்களும் முன்வந்தன. பல்வேறு ராஜ்யங்களின் பண்பாட்டை விளக்கும் காட்சிகளும் ஊர்வலத்தில் இடம் பெற்றிருந்தன. மகாநாட்டுத் தலைவர் ஆசாரிய ரங்காவும், வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ எஸ்.கே.டி. பாலிவாலும் திறந்த ஜீப்பில் மூன்று மைல்கள் ஊர்வலமாக வந்தனர். ஊர்வலத்தின் நீளமே ஒரு மைல் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். வழியெங்கும் சுதந்திரச் சிற்பிகளின் பெயருடன் கூடிய அலங்கார வளைவுகள் அழகு செய்தன.

நட்சத்திரக் கட்சியின் பொதுக்கூட்டம், நட்சத்திர நடிகர் ஸ்ரீ பிரேம்நாத்தின் பிரார்த்தனையுடன் 'ஜாம் ஜாம்' என்று ஆரம்பமாயிற்று. கணதந்திர பரிஷத், சுதந்திரக் கட்சியுடன் இணையத் தீர்மானித்து விட்டது என்ற சுபச்செய்தியை ஸ்ரீ ரங்கா அறிவித்தவுடன் ராஜாஜி பேசத் தொடங்கினார்.

'உப்பு வரியை நீக்க வேண்டுமெனகாந்திஜி விரும்பினார். நில வரியை ரத்து செய்ய வேண்டுமென சுதந்திரக் கட்சி விரும்புகிறது. முதலில் காங்கிரஸ் ஆட்சி தொழில் துறையில் தலையிட்ட போது தொழிலதிபர்களே அதைக் கவனித்துக் கொள்வார்களென எண்ணினோம். விவசாயியின் நிலத்தில் சர்க்கார் புகுந்த போதுதான் நாங்கள் இந்தக் கட்சியைத் தொடங்கினோம். விவசாயிக்கு நிலம் இரண்டாம் மனைவி போல். அதனைத் தீண்ட யாருக்கும் அதிகாரம் கிடையாது. விவசாயிகளுக்கு ஊட்டமளிப்பதே நியாயம். எனவே தான் சர்க்கார் வருமானத்தில் ஒரு சிறிய பகுதியாகிய நில வரியை நீக்க வேண்டுமென்கிறோம்' என்றார் அவர்.

பிரதிநிதிகள் சபையில் நிறைவேற்றப்பட்ட பல தீர்மானங்கள் இந்தப் பொது மகாநாட்டிலும் நிறைவேற்றப்பட்டன. அன்று ஸ்ரீ ரங்கா நிகழ்த்திய தலைமையுரையில் காங்கிரஸின் கம்யூனிஸ பாணியை அக்கு வேறு ஆணி வேறாக அலசி விட்டார். கூட்டுறவுப் பண்ணை முறையில் அடங்கியுள்ள பசப்பலையும், ஏமாற்றுதலையும், பலவந்தத்தையும் விளங்க வைத்தார். சரித்திர முக்கியத்துவம் பெற வேண்டிய பிரசங்கம் அது.

ஏன், இந்த சம்மேளனமே சரித்திர முக்கியத்துவம் பெற வேண்டியதுதான். எத்தனையோ எதிர்ப்புக்களைச் சமாளித்து இரண்டு ஆண்டுகளில் கட்சி பெற்றிருக்கும் வளர்ச்சிக்கு அது ஒரு சான்று. சம்மேளனத்தை வெற்றிகரமாக நடத்தி வைத்த உத்தரப் பிரதேசவாசிகளை உத்தமப் பிரதேசவாசிகள் என்றே சொல்லலாம். ராஜாஜியின் சொந்த ராஜ்யத்தில் 30,000 பேர் சுதந்திரக் கட்சியில் சேர்ந்திருக்கிறார்கள் என்றால் பிரதமரின் உத்தரப்பிரதேசத்திலோ அதைப் போல் நான்கு மடங்கினர் அங்கத்தினராகி யிருக்கிறார்கள். தங்களது கட்சி அபிமானத்தால் கட்சியின் ஸ்தாபகருடைய தீர்க்கதரிசனத்தையே பொய்ப்பித்து விட்டார்கள் அம்மக்கள். வரக்கூடியதையெல்லாம் முன்கூட்டியே எதிர்பார்க்கும் ராஜாஜியை 'நான் இம்மகாநாடு இவ்வளவு கோலாகலமாக நடக்கும் என எதிர்பார்க்கவில்லை' என்று சொல்ல வைத்தவர்கள் அல்லவா அவர்கள்!



## சத்தியத்தின் குரல்

1920-ம் ஆண்டு மகாத்மா காந்தி சென்னைக்கு விஜயம் செய்தார். அப்போது ஒரு நாள் மாகாணத்திலுள்ள பிரபல அரசியல்வாதிகள் மகாத்மாவைப் பேட்டி காண்பதற்கும் அவருடைய புதிய சத்தியாக்கிரஹப் போர் முறையைப் பற்றிச் சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்வதற்கும் வந்தார்கள். ராஜாஜியின் இல்லத்தில் இந்தப் பிரமுகர்களின் கூட்டம் நடந்தது. கேள்விகளுக்குச் சில சமயம் காந்தி மகாத்மா பதில் சொன்னார். சில கேள்விகளுக்கும் சந்தேகங்களுக்கும் ராஜாஜியே பதில் சொல்லி விட்டார். அந்தப் பதில்களுக்கு மகாத்மா ஒப்பம் வைத்தார். வயது முதிர்ந்த தேசத் தலைவரான ஸ்ரீ சி. விஜயராகவாச்சாரியார் இதைப் பார்த்து விட்டு, ''மகாத்மாஜி! சத்தியாக்கிரஹத் தத்துவங்களைப் பற்றி ஏதாவது புத்தகம் தாங்கள் எழுதியிருக்கிறீர்களா? ஸி. ஆர். அந்தப் புத்தகத்தைப் படித்திருப்பார் போலத் தோன்றுகிறதே!'' என்றார்.

மகாத்மா, ''புத்தகம் ஒன்றும் நான் எழுதவில்லை. ஆனால் உங்கள் ஸி. ஆர். எப்படியோ என்னுடைய வழிகளையும் தத்துவங்களையும் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறார். அது எனக்கே வியப்பாகத்தானிருக்கிறது!'' என்றார்.

இது முற்றிலும் உண்மை. காந்தியத் தத்துவங்களை ராஜாஜிபோலப் புரிந்து கொண்டவர்யாருமேகிடையாதுதான்.

இப்போது காங்கிரஸ் ஆட்சியில் காந்திய நெறியானது உணர்விழந்து உயிரிழக்கும் தறுவாய்க்கு வந்திருக்கும்போது அந்த நெறிக்கு மீண்டும் ஜீவனை அளித்திருப்பதும்ராஜாஜிதான். மக்களுடைய சுதந்திரச் செயற்போக்கையும், தரும சிந்தனையையும் மதித்து அவர்களிடமே பொருளாதாரத்தை ஒப்புவிக்கும் காந்தியக் கொள்கைதான் சுதந்திரக் கட்சியின் அடிப்படைக் கொள்கையாகும்.

காந்திஜியின் கொள்கைகளைப் பிரகடனப்படுத்தும் சத்தியத்தின் குரலாகவே ராஜாஜி விளங்கி வருகிறார் என்பதை உணர்த்துவது போல இந்தப் படத்தைக் காணும்போது தோன்றுகிறதல்லவா?

# ஒரு பெரும் தலைவர்

**ம. பொ. சி**

83



தலைவர் ராஜாஜி அவர்கள் எண்பத்துமூன்று ஆண்டுகளாக நம்மிடையே வாழ்ந்து வருகிறார்; நாம் வாழ வழிகாட்டி வருகிறார் என்பதை நினைக்கும்போது மனம் பெருமிதம் அடைகிறது. விடுதலைப் போராட்டகாலத்தில் அவர் தலைமையின் கீழ் தொண்டு புரிந்த என் போன்றவர்கள் அவரை என்றென்றும் மனத்திலிருத்திப் போற்றி வருவார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. "இந்தியர்களுக்கு ஆளத் தெரியாது" என்று அந்நாளில் ஆணவத்தோடு பேசினர் ஆங்கிலேயர். அதனைப் பொய்யாக்கிக் காட்டிய பெருமை தலைவர் ராஜாஜி அவர்களுக்கு உண்டு. விடுதலைப் போராட்ட காலத்தில் இந்தியத் தலைவர்களின் ராஜதந்திரத்துக்குப் பிரிட்டிஷார் அறைகூவல் விட்டபோதெல்லாம் அதனை வெற்றிகரமாகச் சமாளிக்கக் காங்கிரஸ் மகாசபைக்கு ராஜாஜியின் நுண்ணறிவு பெரிதும் பயன்பட்டது.

விடுதலை பெற்ற இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவி வகித்த முதல் இந்தியராகத் தலைவர் ராஜாஜி அவர்கள் இருந்தது தமிழினம் என்றென்றும் பெருமைப்படத்தக்க ஒன்றாகும்.

இன்றைய சூழ்நிலை ராஜாஜியை அரசியல் கொள்கையிலும் பணியிலும் அவருடைய நெடுங்கால நண்பர்களிடமிருந்து பிரித்திருக்கலாம்; பிரித்திருக்கிறது. லட்சியவாதிகள் இதுபோன்ற கடுமையான சோதனைகளுக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொள்வது இயற்கை. ஏகாதிபத்திய எதிர்ப்புக் காலத்தில் ஏற்பட்ட விடுதலை வீரர்களின் முன்னணி சுதந்திர இந்தியாவை நிர்வகிக்கும் காலத்தில் பிளவுபடுவது தவிர்க்க முடியாததாகும். ஜனநாயக வளர்ச்சிக்கு இதுபோன்ற மாறுதல் மிக மிக அவசியமாகத் தேவைப்படுகிறது. ஆனால் இத்தகைய கடுமையான சோதனைக்கு ஒரு பெரும் தலைவர் தம்மை உட்படுத்திக் கொள்ள மிகுந்த துணிவும் தியாக உணர்வும் தேவை. அவை ராஜாஜியிடம் இருக்கின்றபடியால் தம் மனச்சாட்சிப்படி நண்பர்களிடமிருந்து பிரிந்து தனித்து நிற்க அவரால் முடிகிறது. மனச்சாட்சிக்கு மதிப்புத் தருவோர், துணிவைப் பாராட்டும் மனமுடையோர் அவரை மதித்துப் பாராட்டுவார்கள். அந்த வகையில் தலைவர் ராஜாஜி அவர்களின் கடந்த கால சேவைக்கு நன்றி தெரிவித்து அவர் மேலும் பல்லாண்டுகள் வாழ்ந்து பாரதத்துக்கும் தமிழகத்துக்கும் மேலும் மேலும் பணி புரிய வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.





ராஜாஜி எழுதுகிறார்...

ராஜபுதனத்தையும், உத்தரப் பிரதேசத்தையும் சேர்ந்த வீரக் குலத்தினர் சுதந்திரக் கட்சியில் சேர்ந்திருப்பது குறிப்பிடவேண்டிய விஷயமாகும். இது பிரபுக்கள் ஆட்சிக்கு மீண்டும் உயிரளிப்பதேயாகும் என்று காங்கிரஸ் கட்சி சலியாமல் சொல்லி வருகிறது. ஆனால் முன்பு ராஜஸ்தானத்து மன்னர்களும், உத்தரப் பிரதேச நிலப் பிரபுக்களும் பெற்றிருந்த அதிகாரம் இன்று மறைந்து விட்டது. அந்த அதிகாரமும் பிரபுத்துவ முறையும் இன்றைய காங்கிரஸின் புது பிரபுத்துவ ஆட்சிக்குச் சற்றும் ஈடாகாது. தற்போதைய நிலையை ஒரு நுணுக்கம் தப்பாமல் சித்திரமாக வரைந்து காட்ட என்றால் முடியும். பழைய பிரபுத்துவ முறைக்கு இம்மியும் குறையாத பிரதிதான் இன்று காங்கிரஸ்காரர்கள் செலுத்தும் சர்வாதிபத்தியம் என்று நிருபிக்க முடியும்.

ஃ ஃ ஃ

பரம்பரையாக அதிகாரம் பெற்று வந்த மன்னர்களும் ஜமீன்தார்களும் தங்கள் அதிகாரங்கள் கைவிட்டுப் போவதை எவ்விதத்திலும் தடுத்து நிறுத்த முற்படவில்லை. இதற்கு மாறாக சுதந்திர ஜனநாயக வாழ்வு ஏற்படுவதற்காக, அந்த மன்னர்கள் உரிய சமயத்தில் தாங்களாகவே உரிமைகளை விட்டுக் கொடுத்தார்கள். இப்போது இவர்களில் சிலர் ஆளும் கட்சியின் பலத்தைச் சமன் செய்ய வேண்டும், பார்லிமெண்டு முறையை முழுமை பெற்றதாக்க வேண்டும், இதற்கு நல்ல எதிர்க்கட்சி ஏற்படுத்த வேண்டியது அவசியம் என்று கருதுகிறார்கள். எனவே ஓர் எதிர்க் கட்சிக்கு உதவியும், வலுவும் தர முன் வந்திருக்கிறார்கள். இது ஜனநாயகத்துக்குச் சற்றும் விரோதமற்ற ஒரு நடவடிக்கையேயாகும். என்றாலும் காங்கிரஸ் சர்க்காரும், கட்சியும் இப்போது இவர்களுடைய முன்னாள் ஆதிபத்தியத்தைப் பற்றிப் பன்னிப் பன்னிப் பேசுகிறார்கள். அதிகாரங்களை மனமொப்பிக் கைவிட்டவர்களைப் பற்றி இப்படிப் பேசுவது நன்றி கெட்ட செயலாகும். இந்திய சரித்திரத்தின் நெருக்கடியான ஒரு கட்டத்தில் நாட்டின் பண்பைப் பாதுகாத்து, சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டிய ஒரு சாராரைத் தீண்டாதவர்களாகச் செய்யும் முயற்சி இழிவானது மட்டுமல்ல; ஜனநாயகக் கோட்பாடுகளுக்கே முற்றிலும் விரோதமானது.

ஃ ஃ ஃ

ஆக்ரா சம்மேளனத்தின்போது ஜெனரல் நாதுசிங் என்பவர் சுதந்திரக் கட்சியில் சேர்ந்துவிட்டதாக வெளிப்பட அறிவித்தார். இது சாதாரணமான சம்பவமல்ல. இந்தியாவின் பாதுகாப்பிலேயே விசேஷமாக ஈடுபட்டிருந்தவர்கள் இப்போது காணும் நிலையில் அதிருப்தி கொண்டிருக்கிறார்கள் என்பதையே அது காட்டுகிறது. நிலைமை கவலையளிக்கும் போக்கில் சென்று கொண்டிருக்கிறது. இந்த நெருக்கடியான தறுவாயில் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்கள் தலைமையில் நடக்கும் சர்க்காரோ சீனாவின் ராணுவ ஆக்கிரமிப்பைத் தவறாக மதிப்பிட்டுக் குறைத்துப் பேசுவதிலேயே தீவிரமாக இருக்கிறது. அது கோவா விடுதலைப் பிரச்னைக்கு வெளிச்சம் போட்டுப் பெரிது படுத்துவதென சங்கற்பம் செய்து கொண்டிருக்கிறது. சீனாவைக் குறித்துத் தன் கொள்கையைப் புனராலோசனை செய்ய வேண்டும் என்ற அக்கறையை விடத் தேர்தலில் வெற்றி பெற்று, அதிகாரத்தைத் தொடர்ந்து கைப்பற்றுவதில் ஆளும் கட்சிக்குள்ள விருப்பமே பெரிதாக இருக்கிறது. இதைத்தான் இன்றைய போக்கு விளக்குகிறது. இது நாட்டின் துர்ப்பாக்கியமே. கோவா நிலைமை மோசமாகிக் கொண்டுதான் வருகிறது. இதில் சந்தேகமில்லை. ஆனால் எப்போது நினைத்தாலும் அதை ஒரே நாளில் தாய் நாட்டுடன் இணைத்துவிட முடியும். சீன சர்க்காரின் தீய நோக்கங்களும், செய்கைகளும் இதை விட முக்கியமான விஷயமாகும். கோவாப் பிரச்னையைப் போல் சீனா விவகாரத்தை அவ்வளவு எளிதாகத் தீர்க்க முடியாது. கோவா விஷயத்தில் நாடு முழுதும் ஏகோபித்த அபிப்பிராயம் கொண்டிருக்கிறது. கம்யூனிஸ ஆக்கிரமிப்புக்கோ இந்தியாவில் உள்ள கம்யூனிஸ்டுகளே—எத்தனைதான் பாசாங்கு செய்த போதிலும்—துணைநிற்கிறார்கள். கோவா விஷயம் இதில் அரையளவு கூட ஆபத்தானதில்லை.

வீட்டில்
கைவசம்
இருக்கட்டும்

சீதளம், ஜலதோஷம்
தலைவலி மற்றும்
ஜுரத்திற்கு

# C.A.Q

REGD. TRADE MARK




8 காப்ஸ்யூல்கள் கொண்ட
எளிதாகத் திறக்கும்
பெட்டியில் கிடைக்கும்.

## ஸ்பென்ஸர் & கோ. லிட்.

CQ-16-9A

சென்னை, பம்பாய், கல்கத்தா, டில்லி, மற்றும் கிளைகள்.

---



## பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
### பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414. மதராஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

சேரக் கடைசி தேதி 13-12-1961 ... முதல் ஏலத் தேதி 15-12-1961

25 மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள் (3-வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

டெல்லி கிளை ஆபீஸ்கள்: காக்ஸன் ஹவுஸ், 1/24, ஆஸப் அலி ரோடு, புது டில்லி-1 * பாலுஸேரி பில்டிங் 14-A/4, W. E. A. கரோல்பாக், புது டில்லி-5 * 198, முதல் மாடி, ஜோர்பாக் நர்ஸரி, புது டில்லி-3 * பெங்களூர் கிளை ஆபீஸ்: 185, முதல் மாடி, ஆறாவது க்ராஸ், காந்தி நகர், பெங்களூர்-9 * பம்பாய் கிளை ஆபீஸ்: "விஜய விஹார்" 17-A, லைன் மாதுங்கா, ஸ்டேட் (கிங்ஸ் ஸர்க்கிள் ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில்) பம்பாய்-22
கல்கத்தா கிளை ஆபீஸ்: 48, லேக் பிளேஸ், கல்கத்தா-29

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

# ஆளும் கட்சியின் ஆத்திரம்

இந்தியப் பிரஜை ஒவ்வொருவருக்கும் இந்த நாட்டில் எங்கும் சென்று வர உரிமை உண்டு என்பது சட்டம். சட்டத்தை மீறியவர்களை மட்டுமே ஓரிடத்திலிருந்து செல்ல முடியாதபடி காவலில் வைப்பது வழக்கம். அவ்வாறிருக்க, இந்த நாட்டின் மாபெரும் அரசியல் கட்சியின் தலைவர் ஒருவரைச் சீனவுக்கு இரையாகி வரும் இமாலயப் பகுதியிலேயே விட்டு வைக்க வேண்டும் என்று பொறுப்புள்ள ஒரு காங்கிரஸ் அங்கத்தினர் கூறுகிறாரென்றால் அது எவ்வளவு கண்ணியக் குறைவான விஷயம்? ஸ்ரீ என். ஜி. ரங்கா அவர்களின் ராணுவ அறிவை விருத்தி செய்வதற்காக அவரைக் காரகோரம் கணவாய்க்கருகே, பதினேழாயிரம் அடி உயரத்திலுள்ள ஒரு காவல்சாவடிக்கு இட்டுச் செல்வதற்குப் பிரதமர் அவர்கள் பெரிய மனத்துடன் முன் வந்தார். பேஷான காரியம்! அவ்வளவு உயரத்திலிருந்து நமது எல்லைக் காவலை நன்றாகப் பார்த்த பின் எப்படியெல்லாம் ராணுவ ஏற்பாடுகள் செய்யக் கூடாது என்பதை ரங்கா அவர்கள் தெரிந்துகொள்ள முடியுமல்லவா? அதிலிருந்தே செய்ய வேண்டியது என்ன என்ற ராணுவ அறிவையும் பெறக் கூடுமல்லவா?

நேரு அவர்கள் இவ்வாறு கூறியவுடனேயே ஸ்ரீ மகாவீர் தியாகி ரங்கா அவர்களை அந்தக் காவல் சாவடியிலேயே பொதுத் தேர்தல்வரை விட்டு வைக்கவேண்டும் என்று முத்து உதிர்த்திருக்கிறார். இதனைப் பிரதமர் கண்டிக்காதது கண்டனத்துக்குரிய விஷயமாகும்.

சுதந்திரக் கட்சியின் வளர்ச்சியைக் கண்டு ஆளும் கட்சியினர் கொண்டுள்ள ஆத்திரத்துக்கு இது ஓர் எடுத்துக் காட்டே. இன்னுமோர் எடுத்துக் காட்டு, பிரதமர் சமீபத்தில் நிகழ்த்திய ஒரு பேச்சு. இந்தப் பேச்சில் சுதந்திரக் கட்சி பாஸிஸக் கொள்கையைக் கடைப்பிடிப்பதாக நேருஜி திருவாய்மலர்ந்தருளியிருக்கிறார். அதிகாரத்தை ஒரே இடத்தில் குவித்துக் கொள்வது, பொருளாதாரத்தைச் சர்க்காரின் பிடியில் சிக்க வைப்பது, தொழில் — வர்த்தகம் எல்லாவற்றையும் அரசாங்கத்தின் கண்காணிப்பின் கீழ் கொண்டு வருவது, பத்திரிகைகளைத் தணிக்கை செய்வது, பார்லிமெண்டையும் ஜனநாயக ஸ்தாபனங்களையும் வெறுப்பது — இதுவே பாஸிஸம். தவறு செய்யும் காங்கிரஸைத் திருத்த மனமில்லாத நேருஜி காங்கிரஸின் தவற்றை எதிர்க் கட்சிமீது சுமத்திப் பார்த்து மகிழ்கிறார் போலும்!

# சென்னையின் புது முதற் பிரஜைகள்



மேயர் குசேலர்

சென்னை மாநகராட்சியின் தலைவராகத் திரு ஜி. குசேலரும், துணை மேயராகத் திரு எம். வேதாசலமும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர். இவர்களுக்கு நல்வரவும், வாழ்த்தும் கூறுகிறோம். சென்னை நகரத்தின் சேரிப் பிரச்னை மாளாத கதையாக இருந்து வருகிறது. நகரின் எழில், சேரி மக்களின் நலன் இரண்டையும் மனத்தில் கொண்டு தீர்வு காண வேண்டிய விஷயம் இது. இப்பிரச்னைகளைத் தாமே நன்கு உணர்ந்த மேயரும் உதவிமேயரும் இம்மக்களின் இன்னல்களை உள்ளபடி உணர்ந்து உரிய நடவடிக்கைகளை மேற்கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

நகரச் சாலைகளைச் செப்பனிட வெளி நாட்டுப் பிரமுகர்களின் வருகையை எதிர்பார்க்காத நிலையை அவர்கள் ஏற்படுத்த வேண்டுமென விரும்புகிறோம். மக்களின் அத்தியாவசியத் தேவையான குடிநீர் நிரந்தரமாகவும் தாராளமாகவும் கிடைக்கவும் அவர்கள் தக்க ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியது அவசியமாகும்.



உதவி மேயர் வேதாசலம்

# சுதந்திரத்தின் வழியே சுபிட்ச வாழ்வு

## தேர்தல் அறிக்கை

### 4. தொழிலும் வர்த்தகமும்

29. தொழில் துறை முதலீட்டு உரிமையானது மிகவும் விஸ்தாரமாகப் பரவுவதற்குச் சுதந்திரக் கட்சி வகை செய்யும். இதற்காக முதலீட்டுச் சங்கங்கள், டிரஸ்டுகள் ஆகியவற்றை நிறுவி அதிகம் பணம் படைத்திராதவர்களுக்கும் சிறு முதலீடுகள் செய்ய வாய்ப்பு அளிக்கும். இதே நோக்கத்தை முன்னிட்டுத் தொழில் துறை ஊழியர்கள் தங்கள் தொழிற்சாலைகளில் பங்குதாரர்களாக ஆவதற்கு அது வசதி அளிக்கும். இதனால் ஏராளமான ஊழியர்கள் தாங்கள் பணி புரியும் ஸ்தாபனங்களில் உரிமையாளர்கள் என்ற அந்தஸ்தைப் பெற முடியும். தொழில் துறையில் மேற்கொள்ளும் இந்தச் சீர்திருத்தங்களாலும், விவசாயத் துறையில் விவசாயிகளின் நில உரிமையை நிச்சயப்படுத்துவதாலும், எல்லாத் துறைகளிலும் அக்கறையோடு உற்பத்தியைப் பெருக்கும் மக்களையுடைய நல்லதொரு ஜனநாயகம் உருவாக வழி ஏற்படும்.

#### அரசாங்கத்தின் பொறுப்பு

30. தொழில்களில் அரசாங்கம் பங்கு கொள்வதை இக்கட்சி ஆட்சேபிக்கிறது. தொழிலிலும் வர்த்தகத்திலும் அரசாங்கத்தின் பங்கு அவை வளரச் சகாயம் அளிப்பதும், அவற்றைத் தக்கவாறு ஒழுங்குபடுத்துவதும்தான்; தானே அவற்றில் ஈடுபடுவதல்ல. அரசாங்கத்தின் வேலை ஆட்சி புரிவதுதான்; வியாபாரம் செய்வதல்ல. அபிவிருத்தி அடைந்து வரும் ஒரு நாட்டில் சர்க்கார் செய்யக்கூடியது எவ்வளவோ உண்டு; சாலைகள் முதலிய போக்குவரத்துச் சாதனங்களை அபிவிருத்தி செய்வது, மக்கள் ஒருவரோடொருவர் தொடர்பு கொள்ளும் இதர சாதனங்களை வளர்ப்பது, மலிவாக மின்சாரம் கிடைக்கச் செய்வது-இவை சர்க்காரின் காரியமாகும். இன்றைய அரசாங்கத்தில் இந்தக் கடமைகள் புறக்கணிக்கப்பட்டுள்ளன. அரசாங்கம் வியாபாரத்திலும் பொருட்கள் உற்பத்தியிலும் அநாவசியமாகத் தானே பிரவேசித்திருக்கிறது. இவைகளில் பலபொருள்கள் பொதுமக்களின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையில்லாதவையேயாகும்.



சுதந்திரக் கட்சியின் தேர்தல் சின்னம்

#### ஒரே சீரான அபிவிருத்தி

31. மூலதனப் பொருள்களைத் தயாரிக்கும் ஆலைத் தொழில், மக்கள் உபயோகப்படுத்தும் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழில்கள், விவசாயப் பொருட்களைப் பதப்படுத்திக் கிராம மக்களுக்குத் துணைத் தொழிலாக அமையும் தொழில்கள் ஆகியவை ஒன்றோடொன்று இணைந்த முறையில் சீராக அபிவிருத்தி அடைய வேண்டும் என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை. நமக்குள்ள வசதிகளுக்கு ஏற்பக் கனரகத் தொழில்களையும், ஆதாரத் தொழில்களையும் அபிவிருத்தி செய்வதற்கு அது ஆட்சேபிக்கவில்லை. குறைந்த வருமானமுள்ளவர்களின் வாழ்க்கையை மகிழ்ச்சிகரமாக்கும் விவசாயத்தையும், குடிசைத் தொழில்களையும், மக்கள் உபயோகிக்கும் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களையும் அசட்டை செய்து, இணக்கமற்ற முறையில் கனரகத் தொழிற்சாலைகளுக்கு மட்டுமே பிரதான இடமளிப்பதைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது.

32. தொழிற்சாலைகள் ஒரே இடத்தில் குவியாமல், ஒவ்வொரு பிரதேசத்துக்கும் ஏற்றபடி பரவலாக அமைக்கப்பட வேண்டும் என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கையாகும். நாட்டின் ஆலைத் தொழிலமைப்பை உருவாக்கும் காரியக்கிரமத்தில் இந்தப் பரவல் முறை பெரும் பங்கு பெற வேண்டுமென்பது அதன் கருத்து. இதனால் பிரதேசங்களுக்கிடையேயுள்ள ஏற்றத் தாழ்வுகள் குறையும். சுதந்திரமாக வேலை செய்யும் தொழிலாளிகள், வியாபாரிகள் ஆகியோருடைய சுதந்திரத்தைக் காத்துத் தர வேண்டும் என்பது சுதந்திரக் கட்சியின் கோட்பாடு. தொழில் செய்ய வேண்டும் என்ற ஆர்வ உணர்ச்சிக்கு ஊட்டமளிக்க வேண்டுமேயல்லாமல், எல்லாவற்றையும் ஆலைத்தொழில் மயமாக்கி விடலாகாது என்று அது கருதுகிறது. இவ்விஷயங்களில் சுதந்திரக் கட்சி மகாத்மா காந்தியைப் பின்பற்றுகிறது; இதற்கு மாறுக சோஷியத் சித்தாந்தத்தின் பாணியில் இருந்து வரும் ஆளும் கட்சியின் கொள்கையை இக்கட்சி எதிர்க்கிறது.

33. தனி மனிதர்கள் முதலீடு செய்வதற்கு ஊக்கமளிப்பதே சுதந்திரக் கட்சியின் நோக்கம். தேவைப்படுமானால் இதற்காகக் கடன்களும், உதவிகளும் அளிக்கும். கிராமப் புறங்களில் பொதுத் துறை மராமத்துகளைப் பரவலாக அமைத்து எல்லாப் பகுதிகளில் வாழ்பவர்களுக்கும் வேலை கிடைக்கச் செய்ய வேண்டும்; அதன் வழியே நிலத்தை மட்டும் நம்பி வாழ்வோருடைய நெரிசலைக் குறைக்க வேண்டும் என்கிறது சுதந்திரக் கட்சி.

34. ஆளும் கட்சி, அதன் குறிப் பறிந்து செயலாற்றும் அதிகாரிகள் ஆகியோர் வசமுள்ள கண்ட்ரோல்கள், பெர்மிட்டுகள், லைசென்சுகள், கோட்டாக்கள் ஆகியவற்றின் விளைவாக நாட்டுப் பொருளாதாரத்தில் ஏற்பட்டுள்ள குழப்பத்தையும், ஊழலையும் சுதந்திரக் கட்சி ஒழித்து, நிலைமையை நேராக்கும்.

## தர்மகர்த்தா முறை

35. உற்பத்தியாளர், பொருளை வாங்கி உபயோகிப்பவர், முதலீடு செய்பவர், தொழிலாளர் ஆகியோர் தங்களுக்கு உகந்ததைத் தாங்களே சுதந்திரமாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் முறைக்கு உரிய இடமும் முக்கியத்துவமும் தர வேண்டும் என்ற கொள்கையில் நம்பிக்கை கொண்டது சுதந்திரக் கட்சி. தொழில் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்குள் போட்டியிருப்பதால் உற்பத்தி உயர்வுக்கும், தொழில் வளர்ச்சிக்கும் இயற்கையான தூண்டுதல் கிடைக்கும் என்பது அதன் கருத்து. போட்டியில்லாத தொழில்களிலும், போட்டி வலிவு வாய்ந்ததாக இல்லாதபோதும் தொழிலாளர்கள் பாதிக்கப்படாமலும், விலைவாசிகள் ஒரேயடியாக உயர்ந்து கொள்ளை லாபம் ஏற்படாமலும் சுதந்திரக் கட்சியானது பாதுகாப்பு அளிக்கும். சொத்து உடையவர்கள் அதனைத் தர்மகர்த்தர்களைப் போலிருந்து பாதுகாத்து, சமூகத்துக்குப் பயன்படுத்த வேண்டும் என்ற காந்தியக் கொள்கையை இக்கட்சி பின்பற்றுகிறது. இதுவே தொன்றுதொட்டு இந்திய வாழ்முறையில் அடங்கிய ஓர் அம்சமாக இருந்திருக்கிறது. எனவே, சமூகத்தினிடம் தாங்கள் கொண்டுள்ள கடமை உணர்ச்சியினால் கட்டுப்படுத்தப்பட்டு, அதே உணர்ச்சியினால் செழிப்பும், வலிவும் பெற்ற மக்களின் சுதந்திரத் தொழில் முறையை அக்கட்சி ஆதரிக்கிறது. இம்முறைக்கே அரசாங்கத்தின் கொள்கைகள் ஊக்கமளிக்க வேண்டுமெனக் கருதுகிறது.

இறைவனுக்கும் அவனிலின்று பிரிந்து உண்டான பொருள்களுக்கும் ஒரு தொடர்பு இருந்தே வருகிறது. அதுவே இறைப் பற்று: தெய்வபக்தி. அந்த இயற்கை வேகத்தைப் புறக்கணித்தோமானால் மனோ வியாதிகள் வந்து சேரும். ஆண்டவன் அவசியமில்லை என்று சொல்லி நன்றாகவே இருப்பவர்கள் உண்டு — சிலர் விவாகமில்லாமல் தனிக்கட்டையாக இருப்பது போல். பழைய சொத்து இருக்கும் வரையில் சம்பாதிக்காமல் இருக்கலாம். தானாகவே யோக க்ஷேமம் நடைபெறும். கொஞ்ச காலத்துக்குப் பிறகு அனர்த்தம்தான்!

—ராஜாஜி

## ஏகபோக உரிமை கூடாது

36. சர்க்காரிடமும் சரி, சுதந்திரமாகவுள்ள தனியார் துறையிலும் சரி ஏகபோகத் தொழிலுரிமையையும் அதிகாரக் குவிப்பையும் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது. அவசியமேற்படும் போதெல்லாம் ஏகபோக உரிமைக்கு விரோதமான சட்டங்கள் செய்வதற்கு அது ஆதரவு தரும். வர்த்தகத்தின் சில துறைகளில் ஏகபோக உரிமை பெற்றுள்ள ராஜாங்க வர்த்தகக் கார்ப்பரேஷன், ஆயுள் - இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன், ராஜாங்க போக்குவரத்துக் கார்ப்பரேஷன்கள், ஆலைக் குழுக்கள் ஆகிய சர்க்கார் கார்ப்பரேஷன்கள் தற்போது அநுபவித்து வரும் ஏகபோக உரிமைகளுக்கு அது முடிவு காணும்.

37. சர்க்காரும், சுதந்திரமுள்ள தனியாரும் இரு இயற்கையான சகாக்களாக ஒட்டி நின்று சமுதாய சேவையில் ஈடுபடும் கலப்புப் பொருளாதாரத்தை நம்புகிறது சுதந்திரக் கட்சி. இந்தக் கலப்புப் பொருளாதாரமே ஜீவனுடன் இடைவிடாது வளர்ச்சி பெறுவது. தனியார், சர்க்கார் இரு துறைகளும் ஒரே விதமான வாய்ப்புக்களைப் பெற்றுப் போட்டியிட்டு, பலனைக் காட்ட வேண்டுமென்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை. எவ்வளவு அதிகமாக இயலுமோ அவ்வளவுக்குப் போட்டி; எவ்வளவு குறைவாக இயலுமோ அவ்வளவுக்கே கட்டுப்பாடுகள் - இதுவே அதன் குறிக்கோள்.

38. அரசியல் தலையீட்டுக்கு உட்படாத சட்ட பூர்வமான குழுக்களின் மேற்பார்வையின் கீழும், வர்த்தக முறை நிர்வாகத்திலும் சர்க்கார் நிறுவனங்களை அமைத்து அவற்றின் தரத்தைச் சுதந்திரக் கட்சி உயர்த்தும்.

## திட்டம் - எம்முறை வேண்டும்?

39. திட்டக் கமிஷனைப் பற்றிப் பிரமாதமாகப் பேசப்படுகிறது. உண்மையில் இதன் போக்கு சர்க்காருக்கும் மேம்பட்ட, பொறுப்பற்ற ஒரு மகா சர்க்காரைத் தோற்றுவிப்பதாகவே இருக்கிறது. சுதந்திரக் கட்சி இத் திட்டக் கமிஷனைக் கலைத்துவிடும்; பார்லிமெண்டுக்கு அதன் உண்மையான, செயல் திறனுள்ள தலைமை அதிகாரத்தை மீண்டும் பெற்றுத்தரும். இதனால் அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு அடங்காத திட்டக் கமிஷனின் உத்தரவிலிருந்து மத்திய, ராஜ்ய சர்க்கார் நிர்வாகங்களை விடுவிக்கும்.

40. திட்டப் பொறுப்புக்களை மையப்படுத்திக் கீழ் மட்டங்களைவிட உச்சியிலேயே எல்லாப் பளுவையும் ஏற்றி வைக்கும் சோவியத்முறையே இன்றையதிட்ட அமைப்பில் காணப்படுகிறது. அடைய முடியாத இலக்குகளை இது உள்ளடக்கியுள்ளது. இது காரணமாகச் சகிக்க முடியாத கட்டுத் திட்டங்கள் ஏற்பட்டுள்ளன. இந்தக் கட்டுப்பாடுகள் அதிகாரத்திலுள்ள கட்சியே ஆட்சியில் நீடிப்பதை நோக்கமாகக் கொண்டவை. இந்தத் திட்ட முறையைச் சுதந்திரக் கட்சி மறுத்து விலக்குகிறது. அரசியல் சட்டம் உத்தரவாதமளித்துள்ள சுதந்திரங்களை மீறுதவாறே திட்டங்கள் வகுக்க வேண்டும். மக்களின் வினைத் திறன் கட்டுப்பாடுகளின்றி, பூரணமாகப் பயனளிப்பதற்கேற்ற சூழ் நிலையை வளர்க்கும் திட்டங்களே முறையானவை என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. பார்லிமெண்டுக்கும், அதன் வழியே மக்களுக்கும் கடமைப்பட்ட மந்திரி சபைதான் நாட்டின் முன்னேற்றத்துக்கான இவ்விதத் திட்டங்களை வகுப்பதற்கும், வருடாந்திர நடவடிக்கைகளை வகுத்துத் தேசத்துக்கு அளிக்கவும் தகுதி வாய்ந்த ஸ்தாபனம் என்று அது நம்புகிறது. சர்க்காரானது ஆலோசனைகளுக்காக நிபுணர்களை நாடலாம்; எனினும் நாட்டு வாழ்வைப்பற்றிய கொள்கைகளை உருவாக்கும் அதிகாரத்தை அதனிடமிருந்து வேறெந்த ஸ்தாபனமும் பறிக்கலாகாது என்கிறது சுதந்திரக் கட்சி.

### ஏற்றுமதிகள்

41. இந்தியா அதன் ஏற்றுமதிகளைப் பெருக்கவேண்டியது மிகவும் அவசியமாகும் என்பதைச் சுதந்திரக்கட்சி தயங்காமல் ஒப்புக் கொள்கிறது. ஆனால், உள்நாட்டுக்குத் தேவைப்படும் பண்டங்களை நிர்ப்பந்தத்தின் மீது ஏற்றுமதி செய்து, வசதிக் குறைவையும் இன்னலையும் விளைவிக்கும் கொள்கையை அது எதிர்க்கிறது. உற்பத்தித் திறன் அதிகரித்து, குறைந்த செலவிலேயே திறமையாக உற்பத்தி செய்தால்தான் நம்முடையபொருள்கள் உலகச் சந்தைகளில் போட்டியிட முடியும். சுதந்திரக்கட்சி இதற்கேற்ற கொள்கையைக் கடைப்பிடித்து ஏற்றுமதியைப் பெருக்கும்.

### அந்நியக் கடன்கள்

42. சர்வதேச சமாதானம் என்ற மெல்லிய இழையில் ஊசலாடும் அந்நியஉதவிகளை நம்பித்தான் காங்கிரஸின் திட்ட அமைப்பு உருவாகியுள்ளது. இந்த இழை எந்த நிமிடமும் அறுந்து போகக் கூடும். கடன்களை அடைக்கும் வகையில் ஏற்றுமதியைப் போதிய அளவுக்குப் பெருக்குவதற்கான திட்டமோ, அறிகுறியோ சிறிதும் இல்லாமல் அந்நிய நாடுகளிலிருந்து ஏராளமாகக் கடன் வாங்கும் கொள்கையைச் சுதந்திரக்கட்சி முற்றிலும் எதிர்க்கிறது. தேசத்தின் புகழுக்குப் பங்கம் ஏற்படக் கூடாதென்பதற்காக இந்த விசனிக்கத்தக்க போக்கைத் தடுத்து நிறுத்த சுதந்திரக் கட்சி இயன்ற அளவு முயற்சி செய்யும். இந்தியாவிலுள்ள தனி நபர்களின் நிறுவனங்களில் அந்நியர்கள் முதலீடு செய்வதற்குச் சுதந்திரக் கட்சி ஆதரவும், ஊக்கமும் தரும். இந்த ஏற்பாடு விரைவில் தொழிலபிவிருத்தி ஏற்பட உதவும். (தொடரும்)



## 6 - காலாந்தகன் கொலை

எதிரே வந்து நிற்கிற பகைவனிடமிருந்து வெம்மையைத் தாங்கிக் கொள்ள முடியாமல் உடனே வேர்த்து விதிர்விதிர்க்கும்படியான சோர்வை அடைந்தாலும் அந்த வெம்மையில் அப்போதே அழிந்து விடாமல் தாங்கிக் கொண்டு நிற்க வேண்டும். அப்படி நிற்பதுதான் திண்மை என்று எண்ணித் தம்மைத்தாமே திடப்படுத்திக் கொள்ள முயன்றும் பயந்து பயந்து பழகிவிட்ட காரணத்தால் வழுக்கு மரம் ஏறினாற் போல் இடையிடையே தாம் மேற்கொண்டிருந்த உறுதியைப் பற்றிக் கொள்ள முடியாமல் கீழே நழுவினார் பெருநிதிச் செல்வர்.

பொள்ளென ஆங்கே புறம் வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்பர் ஒள்ளி யவர்

என்ற அரசியல் நூல் நுணுக்கம் நினைவு வந்து மனத்தைப் பலப்படுத்தியும் கூட அரிய முயற்சியின் பேரிலேயே எதிரியின் கோபத்தை அவரால் அலட்சியம் செய்ய முடிந்தது. எரிகின்ற நெருப்பு மலையொன்று கனன்று கொண்டே வந்து எதிரே நிற்பதுபோல் நிற்கும் நகைவேழம்பரைக் கண்டு அவருடைய அந்தக் கோபத்தை எப்படி வரவேற்று ஒடுக்குவதெனச் சிந்தித்தார் பெருநிதிச் செல்வர். எந்த வகைக் கோபத்துக்காக அதை எதிரே காணும்போதே வேர்த்து விதிர் விதிர்க்கக் கூடாதோ அந்த வகைக் கோபம்தான் அது! பின்னால் ஏற்ற சமயம் வரும்போதுதான் அந்தக் கோபத்துக்காக வேர்க்க வேண்டும்—என்று பொருள் நூல் சிந்தனைகளைத் தனக்கு அரணாக ஏற்படுத்திக் கொண்டு பாதிப் பயமும் பாதித் துணிவும் கலந்த நிலையில் பெருநிதிச் செல்வர் எதிராளியைப் பார்த்துச் சிரிக்க முயன்றார். தம்முடைய சிரிப்பு எதிரியின் முகத்தில் எந்தவிதமான விளைவையும் ஏற்படுத்தவில்லை என்று கண்டதும் களத்தில் வெற்றியும் இன்றி வீர மரணமும் எய்தாமல் உயிரோடு தோற்றுப் போய் நிற்பது போல் தாமும் அப்போது தயங்கி நிற்பதாக உணர்ந்தார் அவர். அவருடைய சிரிப்பு நகைவேழம்பரின் சினத் தீயை ஆற்றுவதற்குப் பதில் வளர்த்தது.

"என் கேள்விக்கு நீங்கள் இன்னும் பதில் சொல்லவில்லை. என்

# மணிபல்லவம்



நா. பார்த்தசாரதி

நெஞ்சின் சூடு விநாடிக்கு விநாடி வளர்கிறது. எதையாவது உடனே அழித்தொழிக்க வேண்டும் என்று என் கைகள் கறுகின்றன. என் எதிரே வந்து நின்று கொண்டு நீங்கள் சிரிக்கிறீர்கள்!''

''முதலில் உங்கள் கோபத்தை அழித்தொழியுங்கள்! இப்போது உடனடியாக நீங்கள் அழிக்க வேண்டிய பொருள் அதுதான். தனக்குத் தோல்வி வருகிறபோது கோபப்படுகிறவன் உண்மையான பலசாலியில்லை. நம்முடைய வாயிலின் வழியே தோல்வியும் கோபமும் சேர்ந்து உள்ளே நுழைகிற போது தோல்வியை மட்டும் அழைத்துக் கொண்டு கோபம் உள்ளே புகுவதற்கு முன்னாலேயே கதவை அடைத்து விட வேண்டும். இரண்டையுமே சேர்த்து உள்ளே வரவேற்றுக் கொண்டால் அதற்காகப் பின்னால் வேதனைப்பட நேரும். வெற்றியின் போது வெளிப்படையாக மிதமிஞ்சிய மகிழ்ச்சி கொள்வது எப்படிக் கெடுதலோ, அப்படியே தோல்வியின்போது கோபப்படுவதும் கூடக் கெடுதல்'' என்று தம் நிலையை உயர்த்திக் கொண்டது போல் பாவித்துக் கொண்டு தமது இயல்போடு ஒட்டாத அறிவுரையைப் போலியாகக் கூறினார் பெருநிதிச் செல்வர். ஆனால் மனத்திலிருந்து சுயமாக எழாத அந்தப் போலி அறிவுரையாலும் எதிராளி வந்து நிற்கும் வேகத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. வலையில் சிக்காமல் திமிறிக் கொண்டு வலையையே அறுக்க முயலும் முரட்டு மீனைப் போல் கட்டறுத்துக் கொண்டு மீறும் உணர்ச்சிகளோடு நின்றார் நகைவேழம்பர்.

''ஐயா! பெருநிதிச்செல்வரே! மன்னிக்க வேண்டும். நீங்கள் உண்மையை மாற்றிச் சொல்லுகிறீர்கள். இது என்னுடைய தோல்வி அல்ல. உங்களுடைய தோல்விதான். நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால் புரிந்து கொள்வீர்கள்.''

''அது எப்படி?''

''அந்த மணிபல்லவத்துக் கப்பலைத் துரத்திக் கொண்டு சென்று நடுக் கடலில் தீ வைத்து மூழ்கச் செய்து விடுமாறு கூறி நீங்கள் என்னை அனுப்பிய போது உள்ளூற என்ன நினைத்துக் கொண்டு அனுப்பினீர்கள் என்கிற இரகசியத்தை இப்போதாவது என்னிடம் சொல்லுவீர்களா?''

''அதில் உங்களுக்கும் எனக்கும் தெரியாத புது இரகசியம் வேறு என்ன இருக்கிறது?''

''இல்லை என்றுதான் நீங்கள் சொல்வீர்கள். ஆனால் இருக்கிறது. இருப்பதாக நான் புரிந்து கொண்டேன்.''

''நீங்கள் புரிந்து கொண்டதைச் சொல்லுங்களேன்.''

''நான் துரத்திக் கொண்டு போன படகு நிறையக் கற்பூரத்தைக் குவித்திருக்கிறீர்கள். படகோட்டியும் அதை என்னிடம் கூறவில்லை. நான் படகிலிருந்து தீப்பந்தங்களை வீசும்போது கப்பலில் இருந்து எதிரிகள் பதிலுக்கு நெருப்பிட்டால் என் படகு பற்றி எரிந்து நான் மாண்டு போய் விட வேண்டும் என்பதுதானே உங்கள் இரகசியத் திட்டம்? ஆனால் நான் நீங்கள் திட்டமிட்டு நினைத்தபடி மாண்டு போகவில்லை. தீக்காயம் பட்டுச் சிதைந்த படகின் மரச் சட்டத்தைப் புணையாகப் பற்றிக் கொண்டு மிதந்தும் நீந்தியும் அரும்பாடு பட்டுக் கரை சேர்ந்து விட்டேன். இது என் உயிருக்கு வெற்றி. உங்கள் முயற்சிக்குத் தோல்வி. அண்மையில் சில ஆண்டுகளாக நீங்கள் என்னை ஒழித்து விட முயலும் சந்தர்ப்பங்கள் அதிகமாகிக் கொண்டே வருவதை நானும் உணர்கிறேன்.''

''ஒருபோதும் அப்படி இல்லை! நீங்கள் தப்புக் கணக்குப் போடுகிறீர்கள், நகைவேழம்பரே!......''

''புதிதாகத் தப்புக் கணக்குப் போட வில்லை. தொடக்கத்திலிருந்தே நாம் தப்பாகத்தான் கணக்குப் போட்டுக் கொண்டு வருகிறோம், ஐயா! தொடக்கத்திலேயே தப்பாகத் தொடங்குகிற கணக்கில் முடிவுவரை தப்புக்கள் பெருகிக் கொண்டுதான் இருக்கும்.''

''இந்தப் பேச்சுக்கு அர்த்தம்?''

''பழைய அர்த்தந்தான். புதிதாக ஒன்றும் இல்லை. நாம் ஒருவரையொருவர் நம்பவில்லை. நம்புவதாக நடிக்கிறோம். இருவரும் தனித்து வாழ முடியாது. சேர்ந்து வாழ முயல்கிறோம். அதுவும் முடியாது போலிருக்கிறது.....''

''ஏன் முடியாது என்று நினைக்கிறீர்கள்?''

''அதற்கான அறிகுறிகள் உங்களிடமிருந்து தென்படுகின்றன. நான் ஒவ்வொரு கணமும் உங்களைக் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன். என் சந்தேகம் சிறிது சிறிதாக வளர்கிறது.''

''சந்தேகம் என்பது கண்ணாடியில் முகம் பார்ப்பதைப் போல. நீங்கள் எந்த உணர்வோடு நிற்கிறீர்களோ அதுதான் எதிரேயிருந்து உங்களுக்குத் தெரிகிற உணர்வாகவும் இருக்கும். நீங்கள் என்னைச் சந்தேகப்படுவதாகத் தோன்றினால் அதே உணர்வுதான் எதிரேயிருக்கிற என்னிடமிருந்தும் உங்களுக்குத் தெரியும்! சீனத்துக் கப்பலில் இருந்து

பண்டம் இறக்கிக் கொண்டிருந்த படகில் உங்களை அனுப்பியபோது நீங்கள் எந்தக் கப்பலை அழிக்க வேண்டும் என்று அனுப்பப்பட்டீர்களோ அந்தக் கப்பலை அழித்து விட்டுச் சுகமாகத் திரும்பி வருவீர்கள் என்ற நல்ல எண்ணத்தோடு தான் உங்களை அனுப்பினேன் நான். வேறு எந்தக் கெட்ட நினைப்பும் உங்களைப் பொறுத்தவரை எனக்குக் கிடையாது. நீங்கள் இப்போது திரும்பி வந்திருக்கிற கோலத்தையும் கோபத்தையும் பார்த்தால் உங்கள் படகு தீப் பற்றிக் கவிழ்ந்த பின் துன்புற்று நீந்தி வந்திருப்பதாகத் தெரிகிறது. நீங்கள் உயிர் பிழைத்து வந்திருப்பதால் மகிழ்ச்சியும், உங்களுக்கு நிறையத் துன்பங்கள் ஏற்பட்டிருப்பதனால் வருத்தமும் அடைகிறேன் நான். காரணமின்றி நீங்கள் என்மேல் கோபமும், சந்தேகமும் கொள்வதைப்பற்றி அநுதாபமும் அடைகிறேன், நகைவேழம்பரே!''

''நீங்கள் இப்போது அடைகிற மகிழ்ச்சி, வருத்தம், அநுதாபம் எல்லாம் மெய்யானவைதாமா என்று நினைக்கிறேன். காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்காக அவ்வப்போது ஏற்படுகிற சந்தர்ப்ப உணர்வுகளில் இவையும் சேருமானால் நான் இவற்றை நம்பிப் பயனில்லை.''

''நம்பிக்கையை ஏற்படுத்திக் கொள்வதற்கு ஒரேவழி அவநம்பிக்கைப்படாமல் இருப்பதுதான் என்று இருகாமத்தினை ஏரியருகே காமன்கோட்டத்தை ஒட்டியிருந்த நாணற் படுகையில் பல நாட்களுக்கு முன்பு நீங்களே கூறியது உங்களுக்கு மறந்து போய்விடவில்லையே?''

—இவ்வாறு பெருநிதிச்செல்வர் கேட்டபோது இந்தக் கேள்வியால் நகைவேழம்பரின் மனத்தில் எந்த உணர்வு கிளர்ந்ததோ தெரியவில்லை! குபீரென்று நெருப்புப் பற்றினாற் போல் மீண்டும் முதலில் அங்கு வந்து நுழைந்த போதிருந்த சீற்றத்தை அடைந்தார் அவர். ஆத்திரத்தில் நெடு நேரமாகச் சொல்வதற்குத் தயக்கப்பட்டுக் கொண்டிருந்த செய்தி ஒன்றை உடனே சொல்லி விடும் துணிவு வந்து விட்டாற் போல அப்போது பேசலானார் நகைவேழம்பர்:

''நினைவூட்டக் கூடாத நிகழ்ச்சியை இப்போது உங்களுக்கு நினைவூட்டுகிறேன்! இனி நான் பொறுமையிழந்து விட்டேன். எனக்கு அந்தப் பயங்கரமான இரவு நினைவு வருகிறது. நீங்களும் நினைத்துக் கொள்ளுங்கள். எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த நிகழ்ச்சியானாலும் நினைக்கும் போது இன்றே நடந்தது போல் குடல் பதற வில்லையா உங்களுக்கு? சக்கரவாளக் கோட்டத்து வன்னி மன்றத்துக்குப் பின்னால் உள்ள கொடி வழியில் பல ஆண்டுகளுக்கு முன்னால் பேரிருட் பக்கமாகிய கிருஷ்ணபட்சத்து அமாவாசை இரவில் அரும்பு மீசையும் புன்னகை வடியும் முகமுமாக வந்து நின்ற காலாந்தகனை எப்படித் துடிக்கத் துடிக்கக் கொலை செய்தோம் என்பதை நினைக்கும் போது உங்களுக்கு உடல் சிலிர்க்கவில்லையா? வன்னி மன்றத்துக்கு அப்பால் கொடி வழியின் அருகே கொன்றைப் புதருக்குள் யாரையோ பிடித்து அறையக் காத்திருப்பது போல் பாய்ந்து கொண்டு நிற்கும் அந்தப் பூதச் சிலையின் கீழே பைரவிப் பேய் மகள் ஒரு கையையும் நான் ஒரு கையையும் பற்றித் திமிற விடாமல் காலாந்தகனை அடக்கிக் கொண்ட போது ஆந்தையும் கோட்டானும் அலறிய அலறலில் அந்த உயிரின் அலறலும் கலந்து கேட்டு ஒடுங்கும்படி நீங்கள் என்ன செய்தீர்கள் என்பதை இந்தக் கணத்தில் நினைத்துப் பாருங்கள்! கொன்றைப் புதரின் பள்ளத்தில் நின்ற போதும் பூதச் சிலையின் முழங் கால் வரை உயரமாயிருந்த அந்தக் கம்பீரமான ஆணழகனை அழிப்பதற்காக அவன் கழுத்தும் பிடரி உங்கள் கைக்கு எட்ட வேண்டும் என்று நீங்கள் பூதச் சிலையிருந்த மேடையில் அதன் பீடம் வரை ஏறி நின்று கொண்டு உங்களுடைய கைகள் நடுங்கவும் அவனுடைய உடம்பில் உயிர் துடிதுடிக்கவும் செய்தீர்களே; அதே காரியத்தை உங்களுக்கு நானே செய்து விடும்படி நேர்ந்த சமயங்களில் எல்லாம் 'இப்போது வேண்டாம். பின்னால் இன்னும் நல்ல சமயம் வரும்' என்று எண்ணி எண்ணித் தள்ளிக் கொண்டே வந்திருக்கிறேன் நான்! கதிரவன் உதயமாகிற இந்த வைகறை வேளையில் இதைக் கேட்டு ஏன் இப்படி நடுங்குகிறீர்? சக்கரவாளக் கோட்டத்துக் கொன்றைப் புதருக்கும், அந்தப் பூதச் சிலைக்கும் வாயிருந்தால் காலாந்தகன் துடிதுடித்து இறந்த வேதனையை இன்னும் உலகத்துக்குச் சொல்லுமே? பைரவியும், நானும், உயிருள்ளவர்களாயிருந்து அந்தக் கொலைக்கு ஒத்துழைத்து விட்டு இப்போது சொல்லவும் முடியாமல் மறக்கவும் முடியாமல் வார்த்தைக்குக் கட்டுப்பட்ட ஊமைகளாய் நிற்கிறோம்.. நீங்களோ எனக்கு நம்பிக்கையையும், நிதானத்தையும் பற்றி இன்றைக்கு உபதேசம் செய்து கொண்டிருக்கிறீர்கள்..''

காலாந்தகன் கொலையைப் பற்றி நகைவேழம்பர் வாயிலாகக் கேட்க நேர்ந்த போது பெருநிதிச் செல்வர்

தீக் குழியில் நிற்பது போல் வெந்து வேர்த்து நடுங்கினார். சற்றுமுன் யாருடைய முன்னிலையில் வேர்க்க லாகாது என்று அவர் எண்ணி னாரோ, அது இயல வில்லை. குரலி லும் அந்த நடுக்கம் தோன்றி அவர் மெல்லப் பேசினார்.

''அன்றைக்கு அந்த இரவில் காலாந் தகனைக் கொன்றிருக்க வில்லையானால் இன்றைக்கு நீங்களும், நானும், பைரவி யும் எமபுரியில் இருப்போம்.''

''நான் சொல்ல வந்தது அதற் கல்ல, பெருநிதிச்செல்வரே! காலாந்தக னுக்கு நீங்கள் நடத்திய 'உபசாரத் தையே' உங்களுக்கும் நான் செய்ய அதிக நாழிகை ஆகாது. நானும், பைரவி யுமே அதைச் செய்வதற்குப் போதும்'' என்று நகைவேழம்பர் சுடச்சுடச் சொல் லிய போது அவர் தன்னைச் செய்வதாகச் சொல்லியதையே உடன் செய்து விட் டது போல் இருந்தது பெருநிதிச் செல்வ ருக்கு. 'காலாந்தகன் — காலாந்தகன்' என்று நெருப்பை நாவினால் தீண்டுவது போல் அந்தப் பெயரை வாய்க்குள்ளே முணுமுணுத்துக் கொண்டே அப்படி முணுமுணுக்கும் ஒவ்வொரு முறையும் தன் நெஞ்சில் தானே கத்தியால் குத்திக் கொள்வது போல் வலிகண்டு துடித்தார் பெருநிதிச்செல்வர்.

# 7-வசந்தமாலையின் தந்திரம்

''உங்கள் தந்தையார் கடற் பய ணத்திலிருந்து திரும்பி வந்து விட்டார் போலிருக்கிறதம்மா!. கீழே அவருடைய பேச்சுக் குரல் கேட்கிறது'' என்று வசந்தமாலை அன்று சாயங்காலம் கூறிய போது சுரமஞ்சரி தான் அதற்காக எந்த விதமான மனக் கிளர்ச்சியும் அடைந்த தாகக் காண்பித்துக் கொள்ளவில்லை. அதைக் கேட்காதது போலவே இருந்து விட்டாள். ஒளி சாய்ந்து இருட்டத் தொடங்கியிருந்த பொழுதாகையால் தலைவியின் முகத்தையும் அப்போது வசந்தமாலையால் பார்க்க முடியவில்லை. தோழி மறுபடியும் பேச்சுக் கொடுத் தாள். ''தந்தையாரோடு கூடப் போயிருந்த நகைவேழம்பர் திரும்பி வரவில்லையாம் அம்மா! தந்தையார் மட்டும் மிகவும் களைப்போடு திரும்பி வந்திருக்கிறாராம். வழக்கமாக வந்து போகிற பணிப்பெண் தான் இதை யும் சொன்னாள். நெடுந்தொலைவு கடற்பயணம் செல்லும்போதெல்லாம் இருவரும் சேர்ந்து போவதைப் போல் திரும்பும் போதும் சேர்ந்தே திரும்பி வருவார்கள். இந்தப் பயணத்தின் போது முதல் முறையாக இன்றுதான் அந்த வழக்கம் மாறியிருக்கிறது. உங்கள் தந்தையார் மட்டும் தனியே திரும்பி வந்திருக்கிறார்! பல நாட்களுக்குப் பின்பு பெருமாளிகையில் மீண்டும் அவருடைய குரல் தனியாகக் கேட்கிறது.''

''போதுமம்மா வசந்தமாலே! இவர்கள் இரண்டு பேரையும் தவிர வேறு யாரை யாவது நல்லவர்களைப் பற்றிச் சிறிது நேரம் பேசு. குழப்பங்களையும், கவலை களையும் உண்டாக்கும் மனிதர்களைப் பற்றியே எல்லா நேரங்களிலும் பேசிக் கொண்டிராதே!'' என்று வேதனை யோடு சலித்துக் கொண்டாள் சுர மஞ்சரி. தலைவியின் இந்த வார்த்தை களில் இருந்த கசப்பை உணர்ந்தபின் சிறிது நேரத்துக்குத் தான் எதுவுமே பேசாமல் மௌனமாக இருந்துவிட்டால் தான் நல்லது என்று உணர்ந்தாள் வசந்தமாலை.

ஒரு நோக்கமுமின்றி மாடத்தின் முன் புறமாகப்போய் மின்னத் தொடங்கி யிருந்த வானத்து நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள் சுரமஞ்சரி. சற்றைக்கெல்லாம் ஏதோ நினைவு வந்ததுபோல் நினைத்துக் கொண்டவள் போலத் தோழி யிடம் மறுபடியும் திரும்பி வந்து அவளே பேசலானாள்.

''வசந்தமாலே! ஒரு காரியம் எனக்கு மறந்தே போயிற்று. முதல் வேலையாக ஐம்படை அணிகளும் கோத்த இந்தப் பொன் ஆரத்தை ஊன்றுகோலின் குழ லில் இட்டு யாளி முகப் பிடியையும் திருகிக் கீழே கொடுத்து அனுப்பி விடு. தந்தையார் ஊர் திரும்பி விட்டார். இந்தப் புதிர் இங்கே இருக்கிற வரை நமக்கு நிம்மதியில்லை. தந்தையார் கடற் பயணம் போன மறு நாளிலிருந்து இன்று வரை நானும், நீயும் எப்படி யெப்படி யெல்லாமோ முயன்று சிந்தித்துப் பார்க் கிறோம். நமக்கு இதில் அடங்கியிருக் கும் உண்மை விளங்கவில்லை. இந்த ஐம்படைத் தாலி யாருடையது? இதை ஊன்றுகோலில் இட்டு வைத்திருக்க வேண்டிய காரணம் என்ன என்று நமக் குப் புரியவே இல்லை. என் தந்தையாருக்கு மக்களாக வாய்த்த நாங்கள் இருவருமே பெண்கள். பெண் குழந்தைகளுக்கு இந்த ஐம்படை ஆரத்தைக் காப்பாகக் கட்ட மாட்டார்கள். பொன்னும், மணியும், முத்துமாக இந்த மாளிகை

முழுவதும் செல்வம் இறைந்து கிடக்கிறது. இவ்வளவு பெரிய செல்வக் குவியலின் மேல் வீறுடன் நிமிர்ந்து நிற்கிற என் தந்தைக்கு இந்தச் சின்னஞ்சிறு பொன் ஐம்படைத் தாலியை இப்படிப் பாதுகாத்து ஒளித்து வைத்துப் போற்ற வேண்டிய அவசியம் என்னவென்பதுதான் எனக்குப் புரியவில்லை.''

''ஒன்றா, இரண்டா? இப்படிப் புரியாதனவை எத்தனையோ? ஆனால் இதைப் பற்றிப் புரிந்து கொள்ள மட்டும் நாம் ஆவல் காட்டுவது பொருத்தமானதுதான் அம்மா! இந்த ஊன்றுகோலை உங்கள் தந்தையார் இங்கே வைத்ததிலேயே நமக்குப் பலவிதமான சந்தேகங்கள். தற்செயலாக இதன் பிடி கழன்ற பின்போ இன்னும் பல புதிய சந்தேகங்கள். இதைப் பற்றி வலுவில் நாம் முயற்சி செய்யாமலே நமக்குச் செய்திகள் தெரிய வேண்டுமானால் அதற்காக ஒரு தந்திரம் செய்யலாம்'' என்று வசந்தமாலை கூறியவற்றில் கரமஞ்சரி அக்கறை கொள்ளாதவள் போல மறுத்து விட்டாள்.

''நாம் ஒரு தந்திரமும் செய்ய வேண்டாம்! மற்றவர்கள் தந்திரத்துக்கு நாம் ஆளாகித் தவிப்பதே இன்னும் ஏழு பிறவிக்குப் போதுமடீ! நம்முடைய தந்திரத்துக்கும் வேறு சிலர் ஆளாகித் தவிக்க வேண்டாம். தந்திரங்களால் வருகிற குழப்பங்களையும், துன்பங்களையும் பார்க்கும் போது இந்த உலகத்தில் கடவுள் எல்லா மனிதர்களையும் வெள்ளை மனம் கொண்டவர்களாகவே படைத்திருக்கக் கூடாதா என்றுதான் தோன்றுகிறது. மறு பேச்சுப் பேசாமல் அந்த ஐம்படை ஆரத்தை ஊன்றுகோலின் உள்ளே முன்பு இருந்ததைப் போலவே இட்டுப் பிடியையும் நன்றாகத் திருகி யாராவது பணிப்பெண் இங்கு வருகிற போது கொடுத்துத் தந்தையாரிடம் சேர்க்கச் சொல்லி விடு. இது இங்கிருந்து போனாலே நம்மைப் பிடித்த தொல்லை முக்கால் பங்கு தீர்ந்தது போலத்தான்.''

தன்னுடைய தலைவியின் குரலில் இருந்த கண்டிப்பு வசந்தமாலையையே வியக்கச் செய்தது. ஆனால் அவள் தன் வியப்பை மறைத்துக் கொண்ட குரலில் பேசினாள்: ''அதற்கில்லை, அம்மா! செல்வக் குவியலின் மேல் நிமிர்ந்து நிற்கும் உங்கள் தந்தையார் கேவலம் இந்தச் சின்னஞ்சிறு பொன் ஆரத்தை ஒளித்துப் பாதுகாப்பதன் காரணம் விளங்கவில்லை என்று சற்றுமுன்னால் நீங்களே மருண்டீர்களே? உங்களுடைய அந்த மருட்சியைப் பார்த்துத்தான் இதன் காரணம் விளங்குவதற்கு நாம் ஏதாவது தந்திரம் செய்யலாமா என்று கேட்டேன்.''

''அவசியமில்லை! தந்திரத்தால் வாழ்பவர்களைப் பார்த்து வியந்து கொண்டே நாமும் தந்திரத்தில் இறங்குவது நியாயமாகாது. இந்த மாளிகையின் வாழ்க்கையைப் பார்த்துச் சில சமயங்களில் நான் பயப்படுகிறேன். சில சமயங்களில் நான் வியக்கிறேன். வேறு சில சமயங்களில் நான் எனக்குள்ளேயே சிரிக்கிறேன். அதுவும் முடியாத போது புத்தரைப் போல் மனத்துக்குள்ளேயே அழுகிறேன். இதற்கெல்லாம் காரணம் தேடி அலைவதற்குத் தந்திரங்கள் செய்யத் தொடங்கினால் நாம் செய்ய வேண்டிய தந்திரங்கள் நூற்றுக் கணக்கில் இருக்கும். வசந்தமாலை! நானும் சமயஞானம் தத்துவ ஞானம் எல்லாம் கற்காமல் போனது எவ்வளவு பெரிய தவறு தெரியுமா? அவற்றையெல்லாம் கற்றிருந்தால் இளங்குமரனைக் காதலிக்க முடியாவிட்டாலும் அவருடைய எதிரியாயிருந்து வாதம் புரிகிற பாக்கியமாவது எனக்குக் கிடைத்திருக்கும் என்று இப்போது தோன்றுகிறது. ஒருவருக்கு நல்ல நண்பர்கள் கிடைப்பதைப் போல நல்ல எதிரிகள் கிடைப்பதும்கூடத் தவப் பயன்தான். இராவணனுக்கு இராமன் கிடைத்தது போல் கல்யாண குணங்கள் நிரம்பிய அழகிய எதிரியை அடைவதும் முற்பிறவியின் நற் பயன் போலும். காதலராக அடைய முடியாது தவிப்பதற்குப் பதில் நான் இளங்குமரனை எதிரியாகவாவது அடைந்திருக்கலாம். ஆயிரம் குரூரமான நட்பையும், அழகில்லாத உறவையும் பெறுவதை விட ஓர் அழகிய எதிரி கிடைப்பது மிகப் பெரும் பாக்கியமென்று நினைக்கிறேனடீ. வசந்தமாலை! உனக்கு என்ன தோன்றுகிறது?''

''இப்போது நீங்கள் சொல்வது நியாயம் என்று மட்டும் தோன்றுகிறது.''

''மெய்யாகத்தான் சொல்லுகிறாயா, வசந்தமாலை! நான் பித்துக் கொண்டு விட்டேனோ என்று என் மேல் சந்தேகப்பட்டு என் பேச்சுக்கு மாறுபடாமல் என்னோடு ஒத்துப் பாடுகிறாயா?''

''இல்லை! இல்லை! மெய்யாகவே தான் சொல்லுகிறேன், அம்மா!''

தலைவியிடம் பதில் பேசிக் கொண்டே முன்புறம் வந்து கீழே வீதியைத் தற்செயலாகப் பார்த்த வசந்தமாலை அங்கே அந்த வழியாக அப்போது நடந்து போய்க் கொண்டிருந்த இருவரைச் சுட்டிக் காட்டி, ''அதோ பாருங்கள்'' என்று தலைவியிடம் கூறினாள். கரமஞ்சரி முன்னால் வந்து அவர்களைப் பார்த்ததும் வியந்தாள்.

(தொடரும்)

## வலிகளையும் நோவுகளையும் போக்க

# ஸாரிடான் சாப்பிடுங்கள்







**ஒரே வில்லை போதும்**

ஒரு வில்லை 13 நயா பைசா

ஸாரிடான் வலிகளிலிருந்தும் நோவுகளிலிருந்தும் விரைவில் நிவாரணமளிக்கிறது. அது மூன்று விதங்களில் வேலை செய்கிறது: நிவாரணமளிக்கிறது, தெம்புடனிருக்கச் செய்கிறது, புத்துணர்ச்சியளிக்கிறது. தலைவலி, பல்வலி, ஜுரம் போன்ற உணர்ச்சி, தேக அசௌக்கியம் முதலானவைகளுக்கு ஸாரிடான் சாப்பிடுங்கள். ஸாரிடான் விரைவில், சிறிதும் அபாயமின்றி வேலை செய்கிறது. பெரியவர்களுக்கு ஒரு ஸாரிடான் வில்லை பூர்த்தியான டோஸ். குழந்தைகளுக்கு ¼ முதல் ½ வில்லை வரை போதுமானது.

'ரோஷ்' தயாரிப்பு

JWT-YT-2000 ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்

# நாளும் கோளும் என் செய்யும்?

## ஸ்ரீ காமகோடி பெரியவர்கள் அவா

வருகிற தை மாதம் 21-ந் தேதி முதல் 23-ந் தேதி முடிய எட்டு கிரஹங்கள் மகர ராசியில் கூடுவதால் ஏற்படக்கூடிய பலவித இன்னல்களைத் தவிர்க்கக் கீழ்க்கண்ட ஏற்பாடுகளைச் செய்யவேணுமென்று ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் அவர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

வருகிற மார்கழி மாதம் 1-ந் தேதி முதல் தை மாதம் 23-ந் தேதி முடிய எல்லாச் சிவாலயங்களிலும் திருஞானசம்பந்தர் அருளிய ''வேயுறு தோளிபங்கன்'' என்று தொடங்கும் பதினொரு பதிகங்களையும் ஓதுவார்களைக் கொண்டு ஸ்வாமி சந்நிதியில் பாராயணம் செய்ய வேணும்.

திருஞானசம்பந்தப் பெருமானுடைய வாழ்வில் இப்பதிகங்களைப் பாடிய சமயத்தில் அவருக்கு நாளும் கோளும் நல்லனவாய்த் துணை நின்றன. பாண்டி நாட்டில் சைவநெறி தழைக்கச் செய்வதற்காகச் சம்பந்தர் திருமறைக் காட்டிலிருந்து (வேதாரண்யம்) மதுரைக்குப் புறப்பட்டபோது, 'இன்று நாளும் கோளும் நன்றாயில்லை. பயணம் புறப்பட்டால் நடுவழியில் சமணர்களால் துன்பம் நேரிடலாம்!' என்று உற்றோர் தடுத்தனர். அப்போது சம்பந்தர் அவர்களை நோக்கிச் 'சிவனருள் துணை நிற்கும்போது அடியார்க்கு நாளும் கோளும் (கோள் - கிரகம்) துணை நிற்கத் தடையேது?' என்று கேட்டுக் கொண்டு தெய்விக முறுவல் பூத்தபடி பாடிய பதிகங்கள் இவை. இந்தக் காரணத்தினால் இப் பதிகங்களுக்குத் தேவாரத்தில் 'கோளறு பதிகம்' என்ற பெயர் வழங்குகிறது.

இப்பதிகங்களைப் பாடுவதனால் வெப்பு, குளிர், வாதம் முதலியவற்றால் வரும் நோய்களும் தீருமென்று உணர்கிறோம். இப்பதிகங்களைப் பாடி நாமும் இன்று நன்மை பெறுவோம். இப்பதிகங்களை ஒலிபெருக்கி மூலமாகவும் எல்லா இடங்களிலும் பாராயணம் செய்து எங்கும் ஒலிபரப்பவேணும். எல்லோரும் இப்பதிகங்களை அவரவர்கள் இருக்கும் இடங்களில் தினந்தோறும் மார்கழி மாதம் 1-ந் தேதி முதல் தை மாதம் 23-ந் தேதி முடிய பாராயணம் செய்து வரவேணும்.

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிக நல்ல வீணைதடவி
மாசறுதிங்கள் கங்கை முடிமேல்
அணிந்தென்
உளமே புகுந்தஅதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்
வியாழன் வெள்ளி
சனிபாம்பு இரண்டும்உடனே
ஆசறுநல்ல நல்ல அவைநல்லநல்ல
அடியா ரவர்க்கு மிகவே

○

என்பொடுகொம்பொடாமை இவை
மார்பிலங்க
எருதேறி ஏழையுடனே
பொன்பொதிமத்தமாலை புனல்சூடி
வந்தென்
உளமே புகுந்தஅதனால்
ஒன்பதொடொன்றொடேழு பதினெட்
டொடு ஆறும்
உடனாய நாள்கள் அவைதாம்
அன்பொடுநல்ல நல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

○

உருவளர்பவளமேனி ஒளிநீறணிந்து
உமையோடும்வெள்ளை விடைமேல்
முருகலர்கொன்றைதிங்கள்
முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தஅதனால்
திருமகள் கலைதூர்தி செயமாதுபூமி
திசைதெய்வமானபலவும்
அருநெதிநல்ல நல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

○

மதிநுதல் மங்கையோடு வடஆலிருந்து
மறையோதும் எங்கள்பரமன்
நதியொடுகொன்றைமாலை
முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தஅதனால்
கொதியுறுகாலன்அங்கி நமனோடுதூதர்
கொடுநோய்கள்ஆனபலவும்
அதிகுணநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

○

நஞ்சணிகண்டன்எந்தை மடவாள்தனோடும்
விடையேறு நங்கள் பரமன்
துஞ்சிருள்வன்னிகொன்றை
முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தஅதனால்
வெஞ்சினஅவுணரோடும் உருமிடியும்
மின்னும்
மிகையான பூதம்அவையும்
அஞ்சிடும்நல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

○

வாள்வரிஅதளதாடை வரிகோவணத்தர்
மடவாள்தனோடும்உடனாய்

நாண்மலர்வன்னிகொன்றை
நதிசூடிவந்தென்
உளமேபுகுந்தஅதனால்
கோளரிஉழுவையோடு கொலையானைகேழல்
கொடுநாகமோடுகரடி
ஆளரிநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே

○

செப்பிளமுலைநன்மங்கை ஒருபாகமாக
விடையேறுசெல்வன்அடைவான்
ஒப்பிளமதியும்அப்பும் முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தஅதனால்
வெப்பொடுகுளிரும்வாதம் மிகையான
பித்தும்
வினையானவந்துநலியா
அப்படிநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

○

வேள்படவிழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாள்தனோடும்உடனாய்
வான்மதிவன்னிகொன்றை
மலர்சூடிவந்தென்
உளமேபுகுந்தஅதனால்
ஏழ்கடல்சூழ்இலங்கை அரையன்தனோடும்
இடரானவந்துநலியா
ஆழ்கடல்நல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

பலபலவேடமாகும் பரனாரிபாகன்
பசுவேறும்எங்கள்பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தஅதனால்
மலர்மிசையோனும்மாலும்
மறையோடுதேவர்
வருகாலமானபலவும்
அலைகடல்மேருநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

○

கொத்தலர்குழலியோடு விசயற்குநல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமும் மதியுநாகம் முடிமேலணிந்தென்
உளமேபுகுந்தஅதனால்
புத்தரொடமணைவாதில் அழிவிக்கும்
அண்ணல்
திருநீறுசெம்மைதிடமே
அத்தகுநல்லநல்ல அவைநல்லநல்ல
அடியாரவர்க்குமிகவே.

○

தேனமர்பொழில்கொள் ஆலை விளை
செந்நெல்துன்னி
வளர்செம்பொன்எங்குந்திகழ
நான்முகன்ஆதியாய பிரமாபுரத்து
மறைஞானஞானமுனிவன்
தானுறுகோளுநாளும் அடியாரைவந்து
நலியாதவண்ணம்உரைசெய்
ஆனசொன்மாலைஓதும் அடியார்கள்வானில்
அரசாள்வர்ஆணை நமதே.

மேதா விலாஸத்துக்குப் பெயர்போன பெனகல் குடும்பத்துச் சகோதரர்களுக்குள் மூத்தவர் ஸ்ரீ பி. சஞ்சீவராவ் அவர்கள். உத்தரப் பிரதேசத்தில் பல்லாண்டுகள் சர்வகலாசாலைப் பேராசிரியராக இருந்த இந்தக் கல்வித்துறை நிபுணர் ராஜாஜியை ஓர் ஆதரிச ஆசாரிய புருஷராகவே கண்டு புகழ்மாலை சூட்டுகிறார் இக்கட்டுரையில்.

# அரசியலில் ஓர் ஆன்ம ஞானி

பி. சஞ்சீவ ராவ்

ராஜாஜி எண்பத்துமூன்று ஆண்டுகள் பெருவாழ்வு வாழ்ந்து விட்டார். எனவே தமது பிறவிப் பணியில் நிறைவு காண்பதற்குத் துடிக்கிறார். தர்மத்தின் அடிப்படையில் சமூகத்தை அமைப்பதற்கு மக்களைத் தூண்டுவதுதான் இப் பிறவிப் பணி.

ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தரும நெறி சிதைந்தபோது குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் கண்ணனின் மகத்தான உபதேசம் பிறந்தது. 'தர்மம் குன்றி அதர்மம் ஓங்கும்போதெல்லாம் நான் தோன்றுவேன். நல்லாரைக் காத்து, தீயோரை அழித்து தர்மத்தை நிலைநாட்டுவதற்காக நான் ஒவ்வொரு யுகத்திலும் பிறப்பேன்' என்று பெருமான் உறுதி கூறினான்.

நன்னெறியும், ஆன்மீகமும் சீர்கேடுற்றிருப்பதே இன்றைய உண்மையான நெருக்கடி. இது புலனாகாதபடி அரசியல், பொருளாதாரப் போராட்டங்கள் மூடிக் கொண்டுள்ளன. உலக யுத்தங்கள் இரண்டுக்குப் பின்னர் விஞ்ஞான நுணுக்கங்களும், விஞ்ஞான ரீதியில் அமைந்த சிந்தனையும் தர்மத்தில் நம்பிக்கை கொண்ட நமது பாரமார்த்திக அடிப்படையை அசைத்து விட்டன. மனித உறவுகளின் புனிதத் தன்மையிலும், அறக் கோட்பாடுகளிலும் இன்றைய இளைஞர் சமுதாயம் நம்பிக்கை இழந்து விட்டது. எது சரி, எது தப்பு என்பதை நிர்ணயிக்க மரபு கூறும் வழி முறையை அவர்கள் ஏற்கவில்லை. அவர்களுக்குப் புரியும் விதத்தில் நன்மையையும் தீமையையும் விளக்கிக் கூறும் ஒரு வாழ்முறைத் தத்துவத்தைத் தேடித் தவிக்கின்றனர் நவீன உலக மக்கள். எனவே, குழம்பி நிற்கும் இவ்வுலகில் தன்னலம் கருதாத, நேர்மையான மக்களை நாம் தோற்றுவிக்க வேண்டியது உடனடி அவசியமாகும். நல்லறிவும் தெளிவான நோக்கும் விவேகமும் பெற்று அமைதியான வாழ்வு வாழக் கூடியவர்களாகவும் கால வரம்புகளைக் கடந்த நெறிகள் எவை, காலத்துக்குக் காலம் மாறும் நெறிகள் எவை என்று மாறுபடுத்தி அறியக் கூடிய திறமை படைத்தவர்களாகவும் அவர்கள் இருக்க வேண்டும். இத்தகைய மக்களை விரைவில் தோற்றுவிப்பதற்குத் தலைவர் ஒருவர் தேவை. தலைமை தாங்கி நடத்துபவராக அவர் இருந்தால் மட்டும் போதாது. அறிஞர்கள், மேதைகள் இவர்கள் மனமும் இன்று கலங்கியிருக்கிறது. எனவே அந்தக் கலக்கத்தை நீக்கித் தெளியச் செய்யும் ஆசாரிய புருஷராகவும் இன்றைய தலைவர் இருக்கவேண்டும்.

இன்று தலைவர்களுக்கிடையே ஆசானாகவும் நிற்கும் ஒரே ஒருவர் ராஜாஜி தான். பண்டைய முனிவர்களின் ஞானத்தைப் பரம்பரைச் செல்வமாகப் பெற்ற ராஜாஜி, மேலை நாட்டு விஞ்ஞானத்தின் பயிற்சியையும் பெற்றிருக்கிறார். இயற்கை நியதிகளையும், இயற்கைக்கும் மேம்பட்ட சக்தியின் நியதிகளையும் மீறுபவர்களின் கதி என்ன என்பதை எல்லா நாடுகளுக்கும் இன்று அவர் ஒருவர்தான் இடைவிடாது எச்சரித்து வருகிறார். இவரைக் காணும்போது, தனி மனிதன் தன்னைச் சுற்றியுள்ள உலகோடு அன்பினால் பூரணமாக இசைந்து வாழும் உறவு முறையே தர்மம் என்று கூறிய பீஷ்மரை நினைவு கொள்கிறோம். தீர்க்க தரிசனத்தை வரப்பிரசாதமாகப் பெற்றவர்போல் எந்தப் பிரச்னையின் உட்கருவுக்குள்ளும் பிரவேசித்து அங்கு மறைந்துள்ள உண்மையைப் பிரகாசிக்கச் செய்கிறார் ராஜாஜி. அரசியல் பிரச்னைகள் மட்டுமின்றி, இந்த அரசியல் சமூக நெருக்கடிகளுக்குக் காரணமான மனித இயல்பின் சூட்சுமமான, ஆராய இயலாத அம்சங்களையும் ஆழ்ந்து நோக்கும் அவரது அசாதாரணமான திறமைக்கு 'சுயராஜ்யா'வின் ஒவ்வோர் இதழும் சான்று கூறுகிறது.

இன்று ராஜாஜியைச் சுதந்திரக் கட்சியின் தலைவர் என்ற முறையில் பார்க்கிறது உலகம். அவர் எடுத்துக் கொண்

டுள்ள பணி வெற்றி பெறுமா என்று விஷய ஞானமும் அபிமானமும் உள்ள பலர் சந்தேகம் தெரிவிக்கிறார்கள். இத்தகைய சந்தேகங்களுக்கு இடமேயில்லை. ஏனெனில் இந்த இயக்கத்தின் முக்கியமான நோக்கம் மக்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்புவதுதான். இந்தச் செயலை ஆற்றுவதற்கு ராஜாஜி ஒருவர்தான் தனித் தகுதி பெற்றவர். ஆனால் கட்சியின் தவறுகளை அவர் வெளிப்படுத்துவது மட்டும் இல்லை. தர்மத்தின் மீதும், மக்களின் மனோநிலையிலும் அரசாங்கக் கொள்கைகள் என்ன எதிர் விளைவுகளை ஏற்படுத்துகின்றன என்பதையும் அவர் நுட்பமாக அலசிக் காட்டுகிறார். மக்களுக்கு இவ்வாறு அறிவூட்டும் பணிதான் மிகவும் முக்கியமாகும்.

*   *   *

மக்களின் சுதந்திரம் வெகு வேகமாக அழிந்து வருவதைத் தடுக்க ராஜாஜி இந்த இயக்கத்தைத் தொடங்கியபோது அவர் தனி ஆளாக நின்றார். முதுமைத் தசையில், அதிகார பலமோ, செல்வ பலமோ இல்லாத நிலையில் மக்களுக்கு விடுதலையை ஈட்டித் தருவதற்காக இந்த மகத்தான சாகசச் செயலை அவர் தொடங்கினார். அவர் எதிர்க்க வேண்டிய பெரும் படையோ, முன்பு நாட்டின் சுதந்திரப் போராட்டத்தை அவர் தலைமை தாங்கி' நடத்தியபோது அவருடன் இருந்த பழைய நண்பர்களும், தோழர்களுமே கொண்டது. பழைய சகாக்களுடனேயே அவர் ஏன் போர் புரிய வேண்டும்? வாழ்நாளில் எஞ்சியுள்ள பகுதியை அவர் ஏன் இவ்வாறு செலவிட வேண்டும்? எண்பத்து மூன்று வயதுக்கு மேல் அவர் வெற்றியில் என்ன பொருள் காணப் போகிறார்? இதையெல்லாம் எண்ணிப் பார்க்கும்போது குருக்ஷேத்திரத்தில் உறவினரை எதிர்த்து நின்ற அர்ச்சுனன் நினைவுதான் வருகிறது. அப்போது கௌரவர்கள் விவேகத்தை நாடாமல் பலத்தையே துணையாகக் கொண்டார்கள். அர்ச்சுனனோ பலத்தைப் பிரயோகிப்பதில்லை என்று உறுதி பூண்ட கண்ணனின் விவேகத்தையே துணை கொண்டான். செல்வம் அல்லது வேறெந்த பலமும் இன்று ராஜாஜியிடம் இல்லை. ஒரு போதும் மாசுபடுத்த முடியாத நேர்மையும், தாம் நியாயமானது என்று கருதுவதில் அவருக்குள்ள தன்னலம் கலக்காத பற்றுதலும், சத்தியத்தில் வைக்கும் நம்பிக்கையும் தான் அவருடைய பலம்.

நமது வாழ்க்கையின் எல்லாக் கட்டங்களிலும் இடைவிடாது தன் இயக்கத்தைச் செலுத்தி வரும் மகா சக்தியின் கருவியாகத் தம்மை ஆக்கிக்கொண்டிருக்கிறார் ராஜாஜி. தலைவராகவும், ஆசாரிய புருஷராகவும் பணி புரிவதையே தமது கடமையாக ஏற்றுக் கொண்டிருக்கிறார். அவர் ஆண்டவனின் உபகரணம்; விலக்கவோ, நிறுத்தவோ முடியாதபடி தர்மத்தை நோக்கிச் செல்லும் நியதியின் பணியாளன் அவர். அன்பே இந்த நியதியின் இதயம்; இனிமையான ஆன்ம நிறைவும், அமைதியுமே அதன் இலக்கு. ராஜாஜி பிறப்பாலும், நம்பிக்கையாலும் ஓர் இந்து. அதோடு எவரையுமே இந்துவாகக் காணும் ஓர் இந்து.

தெய்வ சங்கல்பம், மாறுபாடு என்பதையே அறியாதது. அதில் சலனம் என்பதின் நிழல்கூடத் தட்டுவதில்லை. இந்தச் சங்கல்பத்தைச் செயலாக்கும் கருவிக்கு வெற்றி, தோல்வி என்பவையேது? ராஜாஜிக்குப் புகழோ, பாராட்டோ தேவையில்லை. அவர் செய்யும் பணியே அவருக்குப் பரிசுமாகும்.

# சிறுகதைகள்

'ராஜாஜி எழுதும் சிறுகதைகள் உண்மையில் கதை இலக்கியமல்ல. அவையெல்லாம் கருத்துக் கதைகள். உபதேசம் அழுத்தி நிறைந்த இந்தச் சிருஷ்டிகள் கதை இலக்கியமாகா'— இது விமரிசனக்காரர்களின் தீர்ப்பு என்பது எனக்குத் தெரியும். நானும் இதை மதித்துக் கருத்து இல்லாத கதைகள் எழுதப் பார்த்தேன். முடியவில்லை. என் தருமம் இது. தருமம் என்கிற வடமொழிச் சொல்லுக்கு இயல்பு, பண்பு என்பது பொருள். பசுவுக்குப் பால் தருவது தருமம். குதிரைக்கு ஓடுவது தருமம். தேளுக்குக் கொட்டுவது தருமம். மயிலுக்கு ஆடுவது தருமம். இவை போல்.

மற்றவர்கள் சொல்வதை நான் பெரிதும் மதிக்கிறேன். ஆயினும் என்னை மாற்றிக் கொள்ள என்னால் முடியவில்லை. மிக நல்ல கதைகள் மற்றவர்கள் எல்லாரும் ஓர் உபதேசமும் அவற்றில் புகுத்தாமல் எழுதவில்லையா? எழுதுகிறார்கள். ஆனால் என்னால் ஏனோ முடியவில்லை. ஆகவே, கதை படிப்போர்களே! உங்களைத் திருப்தி செய்ய என்னால் இயலவில்லை. மன்னிக்கக் கேட்பதன்றி வேறு வழியில்லை.

கொஞ்சம் வாதிக்கவும் ஆசைப்படுகிறேன். உபதேசமில்லையாயின் இலக்கியம் என்னத்துக்கு? ஐம்புலன்களுக்கு இன்பம் தருவது மட்டும் போதுமா, மனிதன் மனிதனுக்குச் செய்யும் சேவை? ஆன்மாவை ஓரளவேனும் தூயப்படுத்துவதுதானே பரஸ்பரம் செய்ய வேண்டிய பணியாகும்? இதுதானே பெரிய ஒப்புரவு? மற்ற நலன்கள் ஒருவன் தனக்குத் தானே செய்து கொள்ள முடியும். இந்த ஆன்ம வளர்ச்சியும் தூய்மையுமேதான் பரஸ்பரப் பணியினால் அடையக் கூடியவை. இலக்கியத்தின் பணி இது. அதாவது உண்மை இலக்கியத்தின் பணி. ஆற்றோடு ஓடாமல் எதிர்த்துச் செல்லும் நூல்கள் இந்த இலக்கிய வகையில் முதல் இடம் பெறும்.

உபதேசம் எவ்வாறு தரப்பட வேண்டும்? நேராகத் தருவது ஒரு வழி. மறைமுகமாக, தெரிந்தும் தெரியாததுமாக, தானாக உள்ளத்தில் பதியும்படி தருவது — இதுவே பயனளிக்கும் உபதேசம். உபநிஷத்து, கீதை, திருக்குறள், இந்த நூல்களில் தரப்படுவது நேர்முறை உபதேசம். எல்லாரும் பெரிய குதிரை மேல் ஏற மாட்டார்கள். ராமாயணம், பாரதம், சிலப்பதிகாரம், இத்தகைய நூல்களைப் படித்தும் கேட்டும், அனுபவித்த மக்கள் உபதேசத்தை மறைமுகமாக அடைகிறார்கள். நேர் முறை உபதேசம் கடையில் ஒரு படி உப்பு வாங்குகிற மாதிரி. மறைமுறை உபதேசம் ரசத்திலும் குழம்பிலும் போடப்பட்ட உப்பைப் போன்றது.

''தருமத்தை எவ்வளவோ உபதேசித்தேன். இரண்டு கரங்களையும் உயரத் தூக்கி, 'சத்தியம், சத்தியம், தருமமே எல்லாவற்றுக்கும் வழி, அதை விடுத்தால் ஏதும் இல்லை' என்று கதறிக் கதறி ஓய்ந்து போனேன். இனி ஹரியின் கதையைச் சொல்லி மக்களைச் சீர்ப்படுத்தப் பார்க்கிறேன்'' என்றார் வியாசர்.

இந்தக் கட்டுரை நீண்டு விட்டது. நான் வியாசருமல்ல, வால்மீகியுமல்ல. என் சிறுகதைகளில் கருத்து அடர்ந்து நிற்பது ஓர் ஆட்சேபணையாகாது என்பதற்காக இதையெல்லாம் எடுத்துச் சொன்னேன். ஆட்சேபணை சரியோ தவறோ, வேறுவகைக் கதைகள் எழுத என்னால் இயலவில்லை. மற்றவர்களால் முடியும். அவர்கள் அதைச் செய்து கொண்டு போக வேண்டும். எனக்குத் தெரியும் ஓர் எழுத்தாளர் அம்மைக்கு என் எழுத்து பிடிக்கவேயில்லை. யார் என்று நீங்கள் கண்டு பிடிக்க முடியாது. அதற்கு நான் என்ன செய்ய இயலும்? நான் என் தருமத்தை அனுசரித்து ஏதோ என்னால் ஆனதைச் செய்கிறேன். மற்றவர்கள் கருத்தற்ற, சுத்தக் கதைகள் எழுதி இலக்கியத்தை வளர்க்கட்டும்.



ராஜாஜி

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப்படுத்துகிறது

வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது! "ஆன் மோஸ்போர்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையைவிட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது! கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்ட குளோரோபில்லின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபில்லின் பூரண தன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உண்மையான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட்டிற்கு பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலேயே மிகப்பெரிய ஸ்தாபனத்தால் தயாரிக்கப்படுகிறது!

வேறு எந்த பற்பசையிலும் இதைவிட அதிக வீரிய குளோரோபில் இல்லை — குழந்தைகள் அதன் பெப்பர்மின்ட் வாசனையை மிகவும் விரும்புகிறார்கள்!







பெரிய எக்கானமி சைஸ் லாபகரமானது!

CTPA-G-10 TAM.

## அத்தியாயம் முப்பத்தாறு

அன்று மாலைவரை அங்கே மேலுக்கும் கீழுக்குமாக அலைவதும் உட்காருவதும் பேசுவதுமாகப் பொழுதைக் கழித்தாள் டொக்கி. சாப்பாடு முடிந்த பிறகு மங்களப் பாட்டியும் மாடிக்கு வந்து பேச்சில் கலந்து கொண்டாள். பேச்சில்லை; கதை. அனந்தசாமி கதை சொல்லக் கிளம்பி விட்டார். புத்தர் கதை, புத்தர் சொன்ன கதை, அவர் அலைந்த கதை — ஒவ்வொன்றாக மெதுவாகச் சொல்லிக் கொண்டு வந்தார். நுரையீரல் களைத்துப் போகிறவரையில் அவர் வாய் ஓயவில்லை. நெஞ்சகம் வறண்டு, அவராக நிறுத்திய இடையில் மங்களப் பாட்டி கீழே எழுந்து போனாள். அவரை ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, நிலைக் கதவில் சாய்ந்தவாறு உட்கார்ந்திருந்த டொக்கி ஏதோ புத்தகத்தைப் பிரித்துப் படிக்க முயன்றவள் புரியாமல் மூளை சோர்ந்து கண்ணை மூடினாள். அப்படியே புத்தகம் நழுவாமலே கிடக்க உறங்கி விட்டாள். குழந்தையாக அவள் தூங்கும் அமைதியைப் பார்த்து, அவரும் எப்பொழுதாவது வருகிற இருமலைக் கூடச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு அப்படியே மல்லாந்து படுத்தார். இத்தனை நேரம் பேசின களைப்பு அவருடைய இமைகளின் மீதும் அமர்ந்து இறுக்கியது. கிழக்குக் கடல் காற்று குளிர்ந்து வந்து தவழும் நேரம்...

அவர் கண்ணைத் திறந்த பொழுது டொக்கியைக் காணவில்லை. அவள் இருந்த




தி. ஜானகிராமன்

இடத்தில் வழுக்கைத்தலையும் பொக்கை வாயுமாக யாரோ உட்கார்ந்து அதே புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந் தார்கள். அனந்தசாமி புருவத்தை உயர்த்தி இமைகளை விலக்கிக் கொண்டு பார்த்தார். அவர் ராஜாங்கம்தான்.

''எப்போது வந்தீர்கள்?''

''நான் வந்து அரை மணி நேர மாயிற்று.''

''குழந்தை எங்கே?''

''கீழே போனுள்...ஏதாவது சாதக மாயிருந்தாளா?''

''சாதகமா? நம்ம மாதிரி நூறு பேரை வைத்துக் காப்பாற்றுவாள் அவள்...''

''நூறுவது, ஆயிரமாவது! அதெல் லாம் ஒன்றுமில்லே. ஆனுல் பொறுப்பு ரொம்ப ஜாஸ்தி. சொல்லிச் சொல் லித்தான் செய்யணும் என்று வைத் துக் கொள்வாள். ஒன்று கிடக்க ஒன்று செய்து வைக்க மாட்டாள்!'' என்று பொக்கை வாய்ப் புன்முறுவ லில் தம் திருப்தி, பூரிப்பு எல்லா வற்றையும் அடக்கி வெளிப்படுத்தி ஞர் ராஜாங்கம். ''உடம்பு எப்படி இருக்கு இப்ப? இன்னும் லேசா ஜுரம் இருக்கிறதென்ருள் குழந்தை'' என்று கண்ணுல் கேட்டார்.

''இலேசாகத்தான்...நாளைக்குச் சரி யாகி விடும்.''

டொக்கி 'டீ' போட்டு வந்து இரு வருக்கும் கொடுத்தாள்.

பொழுது சாய இருவரும் கிளம்பி விட்டார்கள்.

''மாமா! இங்கிருந்து போக எனக்கு மனசில்லே. இந்த இடம் அவ் வளவு அழகாக இருக்கிறது. இந்தப் பக்கம் தோப்பு; இந்த வேப்பமரம்; உங்களோடு குடியிருக்க மூணு அணில் குஞ்சு; நீங்க தூங்கும்போது அம்மா அணில் என்ன பண்ணிற்று, தெரி யுமா? மொட்டை மாடியிலே, அதோ அந்த இடத்திலே ஒரு கயிறு கிடந் தது. அதை நன்ருக முன்னங்காலிலே பந்து மாதிரி சுருட்டியது. வாயில் கவ்வியது. அப்படியே இரப்பிலே கொண்டு போய் வைத்துக் கொண்டு விட்டது. அப்புறம் இரப்புச் சட்டத் தைப் பிடித்துக் கொண்டே என்னை ஒரு நாழி கண் கொட்டாமல் பார்த் தது. அப்புறம் அப்பா வந்ததும் உள்ளே தலையை இழுத்துக் கொண்டது. மந்தைவெளியைவிட இது சமுத்திரத்தி லிருந்து தூரம். ஆனுல் இந்தப் பகலில் கூட இந்த மாடியில் சமுத்திர அலை கேட் கிறது. பொழுது போகிறதே தெரிய வில்லே. கதை கேட்கலாம். அணில் பார்க்கலாம். புத்தகம் வாசிக்கலாம். எனக்குத்தான் புரியவில்லே. ஒன்றும் பண்ணுமல் சும்மா உட்கார்ந்தாலும் பொழுது போகிறது. சும்மா உட் கார்ந்திருந்தால் கூட என்னமோபோல் இல்லே. முன் ஒரு தடவை நான் அப்பா அம்மா எல்லோரும் குண சேகரம் போய் இரண்டு நாட்கள் முழு சாகத் தங்கி யிருந்தோம். காவேரிக் கரையிலே உட்கார்ந்திருந்தோம். அங்கேயும் பொழுதுபோவதே தெரிய வில்லே. ஆனுல் அங்கே வீட்டுக்குப் போகணும் என்று நினைவிருந்தது. இங்கே அதுகூட இல்லே.''

''இந்த இடத்துக்கு என்ன இவ் வளவு ஸ்தோத்திரம்? கிளம்பியாச்சு. இனிமேல் ஒரு நிமிஷம் கூடத் தங்க மாட்டேன் என்று சொல்வதற்குப் பதிலாக இப்படிச் சொல்கிருயா?'' என்று குறுக்கிட்டார் அனந்தசாமி.

''தங்க முடியவில்லேயே என்று தான் சொல்லுகிறேன். நீங்களும் நானும் ஒரே வீடாக அமர்த்திக் கொண்டிருந்தால் என்ன மாமா? ஒரு மாடி வீடாகப் பார்த்தால், மாடி யில் நீங்கள் இருக்கலாம். கீழே நாங்கள் இருக்கலாம்.''

''நீ பெரிய விதுஷியாகி, பிரபலமாகி, பணக்காரியாகி விட்டால்...அதெல்லாம் நடக்குமா என்ன? தோட்டம், பங்களா என்றிருக்கும்போது மாடியிலே ஒரு குடி, அதுவும் ஒரு பரதேசியை...''

''ஏன் மாமா? என்னைப் பார்த் தால் அப்படியா தோன்றுகிறது?''

''எப்படி?''

''பெரிய விதுஷியாக, பிரபலமாக, பணக்காரியாக — இப்படி யெல்லாம் ஆவேன் என்று?''

''ஏன் ஆகக் கூடாது?''

''அப்படியெல்லாம் என் தலேயிலே எழுதி யிருந்தால், இந்த இடத்தையே சுற்றிக் கொண்டு நகர மனசில்லாமல் இப்படி நிற்பேனு. மாமா இப்பொழுது- அருக்கஞ்சட்டித் தண்ணீரிலே கடுதாசிக் கப்பல் பண்ணிவிட்ட மாதிரி...நான் அப்படி யெல்லாம் ஆகிவிடமாட்டேன் மாமா- பயப்படாதீர்கள்!'' என்று சிரித்தாள் டொக்கி.

அந்தச் சிரிப்பிலும் பார்வையிலும் ஆத்திரம், ஆற்ருமை, நிச்சயம், அழுகை, ஏமாற்றம்—எல்லாம் ஒலிப் பது மாதிரி யிருந்தது. எல்லாவற் றையும் எல்லாரும் எடுத்துக் கொண் டதும், எனக்கு ஒன்றும் வேண்டாம் என்று குழந்தையொன்று நெஞ்சு கமறக் கத்தும் ஒலி கேட்டது.

சற்றுத் திகைத்து என்ன சொல்வதென்று புரியாமல் குழம்பினார் அவர். என்ன சொல்லலாம் என்று அவர் யோசிப்பதற்குள், ''வரேன், மாமா! உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் உதவியாயிருக்கலாம் என்று வந்தேன். ஓயாமல் பேசச் செய்ததுதான் என்றால் ஆன உதவி'' என்று சொல்லிக் கொண்டே கிளம்பிவிட்டாள் அவள்.

ஆறும் நாளன்றுதான் ஜுரம் விட்டது. ஆனால் நடக்க முடியாமல் வீட்டோடு கிடந்தார். இரண்டு நாட்கள் இப்படி வீட்டுக்குள்ளேயே கழிந்தது. தலைக்கு நீர் விட்டுக் கொண்ட களைப்பு வேறு ஒரு நாள் கட்டிப் போட்டது. கால் மட்டும் வெளியே போகப் போகத் துடித்தது. வழக்கமாகப் பார்த்துவரும் நோயாளிகளின் நினைவு வந்து அவரைத் துன்புறுத்தியது. பத்து நாட்கள், பன்னிரண்டு நாட்கள் வீட்டுக்குள் அடைபட்டுக் கிடந்தது குற்றம் என்று ஒரு வெட்கமும் குறுகுறுப்பும் நெஞ்சை அரித்துக் கொண்டேயிருந்தன. நோய் வராமல் முன் ஜாக்கிரதையாக இல்லாதது தவறென, குளித்த அன்று சோர்வு அவரைக் கீழே கிடத்தி உட்கார்த்திய பொழுது பொருமிக் கொண்டேயிருந்தார் அவர்.

தலைக்கு நீர் விட்டுக் கொண்ட மூன்றும் நாள்தான் அவரால் வெளிக் கிளம்ப முடிந்தது. அது வரையில் பொழுதைக் கழுத்தைப் பிடித்துத் தள்ள வேண்டியிருந்தது. நாலைந்து நோயாளிகளைத் தவிர வேறு யாரும் வரக் கூடியவர்கள் — வரவில்லை. சந்திராவும் வரவில்லை. ரங்கன் வரவில்லை. டொக்டியும் வரவில்லை. பாகவதர் ஒருநாள் வந்துவிட்டுப் போனார். குழந்தையைக் கொண்டு வருவதாகச் சொல்லிப் போன காசி வரவில்லை. மனிதர்களுக்காக ஏன் இவ்வளவு ஏங்குகிறோம் என்று வியப்பாக இருந்தது அவருக்கு. மாதக் கணக்கில் வாயைத் தைத்துப் போட்டு, தனிக் காட்டில் இருந்த எனக்கு ஏன்

தனிமை நோகிறது? மங்களப் பாட்டி வழக்கம்போல் பேச வந்தாள். பொழுது நன்கு சாய்ந்து விட்டது. நாலரை, ஐந்து மணி யிருக்கும்.

''என்ன மருந்துப் பெட்டி யெல்லாம் எடுத்து வைத்தாகிறது? வெயில் அழைக்கிறதா?'' என்று அன்று கேட்டாள் மங்களப் பாட்டி.

''இன்று ஜாஸ்தி தூரம் போகப் போகிறதில்லை. மீர்சாப்பேட்டை மட்டும் போய் விட்டுத் திரும்பி வந்து விடுகிறேன். வெயில்தான் தணிந்திருக்கிறதே'' என்று பயந்துகொண்டு சொன்னார் அனந்தசாமி.

''நீர் நிஜம்தான் பேசுவீர்! சரி!'' என்றாள் மங்களப்பாட்டி.

''அப்படி யென்றால்?''

''உங்க மனசு கேட்குமா ஸ்வாமி! தொட்டுத் தொட்டு அது மாம்பலம் புரசவாக்கம்னு இழுத்துண்டு போயிடாதா! நீங்க இன்றைக்கு நிச்சயம் போக வேண்டுமா என்ன?''

''நிச்சயமாக என்றால்?''

''வியாதியஸ்தர்கள் உங்களைத் தேடி வரச்சே நீங்கள் வேறு போகணுமா? இதோ பாருங்கள். யாரோ வருகிறாற் போல இருக்கே!''

''யாரு?''

''இருக்கிறாரா?'' என்று குரல் கேட்டது.

''பிழைத்திருக்கார்!''என்றாள்பாட்டி.

''உடம்பு சரியா யில்லையாமே!'' என்று கேட்டுக் கொண்டே வந்தது ஓர் இனிய குரல்.

ருக்மிணி வந்து நின்றாள்.

''அடேடே! எப்பொழுது வந்தீர்கள்?'' என்று கேட்டார்.

''நாலு நாட்கள் ஆகிறது.''

''நாலு நாட்கள் ஆகிறதா?''

''ஆமாம்!'' — நாலு நாட்களாக வந்து பார்க்காததற்குச் சமாதானம் சொல்லவில்லை ருக்மிணி.

''உட்காருங்கள்.''

ருக்கு உட்கார்ந்து கொண்டான்.

''நல்ல வேளையாக நீங்கள் வந்தீர்கள். இத்தனை நாழி செருப்பும் பையுமாகக் கிளம்பியிருப்பார். நீங்கள் இருந்து சாவகாசமாகப் பேசிவிட்டுப் போனால் நல்லது. அலைச்சல் மிச்சப்படும்!''

''உடம்பு இப்படிச் சாம்பலாக வெளுத்துப்போய் விட்டதே!'' என்று அவர் உடலைப் பார்த்துக் கொண்டிருந்தாள் ருக்மிணி.

''நீங்கள் எல்லாம் அவரிட்ட மருந்து வாங்கிச் சாப்பிடுகிறீர்களே ஒழிய, மருந்து கொடுக்கிற உடம்பு வாகாக இருக்கணும் என்று சொல்ல மாட்டேன் என்கிறீர்களே!'' என்றாள் மங்களப் பாட்டி.

''இவர்கள் மருந்து சாப்பிடுகிறவர்களில்லை பாட்டி!'' என்று குறுக்கிட்டார் அனந்தசாமி.

''இனிமேல் சாப்பிட்டால் போகிறது!'' என்றான் ருக்கு.

**பா**ட்டி நாசூக்காக ருக்குவையும் யார் என்ன என்று விசாரிக்க ஆரம்பித்தாள். டில்லியில் காலேஜ் வாத்தியாராக இருக்கிறார் என்று அவர் சொன்னதும் சொல்லாததுமாக ருக்கு இடைமறித்தான். ''இப்போது டில்லி







மாடல் 0374 :
6 வால்வ் . ஆல்-வேவ் . 4 பாண்ட்
பியானோ - 6 - ஸ்விட்ச்
ஏசி அல்லது ஏசி/டிசி (இரு மாடல்கள்)

யாராக இருந்தாலும் சரி....

















உங்களுக்குப் பூரண
திருப்தி அளிப்பது

# மர்பி
# ரேடியோ



மாடல் 0322 :
6 வால்வ் . ஆல்-வேவ் . 3 பாண்ட்
ஏசி அல்லது ஏசி டிசி (இரு மாடல்கள்)

வாத்தியார் இல்லே, பாட்டி. முந்தா நான் காலேயிலிருந்து பட்டணத்து வாத்தியாராகி விட்டேன்!''

''இந்த ஊருக்குச் சமானம் உண்டோ?'' என்று சொன்னதோடு பாட்டிக்குத் திருப்தி ஏற்பட்டுவிட்டது. அவளுக்கு வழக்கம்போல் விவரமாக எதையும் தெரிந்து கொள்ளும் ஆவல் எழவில்லே. இரண்டு நிமிஷங்கள் கழித்து ''நான் வரேன். கோயிலுக்கு எண்ணெயே போடவில்லே நாலு நாட்களாக!'' என்று எழுந்து போய் விட்டாள்.

''டில்லி வேலேயை உண்மையாகவே ராஜிஞமா செய்து விட்டீர்களா?'' என்று கேட்டார் அனந்தசாமி.

''உண்மையாகவேயா என்று கேட்கும்பொழுது, நான் இரண்டு நாட்களா வேலே ஒப்புக்கொண்டு காலேஜுக்குப் போய் வருகிறது ஏதோ பிரமை என்று தோன்றிவிடும் போலிருக்கிறதே! ராஜிஞமா செய்துவிட்டு, டில்லியிலிருந்து நாற்பது வருஷ ஜாகையைப் பெயர்த்துக் கொண்டு வந்து விட்டோம்.''

''விட்டோமா? இன்னும் யாரு?''

''சித்தி. இருக்கிற மனுஷி எனக்கு அவள் ஒருத்திதான்.''

''ஒருத்தி என்று கவலேயோடு சொல்லவில்லேயே! வாத்தியார்களுக்கு, மனிதர்களுக்குப் பஞ்சம் ஏது?...ம்...''

''ம்ம்'' என்று சொல்லிக் கொண்டேயிருந்தார் அவர். அவருக்கு ஒன்றும் பேசத் தோன்றவில்லே. ஒன்றுமே பேசாமல் அப்படியே உட்கார்ந்திருக்க வேண்டும் போலிருந்தது. வெகுகாலமாக அப்படி உட்கார்ந்திருப்பது போல, மனம், புத்தியெல்லாம் அந்த நிறைவில் ஒன்றிப் போய்க் கிடந்தன.

ருக்மிணியும் அப்படியேதான் உட்கார்ந்திருந்தாள். ராஜிஞமா செய்த விவரம், சித்தி தடுத்தது, டில்லியில் பலபேர்கள் தடுத்தது, மூட்டை கட்டிக்கொண்டு ரயிலில் வந்தது, இங்கே வந்ததும் சுப்புசாமியின் முயற்சியால் கிடைத்த வேலேயை வந்த மறுநாளே ஒப்புக் கொண்டது, அவருடைய முயற்சியினுலேயே ஒரு நல்ல வீடு கிடைத்தது—ஒன்றையும் பற்றி அவள் பேசவில்லே. இங்கு உட்கார்ந்திருக்கும் கணத்துக்கு முன் இவ்வளவும் அற்ப நடப்புகளாகத் தோன்றி விட்டன. அவளுக்கு அந்த ஞாபகங்களே வரவில்லே.

இந்த நிறைவிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக அவர் சற்றைக்கொரு தடவை ''ம்...ம்...'' என்று 'ம்' போட்டுக் கொண்டிருந்தார். ''அப்புறம் என்ன என்ன செய்தி?'' என்று கேட்பது போலிருந்தது.... கேட்கவில்லே.

இப்படி ஓர் அரை மணி நேரம் போயிற்று. இந்த மௌனத்தையும் முழுமையையும் தாங்க முடியாமல் ருக்மிணி கடைசியில் பேச ஆரம்பித்தாள்.

''வந்த அன்றே வந்திருப்பேன். உடம்பு சரியில்லே என்று சந்திரா சொன்னதும் பேசாமலிருந்து விட்டேன். பேச்சுக் கொடுக்க வேண்டாம் என்று ஓர் எண்ணம். அப்புறம் ஒரு காரியம் மீதி யிருந்தது. அதை முழுசாகச் செய்து விட்டுத்தான் மற்ற வேலேகளேக் கவனிக்க வேண்டும் என்று தோன்றி விட்டது.''

''என்ன?''

''வீடு பார்க்க வேண்டி யிருந்தது. சுப்புசாமி காரும் நடையுமாக அலேந்து நேற்று ஒரு வீட்டைப் பிடித்து வாடகை அட்வான்ஸும் கொடுத்து விட்டார்.''

''சௌகரியமா யிருக்கிறதா?'' என்று வினவினர் அனந்தசாமி.

''கீழே ஒரு சின்னக் குடும்பம் வசதியாக இருக்கலாம். மாடியில் ஒரு பெரிய ஹால் இருக்கிறது. நடுத்தர அளவில் ஒரு அறை. இந்த அளவுக்கு மொட்டை மாடியும் இருக்கிறது. தண்ணீர், காற்றெல்லாம் வசதியா யிருக்கின்றன.''

''அதிர்ஷ்டம்தான். பட்டணத்தில் வந்ததும் வராததுமாக ஒரு வீடு அதுவும் சௌகரியமான வீடு கிடைத்தும் விட்டதென்றல் அது சாதாரண அதிர்ஷ்டமில்லே!''

''அது சுப்புசாமியின் அதிர்ஷ்டம். என் அதிர்ஷ்டத்தை இனிமேல்தான் பார்க்க வேண்டும்!''

''வேலே கிடைத்துவிட்டது...அப்புறம் என்ன?''

''அதுவும் சுப்புசாமியின் செல்வாக்குத்தான்!''

''எப்படி யிருந்தாலும் பலனே நீங்கள்தானே அனுபவிக்கிறீர்கள்?''

''எத்தனே பலன்கள் கிடைத்தாலும் முக்கியமானது நிறைவேருவிட்டால் அவ்வளவும் வீணுகி விடலாம். நான் டில்லியை விட்டது, இங்கே வந்தது, வீடு கிடைத்தது, வேலே கிடைத்தது எல்லாம் அடியோடு வியர்த்தமாகி விடலாம்.''

''வியர்த்தமாகவா!'' என்று கண் கலங்கக் கேட்டார் அவர். (தொடரும்)

# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

35

இறைவனுடைய திருவருளைப் பெறுதற்குரிய வழி எது என்று மயங்கி நிற்கிற மக்களைப் பார்த்து உண்மையை விளக்கி உபதேசம் செய்கிறார் திருமூலர்.

**ஒன்றே குலமும்**
**ஒருவனே தேவனும்**

மனிதர்கள் எல்லாரும் ஒரே குலம். குல பேதங்களினால் வழிபடும் தேவன் வேறுபடமாட்டான். எல்லாக் குலங்களுக்கும் இறைவன் ஒருவனே. இந்த அடிப்படை உண்மையை மறவாதீர்கள் என்று உபதேசிக்கிறார் முனிவர்.

**ஒன்றே குலமும்**
**ஒருவனே தேவனும்**
**நன்றே நினைமின்**
**நமனில்லை நாளுமே**

[நாளுமே—எந்நாளுமே.]

எப்பொழுதும் பிறருக்கு நன்மையையே எண்ணுங்கள். அப்படி நற்குணத்தோடு உள்ளமும் செயலும் ஒன்றுபடுத்தி வாழ்ந்தால் எந்நாளும் யம பயம் என்பது கிடையாது. அதாவது மரணத்தைக் கண்டு அஞ்ச வேண்டியதில்லை.

**சென்றே புகும்கதி**
**இல்லை ;**

[சென்றே—இதை விட்டு விட்டு வேறு வழியில் சென்றால், புகும் கதி இல்லை—மீளும் வழி இல்லை.]

**நன்றே நினைமின்**
**நமனில்லை நாளுமே**
**சென்றே புகும்கதி**
**இல்லை ; நும் சித்தத்து**
**நின்றே நிலைபெற**
**நீர்நினைந்து உய்மினே**

[உய்தல்—நற்பதவி அடைதல். உய்மினே—நற்பதவி அடையுங்கள்.]

நம் சித்தத்துக்குள்ளேதான் நமக்குரிய நற்கதி இருக்கிறது. அந்தச் சித்தத்தை நன்றாக நிலைபெறும்படி நிறுத்திக் தியானித்தால், உய்யும் மார்க்கம் அதுவே. நம் சித்தத்தைச் சலனமின்றி நிறுத்தினோமானால் அதுவே நற்கதிக்கு வழி.

நற்கதி என்பது எங்கோ வெளியே சென்று தேடிப் பிடிக்க வேண்டிய ஒரு தனியுலகம் இல்லை. அது நம் சித்தத்துக்குள்ளேயே யுள்ளது. அதாவது மனம் ஆசைகளிலும் அதர்மங்களிலும் செல்லாமல் தெய்வ சிந்தனையில் நிலை நின்றால், நற்கதி பெறுவதற்கு அதுவே வழியாகும்.

**ஒன்றே குலமும்**
**ஒருவனே தேவனும்**
**நன்றே நினைமின்**
**நமனில்லை நாளுமே**
**சென்றே புகுங்கதி**
**யில்லை நும் சித்தத்து**
**நின்றே நிலைபெற**
**நீர்நினைந்து உய்மினே**

உய்ய வேண்டும் என்று ஆசைப் படுகிறவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய மூன்றை முனிவர் விளக்குகிறார்.

**மேற்கொள்ள லாவதோர்**
**மெய்த்தவம் ஒன்றுண்டு**
**மேற்கொள்ள லாவதோர்**
**மெய்த்தாளும் ஒன்றுண்டு**

[மேற்கொள்ளலாவது—மேற்கொள்ளத் தக்கது. ஓர்—ஒப்பற்ற. தாள்—திருவடி.]

மக்கள் மேற்கொள்வதற்குரிய ஒப்பற்ற தவம் உண்டு. தலையிலே சூட்டிக் கொள்வதற்குரிய இறைவன் திருவடியும் இருக்கிறது.

**மேற்கொள்ள லாவதோர்**
**மெய்ந்நெறி ஒன்றுண்டு**

கடைப்பிடிக்க வேண்டிய மெய்யான பாதையும் இருக்கிறது. ஆனால் இதெல்லாம் யாருக்குப் பயன்படும்?

**மேற்கொள்ள லாம்வண்ணம்**
**வேண்டிநின் றார்க்கே**

தீவிர விருப்பம் செலுத்தி இந்த நன்னிலையை நாடி நிற்பவர்களுக்குத் தான் இத்தனையும்! மற்றவர்களுக்கு இவற்றால் பயனில்லை. அனைத்துக்கும் அடிப்படையும், சித்திக்கு வேண்டிய உபாயமும் மனத்தில் மேற்கொள்ளும் தீவிர ஆசை.

**மேற்கொள்ள லாவதோர்**
**மெய்த்தவம் ஒன்றுண்டு**
**மேற்கொள்ள லாவதோர்**
**மெய்த்தாளும் ஒன்றுண்டு**
**மேற்கொள்ள லாவதோர்**
**மெய்ந்நெறி ஒன்றுண்டு**
**மேற்கொள்ள லாம்வண்ணம்**
**வேண்டிநின் றார்க்கே!**

உய்ய வேண்டும் என்று ஆசைப் படுவோர்கள் மேற்கொள்ள வேண்டியவை மெய்த்தவம், மெய்த்தாள், மெய்ந்நெறி ஆகிய மூன்றும்!

# புது வெள்ளம்

அத்தியாயம் முப்பத்தேழு

## அன்புச் சிறையின் துன்பத் திரை

நள்ளிரவுக்குப் பிறகு வீட்டுக்குத் திரும்பிய சாந்தா ரயில் தாமதமாகப் புறப்பட்ட காரணத்தைத் தன் தாயாரிடம் கூறிவிட்டு ஒன்றும் சாப்பிடாமல் படுக்கைக்குச் சென்றாள். படுத்து வெகு நேரம் சென்ற பிறகும் அவளுக்கு உறக்கம் வரவில்லை. சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து முருகையனுடன் ஒன்றாக நடந்து வந்ததையும், வழியில் களைத்துப் போய் உட்கார்ந்து விட்டதையும், பிறகு அவனிடம் கோபமாகப் பேசியதையும் நினைத்துக் கொண்டாள்.

‘அவரிடம் ஆத்திரப்பட்டு” அவரைக் கடிந்து கொண்டேனே, அது சரிதானா? அவரிடம் அவ்வளவு உரிமையோடு பேசுவதற்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது? வீட்டை விட்டுப் போவதாக அவர் கூறியவுடன் எனக்கு ஏன் அவ்வளவு கோபம் வந்தது? எதற்காக அவர் எதிரிலே நான் அழுது விட்டேன்? அவர் என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார்?’

தன்னையே தன்னுடைய பலவீனத்துக்காக நொந்து கொண்டாள் சாந்தா. என்றாலும் அவனிடம் கொண்டுள்ள பற்றுதலையும், அவனுக்காகத் தான் இரக்கப்பட்டதையும் அவள் தவறென்று கருதவில்லை. ‘அவர் இடமென்று புறப்பட்டு வேறு எங்கு போவார்? எப்படி இந்த ஊரில் வாழ்க்கை நடத்துவார்?’ என்னதான் இருந்தாலும் அதற்காகத் தான் அவனிடம் அழுது புலம்பி, தன்னுடைய பலவீனத்தை அவன் முன்னால் வெளிப்படுத்தியிருக்க வேண்டியதில்லை என்று மட்டும் நினைத்தாள் அவள். நிதானமாக அவனிடம் எடுத்துச் சொல்லி அவனை அங்கேயே தங்கும்படி கேட்டுக் கொண்டிருக்கலாம். ‘அவர் யாரோ? நான் யாரோ? இனிமேல் எப்படி நான் அவர் முகத்தில் விழிப்பது?’

எப்படியோ இரவுப் பொழுது கழிந்தது. வழக்கத்துக்கு முன்பாகவே படுக்கையை விட்டு எழுந்தாள். குளித்து முழுகி விட்டு அடுப்பைப் பற்ற வைத்துக் காலைச் சிற்றுண்டிக்கான ஏற்பாடுகளைக் கவனித்தாள். மூன்றாவது



மனிதன் ஒருவனுக்கும் சேர்த்துச் சமையல் செய்ய வேண்டிய அவசியம் அன்றிலிருந்து அவளுக்கு ஏற்பட்டு விட்டது. ஏனோ தெரியவில்லை; வழக்கத்துக்கு மாறான ஒரு புத்துணர்ச்சி அவளிடம் அன்று தலை காட்டத் தொடங்கியது.

காலை ஏழு மணிக்கெல்லாம் முருகையனுடைய அறைக்குக் காப்பி பலகாரம் வந்து சேர்ந்தது. சாந்தாவின் தங்கை கல்யாணி கொண்டு வந்து வைத்து விட்டுத் திரும்பினாள். மீண்டும் சற்று நேரத்தில் அவள் பாத்திரங்களை எடுத்துச் செல்வதற்காக அங்கு வந்த போது, "கல்யாணி! இவ்வளவு அதிகமாய் எனக்குக் கொடுத்தால் இரண்டு நாளைக்கொரு முறைதான் பசியெடுக்கும்!" என்று கூறிவிட்டுச் சிரித்தான் முருகையன்.

கல்யாணியே மறுபடியும் பள்ளிக்கூடத்துக்குப் புறப்படும் வேளையில் அங்கு பகல் உணவைக் கொண்டு வந்து வைத்து விட்டுச் சென்றாள். சாப்பாட்டுத் தூக்கு, கூஜாவில் தண்ணீர், இலை முதலியவை தயாராக வந்து சேர்ந்தன. ஆனால் சாந்தா மட்டிலும் வரவில்லை.

பாத்திரத்தில் மீதம் வைக்கக் கூடாது என்பதற்காக முழுவதையும் சாப்பிடுவதற்கு முயற்சி செய்தான் முருகையன். முடியவில்லை. பாதியை அப்படியே இரவுக்காக வைத்து விட்டுக் கைகழுவிக் கொண்டான்.

சற்று நேரத்துக்கெல்லாம் சாந்தாவின் நிழல் கதவருகில் தெரிந்தது. திரும்பிப் பார்த்தான். அவளோ குனிந்த தலை நிமிராமல் தூக்குச் சட்டியை எடுத்துக் கொண்டிருந்தாள்.

"இங்கேயே இருக்கட்டும்; இரவுச் சாப்பாட்டையும் முடித்துக் கொண்டு பாத்திரங்களைக் கழுவி வைக்கிறேன்" என்றான் முருகையன்.

சாந்தா அவன் பேச்சைக் காதில் போட்டுக் கொள்ள வில்லை. மௌனமாகப் பாத்திரங்களை எடுத்துக்கொண்டு மின்னலைப் போல் மறைந்து விட்டாள். பதில் பேசவும் இல்லை. அவன் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவும் இல்லை. 'திடீரென்றுஇவளுக்கு என்ன வந்துவிட்டது?' என்று வியப்படைந்தான் முருகையன்.

விகற்பமில்லாமல் அவள் சாதாரணமாகப் பழகியிருந்தால் அவனுக்கு ஒன்றுமே தோன்றியிருக்காது. ஆனால் இப்போதோ 'இவளுடைய கோபத்துக்கு ஆளாகும்படியாக நான் என்ன தவறு செய்து விட்டேன்?' என்று எண்ணிக் குழம்பத் தொடங்கினான் முருகையன்.

மாலை நேரத்தில் அவனுக்குக் காப்பி கொண்டு வந்தாள் நடிகை சுகுணா; அதோடு விற்பனைக்குத் தயாராக இருந்த தின்பண்டங்களையும் டப்பாவில் கொண்டு வந்து கொடுத்தாள்.

"அண்ணா! இந்த அறைக்கு இரண்டு சாவிகள் வைத்திருப்பீர்களே, ஒன்றைக் கொடுத்து விடுங்கள்!" என்று கேட்டாள் சுகுணா.

எதற்கென்று கேளாமல் அவளிடம் சாவிக் கொத்திலிருந்து ஒன்றைக் கழற்றிக் கொடுத்தான். பிறகு அவசரம் அவசரமாக டப்பாவை எடுத்துக்கொண்டு கடற்கரைக்குக் கிளம்பினான். எப்படியாவது அந்த அறைக்குள்ளிருந்து விடுதலை பெற்றுக்கொண்டு திறந்த வெளிக்கு வந்து விட்டால் போதுமென்றிருந்தது அவனுக்கு.

கடற்கரை வியாபாரம் அன்றைக்கு முழு வேகத்துடன் நடைபெற்றது. அங்குமிங்கும் ஓடித் திரிந்து பெட்டியைக் காலி செய்து விட்டு, சட்டைப்பையை நிரப்பிக் கொண்டு இரவு ஒன்பது மணிக்கெல்லாம் அறைக்குத் திரும்பினான். அறைக் கதவைத் திறந்தவுடன் அவன் கண்களையே அவனால் நம்ப முடியவில்லை. அவனுடைய அறைதானா அது?

துணிமணிகள், புத்தகங்கள், பத்திரிகைகள் எல்லாம் ஒழுங்காக அடுக்கி வைக்கப் பட்டிருந்தன. சுந்தரம் தான் ஊருக்குப் புறப்படும் போது, தான் படித்து முடித்த புத்தகம், பத்திரிகைகளையும் சில்லறைச் சாமான்களையும் முருகையனுக்காக விட்டுச் சென்றிருந்தான். அறை கூட்டித் துப்புரவு செய்யப் பட்டிருந்தது. மண் கூஜாவில் தண்ணீரும் அருகில் ஒரு தம்ளரும் இருந்தன. மேசை மேல் சாப்பாட்டுத் தூக்கு!

இவ்வளவையும் பார்த்த பிறகு முருகையனுக்கு மகிழ்ச்சி ஏற்படுவதற்குப் பதிலாக ஆத்திரம்தான் பற்றிக் கொண்டு வந்தது. தன்னுடைய சுதந்திரத்தில் சாந்தா குறுக்கிட்டு, அவனுடைய சட்ட திட்டங்களைத் தன்னுடைய அறைக்குள்ளேயும் நிலைநாட்டுவதாக நினைத்துக் கொண்டான். 'என்னுடைய அறை எப்படி இருந்தால் இவளுக்கு என்ன? நான் எப்படிப் போனால் இவளுக்கு என்ன? இது ஏது, பெரும் தொல்லையாக இருக்கிறது!'

அவனுக்குப் பசியெடுக்கவில்லை. ஆனால் சாப்பாடு முழுவதையும் சிரமப்பட்டுச் சாப்பிட்டு வைத்தான். சில்லறைக் காசுகளை எண்ணி ஒரு காகிதத்தில் கட்டி வைத்து விட்டுப் படுக்கையில் விழுந்தான். அறை விளக்கை அணைத்த

பிறகும், சன்னல் வழியே தெருவிளக்கு தானாக உள்ளே புகுந்து அவனுடைய இருப்பிடத்துக்கு ஒளி கொடுத்தது.

தூக்கம் வரவில்லை முருகையனுக்கு. ஆந்திர நாட்டுச் சிறைச்சாலைக்குள் அவன் கழித்த நாட்கள் அவனுடைய நினைவுக்கு வந்தன. அந்தச் சிறைக் கொட்டடி போலவே அவனுடைய அறையும் மாறி விட்டதா?

முதல் நாள் வரையில் அவன் அனு பவித்த சுதந்திரம் இப்போது அவ னுக்குக் கிடையாது. 'காலையில் ஒரு பெண் சிற்றுண்டி கொடுக்க, நடுப் பக லில் ஒருத்தி உணவு கொண்டுவர, மாலை யில் மற்றொருத்தி காப்பி கொடுத்து உபசரிக்க, இதெல்லாம் என்ன அக்கிர மம்! அல்லி ராணியின் ஆட்சியென்று சொல்வார்களே, அதுதான் இங்கே நடக்கிறதா? மற்றவர்களின் இரக்கத் துக்கு, அதிலும் பெண்களின் இரக் கத்திற்குப் பாத்திரமாக ஒருவன் இருப் பதைப் போல் கேவலம் வேறு ஒன்று மில்லையல்லவா?'

சுந்தரத்தின் வீட்டில் நடந்ததுபோல் இங்கும் நடந்திருந்தால் முருகையனுக்கு ஒரு மாறுதலும் தென்பட்டிருக்காது. சாந்தாவே கூட விகல்பமின்றிப் பழகி யிருந்தால் முருகையன் பொருட் படுத்தி யிருக்க மாட்டான். ஆனால் என்றுமில்லாதபடி, அந்த அறையைச் சுற்றி ஒரு திரை விழுந்து விட்டது போல் முருகையனுக்குத் தோன்றி யது. புலியைக் கூண்டுக்குள்ளேயே பலகைகளால் மூடி விடுவார்கள் சர்க் கஸ்காரர்கள். அப்படி ஓர் உணர்ச்சி ஏற்பட்டுவிட்டது அவனுக்கு.

திடீரென்று இரவோடு இரவாக வெளியில் கிளம்பி விட்டால் என்ன? அவனுடைய தந்தை சிவப்பிரகாசத் தின் முகம் அவன் மனத் திரையில் பளிச்சிட்டது. நேரே அவரிடம் போய்ச் சேரவும் முடியாது; அவரை மறந்து விட்டு இனி வாழவும் முடியாது.

இளம் யானைக் குட்டியை முளை யடித்துச் சங்கிலியால் பிணைத்து வைத் திருப்பதைப்போல் தன்னைத் தன் தந்தையாருடன் விதி பிணைத்து வைத் திருப்பதை உணர்ந்தான். அவர் மாத் திரம் அவனை எதிர்பார்த்து வாழும் நிலையில் இல்லாதிருந்தால், இப்படி மனத்துக்குப் பிடிக்காத வேலையைச் செய்யவும் வேண்டாம். மனத்துக்குப் பிடிக்காத இடத்தில் தங்கியிருக்கவும் வேண்டாம்.

அடுத்த நாளிலிருந்து முற்பகல் வேளைகளில் அவன் தீவிரமான வேலை வேட்டைகளில் இறங்கினான். தன்னை உணர்ச்சியற்ற ஜடமாக மாற்றிக் கொண்டு கண்ட கண்ட இடங்களி லெல்லாம் வேலை தேடித் திரிந்தான். பத்திரிகை விளம்பரங்களுக் கெல்லாம் மனு எழுதிப் போட்டான். பலன் தான் கிடைக்கவில்லை. ஆனால் கடற் கரை வியாபாரம் மட்டிலும் குறை வில்லாமல் நடந்து வந்தது.

சுந்தரம் சென்னையில் இருந்தபோது சாந்தா குழந்தைகளுடன் கடற்கரைக் குச் சென்றதுபோல் இப்போது செல்வ தில்லை. பெரும்பாலும் வீட்டுக்குள் ளேயே அடைந்து கிடந்தாள். அவ சியம் ஏற்பட்டபோது மட்டிலும் முருகையனிடம் ஓரிரண்டு வார்த்தை களைத் தலையைக் குனிந்து கொண்டே பேசுவாள். மற்றச் சமயங்களில் எவ்வ ளவு தூரம் ஒதுங்க முடியுமோ அவ் வளவு தூரம் ஒதுங்கி வந்தாள். ஆனால் அவனைக் கவனித்து உதவிகள் செய்வ தில் மட்டிலும் அவள் சற்றும் பின் வாங்கவில்லை.

பொறுக்கமுடியாத அன்புத்தொல்லை களைப் பொறுத்துக் கொண்டு, யாரி டமோ தன்னுடைய சுதந்திரத்தைப் பறிகொடுத்து விட்டவன் போல் தனக் குள் முணுமுணுத்துக் கொண்டான் முருகையன். வாய் விட்டுப் பேசுவ தற்கு அவனுக்கு ஆள் கிடைக்க வில்லை; ஆனால் பசிக்காத வேளைகளி லும் அவனுக்கு உணவு கிடைத்தது.

எப்படியாவது விடுதலை கிடைத்தால் போதுமென்று ஏங்கிக் கொண்டிருந்த வன், அடுத்த ஞாயிற்றுக்கிழமையை எதிர்பார்த்திருந்தான். சித்திராவைக் கடற்கரையில் சந்தித்து எல்லா விஷ யங்களையும் அவளிடம் மனம் விட்டுச் சொல்ல வேண்டுமென்று தோன்றி யது. நடிப்பு வாழ்க்கையை மேற் கொண்டு எவ்வளவு நாட்களுக்குத் தான் சிரமப்படுவது?

ஞாயிற்றுக் கிழமையன்று, அவன் கடற்கரைக்குச் சென்ற சிறிது நேரத் துக்கெல்லாம் மழை பிடித்துக் கொண் டது. முருகையனோ மழையைக் கண்டு வேறு எங்கும் ஒதுங்கவில்லை. கொட்டு கிற மழையைச் சிறிது கூடப் பொருட் படுத்தாமல் வழக்கமாகச் சித்திரா வைச் சந்திக்கும் தோணியின் அருகி லேயே நின்றான். குளிரும், நடுக்கமும் மற்ற எந்த உணர்ச்சிகளுமே இல் லாத மரக்கட்டைபோல் அவளுக்கா கக் காத்திருந்தான். அந்தப் பெரு மழையில் அவள் எப்படி வருவாள் என்பதைக் கூட அவன் சிந்திக்க வில்லை. இரவு எட்டு மணியாகிவிட் டது. மழையும் நின்றபாடில்லை. அது

வரையில் கொட்டிய நீரெல்லாம் அவன் தலையிலிருந்து வழிந்தது.

மழையோடு மழையாகத் தன் அறைக்குத் திரும்பி வந்தான். வாசலில் காத்திருந்த பெண்களிடம் ஒன்றுமே பேசாமல் தன் அறைக் கதவைத் திறந்து மூடிக் கொண்டான். நனைந்த துணிகளைக் கழற்றி எறிந்துவிட்டு, தலையைக் கூடச் சரியாகத் துவட்டிக் கொள்ளாமல், வைத்திருந்த சாப்பாட்டைத் திரும்பிப் பாராமல் படுக்கையில் சாய்ந்தான். வாசலில் நின்று கொண்டிருந்த சாந்தாவும் கல்யாணியும் அவன் சாப்பிடப் போவதாக நினைத்துக் கொண்டு வீட்டுக்குள் திரும்பினார்கள்.

## அத்தியாயம் முப்பத்தெட்டு

# வெளியேற்றம்

**ம**றுநாள் காலையில் வழக்கம்போல் முருகையனுக்குச் சிற்றுண்டியை எடுத்துக் கொண்டு சென்ற கல்யாணி பதற்றத்தோடு திரும்பி வந்து சாந்தாவிடம் ஏதோ கூறினாள். சாந்தாவுக்கு அதைக் கேள்வியுற்றவுடன் நெஞ்சு ஒரு கணம் நின்றுவிட்டது. பரபரப்போடு ஓட்டமும் நடையுமாகச் சென்று முருகையனின் அறைக்குள் நுழைந்தாள்.

மேஜை மேல் அவள் வைத்துச் சென்ற இரவுச் சாப்பாடு அப்படியே இருந்தது. அவன் களைந்து போட்ட ஈரத் துணியிலிருந்து வழிந்த தண்ணீர் அறைக்குள் தேங்கிக் கிடந்தது. முருகையன் கண்களைத் திறக்க முடியாமல் முனகியபடியே படுத்துக் கொண்டிருந்தான். அவனுடைய மூச்சுக் காற்று நெருப்பென அந்த அறைக்குள் பரவியிருந்தது.

சாந்தா முருகையனை ஒரு விநாடி உற்றுப் பார்த்தாள். குளிர் நடுக்கம் தாங்காததுபோல் அவன் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. மெதுவாக நெற்றியில் தன் கரத்தை வைத்துப் பார்த்தாள். காய்ச்சல் அவள் கரத்தைச் சுட்டுப் பொசுக்கியது. வைத்த கரத்தை எடுக்க மறந்து மாலை மாலையாகக் கண்ணீர் வடித்தாள் சாந்தா. முருகையனுக்கு ஒன்றுமே தெரியவில்லை.

தன் வீட்டுக்குச் சென்று 'தர்மாமீட்டரை' எடுத்துக் கொண்டு ஓடி வந்தாள். 105 'டிகிரி' இருந்தது ஜுரம். பிறகு சாந்தா தன்னையே மறந்து விட்டாள்; அவனைப் பற்றி உலுக்கினாள்.

''எங்கே, கண்ணைத் திறந்து பாருங்கள்! கண்ணைத் திறந்து பாருங்கள்!''

முருகையன் கண் விழித்தான். முதலில் சாந்தாவின் முகம் மங்கலாகத் தெரிந்தது. பிறகு பளிச்சென்று தெரிந்தது. அவளுடைய கண்ணீர் தன்னை நனைப்பதையும் கண்டுகொண்டான். புன்னகை புரிய முயன்றான்.

கதவருகில் நின்ற கல்யாணியை அழைத்து, உடனே சென்று அடுத்த தெருவிலிருந்த டாக்டரை அழைத்து வருமாறு கூறினாள் சாந்தா. அதற்குள் மளமள வென்று அறையை ஒழுங்கு செய்யத் தொடங்கினாள். ஈரத் துணிகள் குழாயடிக்குப் போய்ச் சேர்ந்தன. அறையில் தேங்கியிருந்த தண்ணீரைத் துடைத்து விட்டாள். சாம்பிராணிப் புகை அங்கே நறுமணத்தோடு கமழ்ந்தது.



டாக்டர் வந்து ஊசி போட்டு, மருந்தெழுதிக் கொடுத்துச் சென்றார். ''அபாயம் ஒன்றுமில்லை; சீக்கிரத்தில் குணமாகி விடும்'' என்று அவர் கூறியதைக் கேட்ட பிறகுதான் சாந்தாவுக்கு உயிர் வந்தது.

**அ**ன்று முற்பகல் முழுவதும் முருகையன் கண் விழித்துப் பார்த்த போதெல்லாம் சாந்தா அவனருகில் இருந்தாள். அதுநாள் வரையில் அவனிடம் பேசாமல் இருந்ததற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்வதுபோல் ஏதேதோ பேசினாள். மருந்தை ஊற்றிக் கொடுத்தாள். கனிவு மிகுந்த

விழிகளால் தன் அன்பைச் சொரிந்தாள். அக்கம்பக்கத்து வீடுகளில் இருந்தவர்களும் முருகையனின் அறைக்குள் வந்து எட்டிப் பார்த்துச் சென்றார்கள்.

முதல் வீட்டுக்கார அம்மாள் பார்த்த பார்வை மட்டிலும் சாந்தாவுக்கு என்னவோ போலிருந்தது. அக்கறையோடு விசாரிப்பவள்போல் விசாரித்து விட்டு, குத்தலாக ஒரு சொல் சொல்லிவிட்டுத்தான் அந்த இடத்தை விட்டு அவள் நகர்ந்தாள்.

வெளியில் மழை நின்றபாடில்லை. அடை மழைபோல் விட்டு விட்டுப் பெய்து கொண்டிருந்தது. வியாபாரத்துக்கு வேண்டிய தின்பண்டங்களைச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படாததால், தன் தாயாரைக் கவனித்த நேரம் போக மற்றப் பொழுதெல்லாம் முருகையனுடன் இருந்தாள் சாந்தா.

ஞாயிற்றுக்கிழமை யன்று இருண்டு விட்ட வானம் நான்கைந்து நாட்கள் வரையில் சூரியனை வெளியில் விடவில்லை. முருகையன் சிறிது சிறிதாகத் தேறிக்கொண்டு வந்தான். உடல் நலத்தைப் பற்றி அவனுக்குக் கவலை இல்லை; பிழைப்பைப் பற்றிய கவலை அவனை வாட்டத் தொடங்கியது. வருமானமில்லாத நோயாளியாக இப்படியே படுத்துக் கிடந்தால் சாந்தாவுக்கு எவ்வளவு சிரமம்?

சாந்தாவைப் பல வேளைகளில் கண்ணிமைக்காமல் உற்றுப் பார்த்திருக்கிறான் முருகையன். நோய் வந்து அவன் படுப்பதற்கு முன் மனிதர்கள் தனியாகவே வாழ்ந்துவிட முடியும் என்றுதான் அவன் நம்பிக்கொண்டிருந்தான். மனிதருக்கு மனிதர் துணையாக இருப்பதில் ஒரு மகத்தான வலிமை இருக்கக்கூடும் என்ற உண்மை இப்போதுதான் அவனுக்குப் புலப்பட்டது. 'சாந்தாவுக்குப் பதிலாக இங்கே சித்திரா இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்று அவனால் எண்ணாமல் இருக்க முடியவில்லை. சித்திராவை நினைத்துக்



கொண்டுதான் அவன் அடிக்கடி சாந்தாவைப் பார்த்துப் பெருமூச்சு விட்டான். சாந்தாவுக்கு அதெல்லாம் எப்படித் தெரியும்?

சாந்தா கடற்கரையில் வந்த மழையைத் தனக்குள் வாழ்த்தினள். அவனுக்கு வந்த காய்ச்சலையும் வாழ்த்தினள். அதையும்விட அந்தக் காய்ச்சல் சிறிது சிறிதாக அகன்று, அவன் உடல் தேறி வருவதையும் மனதார வாழ்த்தினள்.

ஒரு சமயம் முருகையன் சாந்தாவிடம் சொல்லிச் சித்திராவுக்குச் செய்தி அனுப்பலாமா என்று கூட நினைத்தான். சித்திரா ஓடோடியும் அவனைக் காண வருவாள் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. ஆனால் வந்து பார்த்துவிட்டுத் தன் வீட்டுக்கு அவள் அழைத்தால் என்ன செய்வது?

சாந்தாவின் வீட்டார் ஏழைகளாக இருந்தும்கூட, முருகையனுக்கு அவள் செய்யும் உதவிகளைக் கண்டு அவர்கள் முகம் சுளிப்பதில்லை. சாந்தாவின் தாயாரும் தங்கையுமே அவனிடம் வந்து ஆறுதல் சொல்லிச் செல்கிறார்கள். சித்திராவின் வீட்டில் இப்படியெல்லாம் நடக்குமா? — சித்திராவிடம் தெரிவிக்க வேண்டும் என்ற யோசனையைக் கைவிட்டு விட்டான் முருகையன்.

''சாந்தா! என்னால் உனக்கு எவ்வளவு துன்பம்?'' என்று அவன் அடிக்கடி சொல்வதுண்டு. அவளும் பல முறைகள் இதைப் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். பிறகு அவளுக்கே கோபம் வந்து விட்டது.

''நீங்கள் இதைச் சொல்லிக் காட்டுவதுதான் எனக்குத் துன்பமாக இருக்கிறது. இதற்கெல்லாம் இல்லாமல் மனிதப் பிறவி வேறு எதற்குத்தான் இருக்கிறதோ, தெரியவில்லை!''

மனிதப் பிறவிகளுக்குள்ளே சாந்தா ஒரு தனிப் பிறவி என்பதை இந்தச் சில தினங்களுக்குள் நன்றாகக் கண்டுகொண்டான் முருகையன். அவளிடமிருந்த சக்திக் கனல் அவளை எந்நேரமும் இன்முகத்தோடும் சுறுசுறுப்போடும் இயக்கிக்கொண்டேயிருந்தது. 'பிறருக்கு உதவியாக இருக்கிறேம்' என்ற நினைவே சிறிதும் இல்லாமல் அவள் மற்றவர்களுக்கு உதவி செய்து கொண்டிருந்தாள். அவளால் ஒரு கணமும் ஓய்ந்திருக்க முடியவில்லை.

அறைக்குள் அவள் இருந்தால் அந்த அறையே ஒரு தனிக் களை பெற்றிருந்தது. முருகையனுடைய நோய் குணமடைந்ததற்குக் காரணம் டாக்டரும் மருந்துகளும் மட்டிலும் இல்லை. சாந்தாவின் பேச்சு, பார்வை, செயல் எல்லாமே முருகையனுக்குத் துணையாக நின்றன.

காய்ச்சல் முற்றிலும் குணமடைந்து தலைக்குத் தண்ணீர் விட்டுக் கொண்ட அன்றைக்குப் பிற்பகல் அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தான் முருகையன். அறையில் வேறு யாருமில்லை. பாதியில் தூக்கம் கலைந்தவுடன் அடுத்த வீட்டிலிருந்து ஏதோ பேச்சுக் குரல் கேட்டது. அவனுடைய பெயரும் சாந்தாவின் பெயரும் அதில் கலந்திருந்ததால் உற்றுக் கேட்டான்.

''சாந்தாவைப் பார்த்தாயா? அந்தப் பையன் காய்ச்சலால் விழுந்தவுடனே, அவனுக்காக என்ன பாடு படுகிறதை நீயும் நல்லாப் பார்த்து வைச்சுக்க! இனிமேலாவது வீட்டு மனிதனுக்குத் தலைவலி, கால் வலி வந்தால், முகத்தைச் சுளித்துக் கொண்டு முணுமுணுக்காதே!'' என்றது ஆண் குரல்.

''என்ன சொன்னீங்க?'' என்று எரிந்து விழுந்தாள் பெண். ''உங்களுக்கு இப்படிப் பேச வெட்கமாயில்லே? என்னையும் அவளையும் ஒரே மாதிரிச் சேர்த்து வைத்துப் பேசுறீங்களே, இது உங்களுக்கே அழகாயிருக்கா?''

''சேர்த்து வைத்துப் பேசக் கூடாதுதான், காமாட்சி! உனக்கும் சாந்தாவுக்கும் ஏணி வைச்சாலும் எட்டாதுதான். கஷ்டப்படற காலத்திலே உதவி செய்கிற அந்தப் பெண் எங்கே? சுகப்படுகிற காலத்தில் மட்டும் சிரித்துப் பேசுகிற நீ எங்கே? — நான் கீழே படுத்த சமயத்தில் ஒரு வேளைக் கஞ்சியாவது எனக்கு நீ முணுமுணுக்காமல் வைச்சுக் கொடுத்திருக்கிறியா?''

அவ்வளவுதான்! காமாட்சி காளி தேவியாக மாறி விட்டாள். அவளுக்கு வந்த கோபத்தில் அவள் தன் கணவனைத் தூற்றவில்லை. அவளுடைய ஆத்திரம் முழுவதும் இப்போது சாந்தாவின் மேல் திரும்பியது.

''பெண்ணா அது? பிசாசு! யாரோ தெருவில் திரிந்த பயலை வீட்டில் கொண்டு வந்து வைச்சுக்கிட்டு அவனுக்காக ஆடி ஓடித் திரியறவளா பெண்? நான் அவளைப் பெற்ற தாயாக இருந்தால், இதற்குள் அவளை நஞ்சு வைத்தே கொன்றிருப்பேன். — இப்படியெல்லாம் நடந்தால் இதற்கு என்ன அர்த்தம் என்று உங்களுக்குத் தெரியாது. அவனுக்காக இத்தனை பாடு படுகிறாளே அவளுக்கு அவன் என்ன உறவு? கல்யாணம் செய்து கொள்கிறவளாயிருந்தால் முதலில் கல்யாணத்தைச் செய்து கொண்டு பிறகு இப்படித் தலைகீழாக நடக்கணும். இன்னும் அவளுக்குக் கல்

யாணமாகலே; அவளோடே தங்கச்சிக்கும் கல்யாணம் நடக்க வேண்டியிருக்கு. இதெல்லாம் அந்தக் கிழவிக்குத் தெரிஞ்சால்தானே? இன்னைக்கே இதை நான் அந்த அம்மாகிட்டே கேட்கிறேன் பாருங்க. ஒண்ணு, இந்த ஸ்டோரிலே அவுங்க குடியிருக்கணும்; இல்லே, நம்ப குடியிருக்கணும்!''

காமாட்சியின் கணவன் அவளைச் சமாதானம் செய்யச் செய்ய அவள் மேலே மேலே போய்க் கொண்டிருந்தாள். அவளுடைய குரலை அவள் உயர்த்திப் பேசியதற்குக் காரணம் அக்கம் பக்கத்தாரின் காதில் அவள் பேச்சு விழவேண்டும் என்பதுதான்.

காமாட்சிக்கும் சாந்தாவுக்கும் நேரடியான விரோதம் ஒன்றும் கிடையாது. சாந்தாவின் இளமையும் சுறுசுறுப்பும் பெருந்தன்மையான குணமும் அவளுக்கு இல்லே. சுந்தரத்தின் வீட்டார் இருந்தபோது சுந்தரத்துக்குப் பயந்து கொண்டு காமாட்சி பொறுத்திருந்தாள்.

காமாட்சி உல்லாசவாசி. சாந்தா உழைத்துப் பழகியவள். காமாட்சிக்குச் சீரும் செட்டும் சிக்கனமும் தெரியாது; சாந்தாவுக்கு எளிய வாழ்க்கைதான் வாழத் தெரியும். ஏற்கெனவே சாந்தா பலமுறை காமாட்சிக்குக் கடன் கொடுத்திருக்கிறாள். கொடுத்த கடனை அடைக்காதபோது மேலும் அவள் தனக்குக் கடன் கொடுக்கவில்லையே என்று காமாட்சிக்கு ஆத்திரம். கடன் வாங்கிக் கொண்டு சினிமாவுக்குப் போகிற பழக்கம் காமாட்சியிடம் உண்டு. எப்படி அவளுக்குச் சாந்தாவைப் பிடிக்கும்?

படுக்கையில் படுத்திருந்த முருகையனின் கண்கள் குளங்களாக மாறின. காமாட்சியின் பேச்சில் இருந்த ஏச்சு மொழிகளைத் தள்ளி விட்டு, அதில் இருந்த உண்மைகளைப் பற்றி யோசனை செய்தான். ஆண் பிள்ளை இல்லாத ஒரு குடும்பத்தில் கல்யாண வயதில் இரண்டு பெண்கள் உள்ள குடும்பத்தில், தன்னைப் போல் ஒருவன் பழகுவதில் என்ன நியாயமிருக்கிறது?

சாந்தாவின் அன்பில் எந்த நோக்கத்தையும் உறவையும் கற்பனை செய்து கூட அவனால் பார்க்க முடியவில்லை. தான் அங்கு இருந்தால் முழுத் தவறும் தன்னுடையதுதான் என்பதை மட்டும் உணர்ந்து கொண்டான். தன் பொருட்டு எத்தனை பெரிய அவமானத்துக்கு அவள் உள்ளாக வேண்டியிருக்கிறது?

அவசரம் அவசரமாக எழுந்தான். பெட்டி படுக்கையைக் கட்டி அறைக்கு வெளியே வைத்தான். அவற்றை

தருமத்தைக் காக்கத் தைரியம் வேண்டும். தைரியத்தை இழந்தோமானால் மனைவி மக்களையுமே காக்க முடியாது. தருமத்தைக் காக்க அதைவிடத் தைரியம் வேண்டும். அச்சத்தை அகற்றி அனைத்திலும் விலையுயர்ந்த பொருளாகிய தருமத்தைக் காப்போமாக. நம் அச்சத்தை நீக்க ஆயுள் முழுவதும் காந்தியடிகள் முயன்றார். பாரதியும் அதற்காகவே பாடிப் பாடி ஆயுளைக் கழித்தார். அச்சம் வேண்டாம். இதுவே மந்திரம்.

— ராஜாஜி

எங்கே எடுத்துக் கொண்டு போவதென்று அவனுக்கு விளங்கவில்லை. வெளியில் போய் எப்படி வாழ்வதென்றும் புரியவில்லை. அறையைப் பூட்டிச் சாவியை எடுத்துக் கொண்டு சாந்தாவின் வீட்டுக்குள் நுழைந்தான்.

''நான் போய்விட்டு வருகிறேன் சாந்தா! — போய் வருகிறேன் அம்மா! கல்யாணியிடமும் சொல்லி விடுங்கள்.''

திடுக்கிட்டாள் சாந்தா. அவனை வெருண்டு நோக்கினாள்.

''எனக்கு இந்த வேலை சிறிதுகூடப் பிடிக்க வில்லை. எப்படியும் ஒரு வேலை தேடிக் கொண்டு வந்து உங்களைப் பார்க்கிறேன்'' என்றான் முருகையன்.

சாந்தா அவனருகில் வந்து, ''என்ன காரணம்? சொல்ல மாட்டீர்களா?'' என்று கண் கலங்கக் கேட்டாள்.

''காரணம் எனக்கே தெரியவில்லை. உன்னுடைய அன்பு இந்த ஜன்மத்தில் என்னால் மறக்க முடியாத அன்பு. எனக்கு இந்த வேலை வெறுத்துவிட்டதென்று சொல்கிறேனல்லவா? அதுவே காரணமாகவும் இருக்கும்.''

''அப்படியானால் அறையில் தங்கினால் என்ன?''

''வேண்டாம், சாந்தா! நான் வந்து அடிக்கடி உங்களைப் பார்க்கிறேன்.''

முருகையன் எங்கு போகிறோம் என்பதையே மறந்து தெருவில் நடந்தான். அடுத்த வீட்டுக் காமாட்சி அக்கம் பக்கத்தில் உள்ளோரிடம் அந்த நிமிஷத்தில் கூடச் சாந்தாவைப் பற்றி ஏச்சு மழை பொழிந்து சிரித்துக் கொண்டுதானிருந்தாள். முருகையனுடைய போக்குக்குச் சிறிது சிறிதாகச் சாந்தாவுக்குக் காரணம் புரிந்து கொண்டு வந்தது. அவளால் கண்ணீரைத் தடுக்க முடியவில்லை. தாயாருடைய அரவணைப்புக்கும் ஆறுதல் மொழிகளுக்கும் ஏங்கித் திரும்பினாள்.

(முதல் பாகம் முற்றிற்று)



பத்மநாப ஐயங்கார் சென்னை திரும்பினார். முப்பது ஆண்டுகளுக்கு மேலேயே வட இந்தியாவில் பல ஊர்களிலும் வாழ்க்கை நடத்தி விட்டு, தன்னந்தனியாகத் தனி மரமாகத் திரும்பி வந்து சேர்ந்தார். சென்ட்ரல் ஸ்டேஷனில் வந்து இறங்கும்போது முகம் தெரிந்தவர்கள் யாருமே அங்கு தென்படவில்லை. ஸ்டேஷனுக்கு வரும்படி யாருக்கும் அவர் கடிதம் எழுதவுமில்லை. யாருக்கு எழுதுவது? போர்ட்டரை அழைத்துச் சாமான்களைத் தூக்கிக் கொள்ளச் சொன்னார். டிக்கட்டைக் கொடுத்து விட்டு ஸ்டேஷன் கட்டிடத்தை விட்டு வெளியே வந்ததும், திசைகளே அற்ற ஓர் உலகத்தில் கால் வைத்தது போல் இருந்தது. போர்ட்டர் மட்டும் இல்லாவிட்டால் வெகு நேரம் அங்கேயே திகைத்து நின்றிருப்பார் பத்மநாப ஐயங்கார்.

''என்ன சாமி, டாக்ஸியா? ஆட்டோ ரிக்ஷாவா?'' என்று கேட்டான் போர்ட்டர்.

''என்னப்பா?....'' என்று அவனைப் பார்த்துக் கேட்டு விட்டு அவன் இரண்டாவது தடவையும்

# யாருக்குக்

சொன்ன பிறகு அவருக்கு ஒரு பிரக்ஞை வந்தது; ஒரு பிரக்ஞை அற்றது.

''ஸ்டேஷனிலேயே நிற்க முடியாது. எங்காவது போய்த்தான் ஆக வேண்டும்.''——இந்த உணர்வு தட்டியது.

'எங்கே போவது? எதற்காகப் போவது?' என்ற நினைவோ அடியோடு அழிந்து விட்டது.

சிறு குழந்தையைப் போல், ''எது சௌகரியம்?'' என்று போர்ட்டரை விசாரித்தார். அப்புறம் ''எதையாவது கூப்பிடு'' என்றார்.

அவர் கொண்டு வந்திருந்த சாமான்களுக்கு—ஒரே ஒரு பெட்டியும், ஒரே ஒரு படுக்கைக் கட்டும்தான் — ஆட்டோ ரிக்ஷாவே போதும் என்று போர்ட்டர் நினைத்தான். ஆனால் எதிரே டாக்ஸிதான் நின்றது. ஆகவே அதில் கொண்டுபோய்ப் பெட்டியையும் படுக்கையையும் வைத்தான். டாக்ஸியின் பின்கதவையும் திறந்தான். ஐயங்கார் ஏறி உட்கார்ந்து கொண்டு போர்ட்டருக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து அனுப்பினார்.

''எங்கே சாமி?'' என்று கேட்டான் டாக்ஸி டிரைவர்.

அது யாருக்குத் தெரியும்? பதில் சொல்ல முடியாத கேள்விகளையே உலகம் தம்மிடம் வேண்டுமென்றே கேட்டுக் கொண்டிருப்பது போல் அவருக்குத் தோன்றியது. இத்தனை கேள்விகளுக்கும் பதில் சொல்வதற்குத் தயார் செய்து கொள்ளாமல் டில்லியில் ரயில் ஏறியாகிவிட்டது. இனி என்ன செய்வது?

''மாம்பலம் போ'' என்றார் ஐயங்கார். மறு நிமிஷம் ''இல்லை. நுங்கம்பாக்கம் வரையில் போனால் போதும்'' என்று மாற்றிச் சொன்னார்.

டாக்ஸி பூந்தமல்லி ஹைரோடில் வலது பக்கம் திரும்பியது. ஐயங்காருக்கு ஒரு வேடிக்கையாகவே இருந்தது. அவர் சென்னைக்குத் திரும்பியது, டாக்ஸி நுங்கம்பாக்கத்தை நோக்கித் திரும்புவது இரண்டுக்கும் ஒரே அர்த்தம்தான்: அதாவது, அர்த்தமில்லை என்ற அர்த்தம்.

திரும்புவதற்கு ஓர் இடம் இருக்க வேண்டும்; ஒரு காரணம் இருக்க வேண்டும்! இரண்டுமே இல்லை. ஆனால் பரிதாபகரமாக, இரும்பாதிருப்பதற்கும் ஓர் இடம் கிடையாது. ஒரு காரணமும் கிடையாது. கடலில் விழுந்த துரும்பு அங்கும் இங்கும் பாழில் திரிந்து கொண்டிருந்த பாவனையில் டில்லியிலிருந்து சென்னைக்குத் திரும்பி விருக்கிறோம் — தப்பு, வந்திருக்கிறோம் — என்று நினைத்துக் கொண்டு நகரசபை, எழும்பூர் ஸ்டேஷன், மியூஸியம் போன்ற ஒவ்வொரு கட்டடத்தையும் பார்த்துக் கொண்டு வந்தார். டாக்ஸி நுங்கம்பாக்கத்துக்கு வந்து விட்டது.

''எந்தத் தெரு சாமி?''

''வில்லேஜ் ரோடு.''

''நம்பர்?''

வீட்டு நம்பரைச் சொன்னார் ஐயங்கார்.

அடுத்த நிமிஷமே டாக்ஸி ஒரு சின்னஞ்சிறு வீட்டின் முன் நின்றது. பழைய காலத்து வீடு. வாசலில் இரண்டு திண்ணைகள் இருந்தன. ஒவ்வொரு திண்ணைக்கும் மேலே ஒரு மாடக் குழி; ஒவ்வொரு ஜன்னல். ஜன்னலின் மேல் சட்டத்தை முன்புறச் சாய்ப்பு மறைத்துக் கொண்டிருந்தது. திறந்திருந்த ஜன்னல் வழியாகவோ வாசல் வழியாகவோ உட்புறத்தில் இருந்த எதையுமே பார்க்க முடியவில்லை. அந்தப் பட்டப் பகலிலும்கூட உள்ளே இருட்டு.



# கட்டிய வீடு?

சு. அழகிரிசாமி

டாக்ஸியிலிருந்து இறங்கிய பத்மநாப ஐயங்கார் மிகப் பெரிய ஏமாற்றத்துக்குத் தம்மைத் தயார் செய்து கொண்டு வாசல் நிலையை ஒட்டி நின்றார். திறந்திருந்த கதவை இலேசாகத் தட்டினார். ஒரு தடவை, இரண்டு தடவை......மூன்றாவது தட்டுக்குப் பிறகு தான் ''யாரது?'' என்று கேள்வி ரூபத்தில் பதில் வந்தது.

முன் பின் தெரியாதவர்களாக இருந்தால் தம்மை இன்னார் என்று சொன்னாலும் பயனில்லை என்பதற்காக, கேள்விக்குப் பதில் கேள்வியாக ''நரசிம்மாச்சாரியார் ஸ்வாமி இருக்கிறாரா?'' என்று கேட்டார் அவர்.

உள்ளே இருந்து ஊன்றிய கம்போடு தள்ளாடித் தள்ளாடி ஒரு கிழவர் நடந்துவந்தார். அவருக்குப் பின்னால் ஓர் அம்மாள் வந்தாள். கிழவரின் புறத்துக்கு மேலாகத் தன் தலையைத் தூக்கிப் பார்த்துக் கொண்டே அவள் நடந்து வந்தாள். இருவரும் மூக்குக் கண்ணாடி போட்டிருந்தார்கள்.



''யாரப்பா?....''

கிழவரின் விசாரிப்பு முடியு முன்னரே, பத்மநாப ஐயங்கார் அந்த இருவர் காலிலும் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். ஏமாற்றத்துக்கு ஆளாகாமல் தப்பினோம் என்ற ஆனந்தத்தால் சற்று அதிக நேரமே சாஷ்டாங்கமாகக் கிடந்தார்.

இருவருக்கும் ஒன்றும் புரியவில்லை. முன் பின் தெரியாத ஒரு மனிதன் இப்படி எதற்காகக் காலில் விழுந்து வணங்குகிறான்?

பத்மநாப ஐயங்கார் எழுந்து நின்றார்.

''பத்மநாபன் வந்திருக்கிறேன்....''

''பத்மநாபனா?.... எந்த....?''

அதற்குள் அந்த அம்மாள், ''பத்மநாபா, எப்போ வந்தேப்பா? வா.... (கணவரைப் பார்த்து) நம்ப ஸ்ரீபெரும்புதூர் வீரராகவாச்சாரி பிள்ளை பத்து.... பத்மநாபன் வந்திருக்கிறான்'' என்று கிழவருக்கு வந்தவரை அறிமுகப்படுத்தி வைத்தாள்.

கிழவர் ஊன்றிய தடியை அப்படியே விட்டு விட்டுப் பத்மநாப ஐயங்கார் மீது சாய்ந்து அவரைக் கட்டிக் கொண்டார்.

இருவர் கண்களிலும் நீர் கசிந்தது.

அம்மாள் ஓர் ஓரமாக வந்து பத்மநாப ஐயங்காரின் முகத்துக்கு எதிரே நின்று கொண்டு, ''வேது எங்கே, பத்து? அழைச்சுண்டு வரலையா?'' என்று கேட்டாள்.

''இல்லே'' என்று சொல்லி விட்டு விழுங்கினார் ஐயங்கார்.

நரசிம்மாச்சாரியார் அவருடைய கையைப் பிடித்துத் திண்ணையில் உட்கார வைத்துத் தாமும் அருகில் உட்கார்ந்தார். ஐயங்காரை ஒரு முறை உச்சியிலிருந்து உள்ளங்கால் வரையில் புருவங்களைச் சுருக்கி விழித்துக் கொண்டு பார்த்தார்.

''எல்லோரும் சௌக்கியமா? குழந்தைகள் எங்கே இருக்கிறார்கள்?'' என்று கிழவர் நரசிம்மாச்சாரியார் கேட்டார்.

''பகவான் கிருபையால் எல்லோரும் சௌக்கியம். ஆளுக்கு ஓரிடத்தில் உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்தாலும் யாருக்கும் எந்தக் குறையும் இல்லே....''

''வேது யாரோடே இருக்கிறாள்? சௌக்கியமா இருக்கிறாளா?''

''யாரோடே இருந்தாளோ, அவரோடே இருக்கிறாள். நம்மோடே இருந்த காலம் முடிந்து விட்டது.

''என்ன சொல்றே பத்து?.....'' என்று திகிலுடன் கேட்டாள் அந்த அம்மாள்.

அதுவரையும் ஐயங்காருடைய உருவத்தைத் தம் மனதில் பதிய வைப்பதற்காகக் கண்களைப் பலவிதமாகச் சுருக்கியும் மூடியும் திறந்தும் இமை கொட்டியும் பார்த்துக்கொண்டிருந்த நரசிம்மாச்சாரியார்கூட, திகிலடைந்து விட்டார் என்பதை அவருடைய முகத்தில் எல்லாச் சலனங்களும் திடீரென்று நின்று விட்டது எடுத்துக் காட்டியது.

''வேது போய்ச் சேர்ந்து விட்டாள். ஆறு மாதங்களுக்கு மேலே ஆகிவிட்டது...'' என்று ஒரு வித உணர்ச்சிக் கலப்புமில்லாமல் சொன்னார் ஐயங்கார்.

''என்ன சொல்றே பத்து?'' என்று அலறிய அம்மாள் தலையைக் குனிந்து கொண்டு விம்மி விம்மி அழுதாள். மூக்குக் கண்ணாடியில் பட்ட கண்ணீர்த் துளிகள் பார்வையை மறைத்தன.

''என்ன பத்து? என்ன செய்தது? ஒரு கடுதாசிகூடப் போடலையே அப்பா நீ!'' —இது கிழவர்.

''கடுதாசியா?'' கடுதாசி போடவில்லைதான். ஐயங்காருக்குக் குரல் விக்கியது. ஒரு நிமிஷத்தில் தம் நினைவை உதறி விட்டு, ''வரதன் எங்கே?...'' என்று பேச்சை மாற்றினார்.

இருவருமே பதில் சொல்லவில்லை.

''சென்னையில்தான் இருக்கிறானா? வெளியூரில் வேலையா?''

''மற்றதுக்குத்தான் கடுதாசி போடலை லென்றாலும் இதற்காவது ஒரு கடுதாசு போட்டிருக்கக் கூடாதா பத்து? உன்னைப் பார்த்ததும் தெருவை எட்டிப் பார்த்தேனே. இனி அந்த மகாலட்சுமியை எப்போ பார்க்கப் போகிறேண்டா?'' என்று சொல்லிவிட்டுத் திரும்பவும் அழுதாள் அந்த அம்மாள்.

கிழவர் குறுக்கிட்டு ''எல்லாம் பகவான் சித்தம். அதை யாராலும் மாற்ற முடியாது'' என்று ஐயங்காருக்கும் தம் மனைவிக்குமே ஆறுதல் சொல்லித் தேற்ற முயன்றார்.

ஐயங்காரின் மனைவி இறந்த செய்தியை மீண்டும் மீண்டும் பிரஸ்தாபித்து ஆறியும், ஆறுமலும் இருக்கும் புண்ணைக் கிளற விரும்பவில்லை கிழவர். தம் மனைவியைப் பார்த்து,



''முதலில் பத்து ஸ்நானம் பண்ணட்டும். எல்லாம் எடுத்து வை'' என்றார். ''பத்து, வா, உள்ளே'' என்று சொல்லி விட்டு நரசிம்மாச்சாரியார் எழுந்தார். பெட்டி படுக்கைகளை உள்ளே கொண்டு போய் வைப்பதற்காகக் கிழவர் அவற்றின் அருகில் போனதும், பத்மநாப ஐயங்கார் தூக்கத்திலிருந்து விழித்தவர் போல் உணர்வு தட்டித் துள்ளி எழுந்தார். ''வேண்டாம், வேண்டாம்'' என்று கிழவரைத் தடுத்து விட்டு இரண்டு உருப்படிகளையும் கைக்கு ஒன்றாகத் தூக்கினார். அம்மாளைப் பின்பற்றி உள்ளே சென்று அந்த இருட்டு அறையிலும் அதிக இருட்டாக இருந்த ஒரு மூலையில் கொண்டு வைத்தார்.

கொல்லைக் கிணற்றோரம் பூஞ்செடிகளுக்குப் பக்கமாக நின்று ஐயங்கார் குளித்தார். அம்மாள் சமையல் அறையில் வேலையாக இருந்தாள். நரசிம்மாச்சாரியார் வெளித் திண்ணைக்கு வந்து ஒரு தடவை பெருமூச்சு விட்டார். கண்ணீர் கசிந்திருப்பதாக அவருக்கு ஒரு பிரமை. அதனால் கண்ணாடியைக் கழற்றி விட்டு ஒரு தடவை கண்களைத் துடைத்துக் கொண்டார்.

'வேதவல்லி பாக்கியம் செய்தவள். சுமங்கலியாகவே போய்ச் சேர்ந்து விட்டாள். இன்னும் ஒரு பத்து வருஷம் இருந்திருக்கலாம். அப்படி என்ன வயசாகி விட்டது? மிஞ்சிப் போனால் ஐம்பது இருக்கும். எனக்குத் தெரிய மரப்பாச்சி வைத்து விளையாடுகிற குழந்தை. என்ன செய்வது? அவளுடைய சுமங்கலி பாக்கியத்தைக் காப்பாற்றுவதற்கு இவன் ஏகாங்கியாகித்தான் தீர வேண்டும். ஒருவர் பாக்கியத்தை மற்றொருவர் நஷ்டப்பட்டுக் கொடுத்தாக வேண்டியிருக்கிறது. இந்த விதியை யெல்லாம் மனிதனால் எங்கே கடக்க முடியும்?' — இப்படி என்னென்னவோ யோசனை பண்ணிக் கொண்டிருந்தார்.

அதற்குள் பத்மநாப ஐயங்கார் குளித்து விட்டு வந்து பெட்டியைத் திறந்து சலவைத் துணிகளையும் எடுத்து உடுத்திக் கொண்டு வாசல்திண்ணைக்கு வந்து விட்டார்.

''பத்து, ஸ்நானம் ஆச்சா?''

''முடிஞ்சுது. நாளெல்லாம் ஸ்நானம் பண்ணிக் கொண்டிருக்கலாம் போலிருக்கிறது. ரொம்பக் காலத்துக்கு அப்புறம் இந்த ஜலத்தை வாயில் விட்டுப் பார்த்தேன். அதே மாதிரி கற்கண்டாகவே இருக்கிறது. பக்கத்திலே பூஞ்செடிகள். துவைப்பதற்கு நல்ல கல். வேஷ்டி துவைத்துக் குளித்துத்தான் எத்தனை வருஷங்கள் ஆகின்றன...''

பத்மநாப ஐயங்கார் தம் துயர நினைவை மறந்து விட்டார் என்று நினைந்து ஆறுதல் அடைந்த நரசிம்மாச்சாரியார், ஐயங்காருடைய பிள்ளைகளைப் பற்றி விவரமாக விசாரிக்கத் தொடங்கினார்.

குளித்தவருக்குக் காப்பி சாப்பிடலாம்போல் இருந்தது. ஆனால் வீட்டில் இருந்த இருவருமே காப்பி சாப்பிடாத வைதிகங்கள். சாப்பாட்டுக்கு இன்னும் ஒரு மணி நேரமாவது ஆக வேண்டும். அவ்வளவு நேரத்தையும் பேச்சில் கழிப்பதைத் தவிர வேறு வழியில்லை. அதனால் தம்முடைய புதல்வர்களைப் பற்றிய செய்திகளை விஸ்தாரமாகவே ஐயங்கார் எடுத்துச் சொன்னார்.

மூத்தவன் சேஷாத்திரிக்கு அம்பாலாவில் உத்தியோகம். அதற்கு அடுத்தவள்—வைதேகி—கணவனுடன் பம்பாயில் சௌக்கியமாக இருக்கிறாள். அவளுக்குக் கைக் குழந்தையைச் சேர்த்து இரண்டு குழந்தைகள். மூன்றாவதாக ஸ்ரீனிவாசன். அவன் கான்பூரில் இருக்கிறான். நல்ல உத்தியோகம். அவனுக்கு இன்னும் குழந்தை இல்லை. கடைசிப் பையனுக்கு டில்லியிலேயே வேலை. அவனோடுதான் சென்னைக்கு ரயில் ஏறும்வரை வசித்து வந்தார். அவனுக்கு ஒரே குழந்தை. மூன்று பையன்களுமே அநேகமாக ஒரே அளவில் ஆயிரத்துக்குக் கொஞ்சம் முன்பின்னாக — சம்பளம் வாங்குகிறார்கள். இரண்டாவது பையனுக்கு எதிர் காலத்தில் பிரமாதமான சந்தர்ப்பங்களெல்லாம் காத்திருக்கின்றன. இந்தச் செய்திகளை முக்கால் மணி நேரம் விவரித்துச் சொன்னார் ஐயங்கார். நடு நடுவே கிழவர் கேட்ட கேள்விகளுக்கும் பதில்களைச் சொல்லிக் கொண்டார். அப்புறம் பேச்சின் நடுவிலேயே திடீரென்று, ''வரதன் எங்கே இருக்கிறான்?'' என்று முன்பு கேட்ட அதே கேள்வியை ஐயங்கார் கேட்டார்.

''வரதன் காஞ்சீபுரத்தில் இருக்கிறான். குமாஸ்தா வேலை. ஏராளமாகக் குழந்தை குட்டிகள். வரவுக்கும் செலவுக்கும் போதவில்லை. தீபாவளி, வருஷப் பிறப்பு போன்ற சமயங்களில் நாற்பதோ ஐம்பதோ அவனுக்கு அனுப்பியாக வேண்டும். ஏதோ அவன் காலமும் கழிகிறது. நாங்களும் இருக்கிறோம்'' என்று கூறி முடித்தார் நரசிம்மாச்சாரியார்.

அப்பொழுது ஐயங்காருக்கு வேறொரு விஷயம் புரிந்தது. அதாவது நரசிம்மாச்



சாரியாரும் தாமும் ஒரு விஷயத்தில் ஒரே நிலையில் இருப்பதைப் புரிந்து கொண்டு விட்டார். கிழவருக்குப் பேரனோடு இருக்க முடியவில்லை. தமக்குத் தம் பிள்ளைகளோடு இருக்க முடியவில்லை. எல்லாம் முடிந்து, கடைசி நாட்களைக் கழிக்கும்போது கூட, சந்ததிகளை விட்டுப் பிரிந்து வாழ வேண்டிய ஓர் அவசியம் இருவருக்கும் நேர்ந்து விட்டது. 'எப்படிப்பட்ட பலமான தளைகள்!'

இவ்வளவும் தெரிந்தும், தெரியாதவர் போல் எதையாவது சம்பிரதாயமாகப் பேசவேண்டும் என்பதற்காக, ''வரதனோடு நீங்கள் போயிருக்கக் கூடாதோ? அவனுக்கும் உதவியாக இருக்கும் அல்லவா?'' என்று கேட்டார் ஐயங்கார். அப்புறம், ''இவ்வளவு பெரிய பட்டணத்தில் அவனுக்கு ஒரு வேலை கிடைக்கவில்லையா? இங்கிருந்து காஞ்சீபுரம் போய்த்தான் காலம் தள்ள வேண்டுமா?'' என்று கேட்டார்.

கிழவர் முதல் கேள்வியைத்தான் மனசில் வாங்கினார்.

''நமக்கு மண்ணாசை இல்லாவிட்டாலும் மண் நம்மை விட மாட்டேன் என்கிறதே பத்து? மக்களையும் விட அதிகமாக இந்த மண்ணுக்கு அப்படி ஓர் உறவு நம்மிடம் இருக்கிறதே. என்ன செய்யலாம்?'' என்றார் நரசிம்மாச்சாரியார்.

ஐயங்கார் சிரித்தார்.

''இந்த வீட்டை விற்றுவிட்டுப் போய்விடலாம்தான். ஆனால் அவன் காஞ்சீபுரத்தில் எத்தனை நாளைக்கு நிலையாக இருக்க முடிகிறதோ? திடீரென்று வேறு எங்காவது மாற்றலாம். அது மட்டுமில்லை பத்து. இந்த வீடுகளை விற்கும் வேலை மட்டும் வேண்டாம் என்று அவனும் சரி இவனும் சரி ஒற்றைக் காலில் நிற்கிறார்கள். விற்றுப் பணமாக்கினால் நம் குடும்பக் கஷ்டத்துக்கு ஒரு வருஷம்கூடக் கையில் தங்காது என்கிறார்கள். விற்காத வரையில் எது போனாலும் எது வந்தாலும் வயிற்றுக்கு ஆகாரம் நிச்சயம். அந்திய காலத்தில் இந்த உத்தரவாதத்தையும் இழந்துவிட்டு நிற்பானேன் என்கிறார்கள். என்ன செய்யச் சொல்கிறாய்?''

''அவர்கள் சொல்வது உண்மை; உண்மையிலும் உண்மை...'' என்று சொன்ன ஐயங்கார் திடீரென்று யோசனையில் ஆழ்ந்தார். சிறிது நேரம் கழித்துத் தமக்குத் தாமே சிரித்துக் கொண்டார். கிழவர் இதைக் கவனிக்கவில்லை. ஒரு வேளை கவனித்திருக்கலாம். கவனித்திருந்தால் தம் சிரிப்புக்குத் தவறாக எங்காவது அர்த்தம் கற்பித்து விடுவாரோ என்று பயந்த ஐயங்கார், ''உத்தரவாதம் தேவையில்லாமலே கூட மண் மனிதனை விடுவதில்லையே! அப்படி இருக்கும்போது வீட்டை விற்கக் கூடாது என்று இவர்கள் சொல்லுவதில் தவறு இருக்க முடியுமா?'' என்று கூறினார்.

இப்படியே பேசிக் கொண்டிருந்தார்கள். நடுவே ஒரு சந்தர்ப்பத்தில் ''சமீபத்தில் மாம்பலம் பக்கம் போனீர்களோ?'' என்று ஐயங்கார் கேட்டார். நரசிம்மாச்சாரியார் பதில் சொல்வதற்கு முன்பே, ''அதை அப்புறம் பேசிக் கொள்ளலாம்'' என்றும் சொன்னார். பெரியவரோ, ''போயிருந்தேன். போன வாரம் கூட இருவருமாய்ப் போய் வீட்டையும் பார்த்து விட்டு வந்தோம். கொல்லையில் ஒரு மாமரம் பத்து நாட்களுக்கு முன் அடித்த புயற் காற்றில் சாய்ந்து விட்டது'' என்றார்.

மரம் விழுந்த செய்தியைச் சர்வ சாதாரணமாகக் கிழவர் கூறினார்.

ஐயங்காரோ அதிர்ச்சி அடைந்தவர் மாதிரி, ''மாமரமா? எந்த மரம்?'' என்று படபடப்போடு கேட்டார்.

''கிணற்றை ஒட்டினாற் போல் இருக்கிற மரத்துக்கு அடுத்தது. பலமான காற்று. அநேக வீடுகளில் ஓடுகள் கூடப் பறந்துவிட்டன. மாம்பலம் எல்லாம் ஒரே வெள்ளக் காடு. நல்ல நாளிலேயே நாலு தூற்றலுக்கு முழங்கால் தண்ணீர் ஓடுகிற இடம். இந்தப் பேய் மழைக்குக் கேட்க வேண்டுமா?''

''மற்ற மரங்களுக்கும் சேதம் உண்டா?''

''சேதம்தான். ஏதோ ஐந்தாறு கிளைகள் முறிந்திருக்கும். மற்றப்படி மரங்களுக்கு ஒன்றுமில்லை.''

அப்புறம் ஐயங்கார் பேசவேயில்லை. முகத்தைக்கூட இலேசாகத் திருப்பித் தெருக் கோடியைப் பார்த்தார். கண்களில் இமை அசையவில்லை.

''பார்க்கப்போனால் மரம் போனதில் உனக்கு நஷ்டம் ஒன்றுமில்லைதான். வருஷம் தவறாமல் காய் பறித்துக் கொண்ட குடித்தனக்காரர்களுக்குத்தான் நஷ்டம். ரொம்பக் கவலைப்பட்டார்கள். மல்கோவா தோற்றுப் போகுமாம். அவ்வளவு ருசியாக இருந்ததாம் அந்த மரத்துப் பழங்கள்....''

ஐயங்கார் ஒன்றும் பேசவில்லை.

நரசிம்மாச்சாரியார் அப்புறம் அந்தக் குடித்தனக்காரர்களைப் பற்றிய செய்திகளைச் சொல்லிக் கொண்டிருந்த போது உள்ளே இருந்து சாப்பிட அழைப்பு வந்தது.

திரும்பிப் பார்த்த ஐயங்கார் நரசிம்மாச்சாரியாரை முந்திக் கொண்டு அவ்விடத்தை விட்டு எழுந்தார்.

இருவரும் சாப்பிடப் போனார்கள்.

வெளியே 'கன்' என்று வெயில் அடித்துக் கொண்டிருந்தாலும், காற்று குளிர்ச்சியாக, இதமாக வீசிக் கொண்டிருந்தது. சாப்பிட்டு வந்து வெறுந் திண்ணையில் துண்டை விரித்துப் படுத்த கிழவருக்குத் தூக்கம் வந்து விட்டது. தினமும் அப்படியே அந்த நேரத்துக்குத் தூங்கிப் பழகியவர். ஆனால் பத்மநாப ஐயங்காருக்குத் தூக்கம் வரவில்லை. ரயிலில் வந்த அலுப்புக்கூட அவரைத் தூங்க வைக்க முடியவில்லை. சுவரில் தலையை முட்டுக் கொடுத்து ஈஸி சேரில் படுத்திருக்கும் பாவனையில் பாயில் படுத்துத் தெருவையும், வெள்ளை மேகங்களையும் பார்த்துக் கொண்டிருந்தார். கிழவரின் மனைவி வந்து கீழே உட்கார்ந்து அவருடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, ''ரயிலில் வந்தவன். தூங்கு. அப்புறம் பேசிக் கொள்ளலாம்'' என்று எழுந்து உள்ளே போய் விட்டாள்.

தனியே படுத்துக் கிடந்த ஐயங்காருக்குக் காற்றில் விழுந்த மாமரத்தைப் பற்றிய சிந்தனை வந்து மனசில் இடம் கொண்டு, பிரபஞ்ச மெல்லாம் கிளை பரப்பி அத்தனையும் கவிந்து நிற்கும் மிகப் பிரம்மாண்டமான ஒரு மாமரமாக வளர்ந்தோங்கிக் கொண்டிருந்தது.

அவருக்குக் கண் கலங்கி விட்டது.

உண்மையில் அது ஜாதி மரம்தான் என்றாலும் அதற்காக அவர் கவலைப்படவில்லை. மரம் விழுந்து விட்டது. எதற்காக மற்ற மரங்களோடு சேர்ந்து அதை நட்டாரோ, அந்த நோக்கம் இன்று வரை நிறைவேற வில்லை. இனி நிறைவேறப் போவதுமில்லை. 'என்ன ஆசை! என்ன சிறுபிள்ளைத்தனம்!' என்று தம்மைத் தாமே பரிகசித்துக் கொண்டார். அவர் மனக் கண் முன் ஆறு மாதங்களுக்கு முன் டில்லியில் இறந்த அவர் மனைவி— வேதவல்லியம்மாள் — ஒரு முறை காட்சியளித்து மறைந்தாள். மின்னல் அடித்தது போல் இருந்தது. அவளும் போய் விட்டாள். அவளைத் தொடர்ந்து மரமும் போய்விட்டது.

......

அப்புறம் வேறொரு விதமாகச் சிந்திக்கலானார்: 'இப்போது மரம் இருந்தால்தான் என்ன? அவள் இருந்தால்தான் என்ன?'

அவருக்கு ஒவ்வொரு நினைவுமே தாங்க முடியாத அதிர்ச்சியாக இருந்தது. துக்கத்தை மறந்திருந்த அவருக்குச் சென்னை நகரத்து மண்ணை மிதித்ததும் நரசிம்மாச்சாரியார் தம்பதிகளைக் கண்டதும், கடைசியில் மாமரம் விழுந்த செய்தியைக் கேள்விப் பட்டதும் மறந்து விட்ட துக்கம் முழுப் பாரத்துடன் வந்து அவர் நெஞ்சை அழுத்தியது. இப்பொழுது மனைவி இறந்ததற்காக மட்டும் அவர் துக்கப்பட வில்லை. எத்தனையோ விஷயங்களை இழந்து விட்டோம் என்று எண்ணினார். அவர் மனைவியின் மறைவு ஆயிரம் மறைவுகளில் ஏதோ ஒன்றாக அவருக்குத் தோன்றியது.

சென்னை நகரில் நிரந்தரமாகத் தங்கிவிடலாம் என்று வந்தது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனம் என்று எண்ணியவருக்கு, மேற்கொண்டு எதைப் பற்றியும் எண்ணத் தோன்றவில்லை.

பெரியவர் சீக்கிரம் தூங்கி எழுந்தால் நல்லது; எதையாவது பேசிப் பேச்சில் தம்மை மறந்திருக்கலாமே என்று ஏங்கினார்.

ஐயங்கார் எழுந்து திண்ணையில் நன்றாக உட்கார்ந்து கொண்டார். தெருவில் போகும் ஆட்களையும், கார்களையும், சைக்கிள்களையும் எண்ணிக் கணக்கிடுவது போல் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். எதிர் வரிசை வீடுகளின் சுவர்களில் ஒட்டியிருந்த சினிமா போஸ்டர்களை ஓர் எழுத்து விடாமல் படித்தார். அப்புறம் உள்ளே எழுந்து சென்று படுக்கைக் கட்டில் செருகி வைத்திருந்த ஒரு செய்திப் பத்திரிகையை எடுத்து வந்து விரித்துப் படிக்கத் தொடங்கினார்.

ஃ ஃ ஃ

மாம்பலத்தில் பத்மநாப ஐயங்கார் சுமார் முப்பது வருஷங்களுக்கு முன் கட்டி வைத்த வீடு ஒன்று இருக்கிறது. அப்பொழுது அவர் கல்கத்தாவில் உத்தியோகம் பார்த்து வந்த சமயம். நீண்ட லீவு போட்டு விட்டுச் சென்னைக்கு வந்து தாமே முன் நின்று அந்த வீட்டைக் கட்டினார். ஷாஜஹான் தாஜ்மஹாலைக் கட்டியது போல் தம் மனம் கொண்ட மாளிகையாக விளங்க வேண்டுமென்று ஒவ்வொரு சதுர அடிப் பகுதியையும் நீண்ட யோசனை செய்து பிரமாதமாகத் திட்டமிட்டுக் கட்டினார். கையில் சேர்த்து வைத்திருந்த பணம், கிராமத்தில் உள்ள நிலபுலங்களை விற்ற ரொக்கம், கொஞ்சம் கடன் — இத்தனையும் சேர்ந்து அந்த வீடாக உருவெடுத்தது. படிப்பதற்கு ஓர் அறை, படுப்பதற்கு மற்றோர் அறை, உட்கார்ந்து பேச ஒரு பெரிய ஹால், காற்றாட அமர்ந்திருக்க விசாலமான மாடி முகப்பு. இப்படி எல்லோரையும் போல் வீட்டை அமைத்தாலும் அவரது அந்தரங்க விருப்பமும் இடம் பெற்றிருந்தது. அது கல்யாணமான புதிது. ஏதோ இரண்டொரு வருஷங்கள்தான் ஆகியிருக்கும். எனவே வீடு என்பது வெறும் குடியிருப்புஸ்தலமாக மட்டும் இல்லாமல் ஒரு கேளிஸதனமாகவும் இருக்க வேண்டுமென்ற அவரது அந்தரங்க விருப்பத்தை அடிப்படையாகக் கொண்டே கட்டடத்தை உருவாக்கினார். ஒவ்வொரு பூஞ்செடியையும் ஒவ்வொரு லட்சியத்தோடு நட்டுத் தண்ணீர் ஊற்றினார். கொல்லைப் பக்கத்தில் தென்னையும் மாமரங்களும். வெயில் நேரத்தில் மாமரத்து நிழலில் வந்து இருவரும் அமர்ந்திருக்க வேண்டும். அங்கே ஓர் ஊஞ்சல் போட்டு நிலாக் காலங்களில் முன்னிரவுப் பொழுதைக் கழிக்க வேண்டும். முற்றத்து மலர்ச் செடிகளில் அவள் அதிகாலையில் பூக்கொய்வதை மாடியிலிருந்து பார்க்க வேண்டும்.... இப்படி அவளை எண்ணிக்கொண்டே வீட்டைக் கட்டினார். நடுநடுவே தம் மனைவியை அழைத்துக் கொண்டு வந்து, வீட்டைக் காட்டி, ''இப்படி இருக்கலாம்தானே? உனக்கு இந்த மாதிரி இருப்பதில் இஷ்டமா? இல்லை, இந்த அறையை வலது பக்கமாகப் போட்டுக் கட்டிவிடலாமா? ரோஜாப் பதியன்கள் தானே வந்து விடும்'' என்றெல்லாம் சொல்லுவார்.

# டன்லபில்லோ மீது

## சிரம பரிகாரம் செய்து கொள்ள உங்களுக்கு பிரியம் ஏற்படும்

மெத்தைகள் | தலையணைகள் | திண்டுகள்



அவர் செய்ததையும், செய்வதையும் செய்யப் போவதையும் மனைவி முழு மனதோடு ஆமோதிப்பாள். ஒவ்வொரு ஆமோதிப்பும் சிரித்த வாயிலிருந்தே வெளிப்படும். ஐயங்கார் தம்மை மறந்து விடுவார்.

இப்படியாக வீடு கட்டி முடிந்தது. கிருஹப் பிரவேசமும் சிறப்பாக நடந்தது. அப்போது சென்னையில் அவருக்கு நரசிம்மாச்சாரியார் மட்டுமல்ல, எத்தனையோ பேர்கள் தெரிந்தவர்கள், வேண்டியவர்கள் இருந்தார்கள். அதனால் பெரிய கல்யாணம் போலவே கிருகப் பிரவேச வைபவம் நடந்தேறியது. அது முடிந்த பிறகு நுங்கம்பாக்கத்தில் ஏற்கனவே வாடகைக்கு அமர்த்தி யிருந்த வீட்டுக்குத் தாயாரோடும் மனைவியோடும் திரும்பினார். ஒரு வாரத்துக்கெல்லாம் லீவு முடிந்து சென்னையை விட்டு மனைவியோடு பயணமானார். தம்மை வாழ்நாளில் ஒரு வாரம் கூடச் சேர்ந்தாற்போல் பிரிந்திருந்து அறியாத தாயாரைத் தனியே விட்டு விட்டுக் கல்கத்தாவுக்குப் போகும்படி ஆயிற்று.

கட்டிய வீட்டை வாடகைக்கு விடவேண்டும். வாடகைப் பணத்தை வசூலிக்கவும், வீட்டைப் பார்த்துக் கொள்ளவும் ஓர் ஆள் வேண்டும். எனவே, தாயார் சென்னையில் இருந்தே ஆக வேண்டும். அவளுக்குத் துணை தூரத்து உறவான ஓர் ஏழை அநாதைப் பெண்தான். அந்தப் பதினைந்து வயதுப் பெண் கிராமத்தில் படித்துக் கொண்டிருந்தாள். அவளை ஐயங்கார் சென்னைக்கு வரவழைத்து விட்டார். அத்துடன் பக்கத்துத் தெருவில் — வில்லேஜ் ரோடில்— குடியிருக்கும் நரசிம்மாச்சாரியாரின் குடும்பத்தையும் ஒரு துணையாக வைத்து விட்டுப் போனார்.

''நீங்கள் எல்லாம் இருக்கிறீர்கள் என்ற தைரியத்தில் தான் அம்மாவை விட்டு விட்டுக் கல்கத்தாவுக்குப் போகிறேன். கிராமத்தில் தலைமுறைக் கணக்கில் நம் குடும்பங்கள் அந்நியோன்யமாக இருந்து வந்திருக்கின்றன என்று அப்பா எத்தனையோ முறை சொல்லியிருக்கிறார். அந்த உறவு பின் தலைமுறைகளிலும் நீடிக்கும் என்பதில் சந்தேகமில்லை. அம்மாவைப் பார்த்துக் கொள்ளுங்கள். வீட்டையும் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி விட்டுப் பத்மநாப ஐயங்கார் முப்பது வருஷங்களுக்கு முன் விடைபெற்றுச் சென்றார்.

❀ ❀ ❀

நரசிம்மாச்சாரியாருக்கும் ஸ்ரீபெரும்புதூர்தான் சொந்தக் கிராமம். ஆனால் அவர் வெகு காலத்துக்கு முன்பே சென்னைக்குக் குடியேறி விட்டவர். ஊரோடு அவருக்கு இப்போது எந்த விதமான உயிர்த் தொந்தமும் பொருள் தொந்தமும் இல்லை. அவர் உத்தியோகத்திலிருந்து ஓய்வுபெற்றும் வெகு காலமாகிவிட்டது. வாழ்க்கையில் மிக மிகக் கஷ்டப்பட்டு மீண்டவர். இப்பொழுது எண்பதாவது வயதை நெருங்கிக் கொண்டிருக்கிறார். அவருக்குக் கல்யாணமாகி அநேக வருஷங்களுக்குப் பிறகு பிறந்த ஏக புத்திரர், தம்மைப் போலவே ஓர் ஏக புத்திரனை விட்டு விட்டுக் கண்ணை மூடினார். அவனை—வரதனை — வளர்த்துப் படிக்க வைத்து இந்த நூற்று முப்பது ரூபாய் சம்பாத்தியத்துக்காவது தகுதியுடையவனாகச் செய்தவர் நரசிம்மாச்சாரியார்தான். போன வருஷம் வரையில் அவன் சென்னையில் தான் இருந்தான். அப்புறம்தான் காஞ்சிபுரத்துக்கு மாற்றுதலானது. தனிமையில் வசித்து வந்த பத்மநாப ஐயங்காரின் தாயாருக்கு அப்போது சிறு குழந்தையாக இருந்த வரதன் செல்லப் பிள்ளையாக இருந்தான். முக்கால்வாசி நாள் அவனுக்கு அங்கேதான் சாப்பாடும் படுக்கையும்.

மாம்பலம் வீட்டில் குடியிருந்தவர்களிடம் மாதா மாதம் வாடகை வசூலிக்கப் பத்மநாப ஐயங்காரின் தாயார் போகும்போது வரதனையும் எடுத்துக் கொண்டு போவாள். நரசிம்மாச்சாரியாரும், அவர் மனைவியும் சேர்ந்து சில சமயங்களில் நான்கு பேராகச் செல்வதும் உண்டு. குடித்தனக்காரர்கள் நல்லவர்கள், யாதொரு சால்ஜாப்பு மின்றிக் குறித்த தேதியில் வாடகை கொடுத்துவிடுவார்கள். அதை வைத்துக் கொண்டு அந்த அம்மாள் காலட்சேபம் செய்து வந்ததுடன், கொஞ்சப்

பணத்தை மீத்துக் கொண்டும் வந்தாள். அதை வைத்துத் தன் அடைக்கலத்திலிருந்த அநாதைப் பெண்ணுக்குக் கல்யாணம் செய்து வைத்தாள். வரதனுக்குப் பல வகுப்புக்களில் புத்தகங்களும் வாங்கிக் கொடுத்தாள்.

பத்மநாப ஐயங்கார் வருஷத்துக்கு ஒரு முறையோ, தனியாகவோ, குடும்பத்துடனே சென்னைக்கு வந்து அம்மாவுடன் சில நாட்கள் தங்குவார். வீட்டைப் பழுதுபார்க்க வேண்டியிருந்தால், அதையும் செய்து விட்டுப் புதிதாக ஏதேனும் செடி கன்றுகளை நட்டு விட்டுப் போவார். ஒரொரு சமயம் அம்மாவையும் வட நாட்டுக்கு அழைத்துச் சென்றிருக்கிறார்.

வருஷத்துக்கு ஒரு தடவை வருவதும்கூடச் சில வருஷங்களில் நின்று விட்டது. வீடு கட்டிப் பதினைந்து வருஷங்களுக்குப் பின்பு அம்மா இறந்து விட்டாள். அப்புறம், வீட்டை நரசிம்மாச்சாரியாரின் முழுப் பொறுப்பிலேயே விட்டுவிட வேண்டியதாயிற்று. அவரும், இளைஞனாகி விட்ட வரதனும் சேர்ந்துதான் வாடகை வசூலிப்பது, குடித்தனக்காரர்கள் காலி பண்ணிப் போய்



விட்டால் வேறு குடும்பத்துக்கு வீட்டை வாடகைக்கு விடுவது என்பன போன்ற காரியங்களை நிறைவேற்றி வந்தார்கள். பத்மநாப ஐயங்கார் சென்னைக்கு வந்தால் ஓட்டலில் ஒரு நாள் இரண்டு நாட்கள் தங்கியிருந்து, வீட்டையும் ஒரு முறை பார்த்து விட்டு அவசரம் அவசரமாகத் திரும்பி விடுவார்.

வரதன் காஞ்சீபுரம் போகும் வரையில், நரசிம்மாச்சாரியார் மாதம் தவறாமல் வாடகைப் பணத்தை ஐயங்காருக்கு மணியார்டர் செய்து விடுவார். அப்புறம், தள்ளாமையினால் இந்த மணியார்டர்ப் பொறுப்பை நிறைவேற்றுவது சிரமமாக இருந்தது. குடித்தனம் இருந்த குடும்பத்தார் நல்லவர்களாக இருந்ததால், அவர்களையே நேரடியாக ஐயங்காருக்குப் பணத்தை அனுப்ப ஏற்பாடு செய்து விட்டார். இதனால் ஐயங்காருக்கும் கிழவருக்கும் கடிதத் தொடர்புகூட நின்று ஒரு வருஷமாகி விட்டது. மாம்பலம் வீட்டைப் போய் அவர் பார்ப்பது ஏதோ மூன்று மாதங்களுக்கு ஒரு முறைதான் முடிகிற காரியமாக இருந்தது. ''கண் பார்வை முக்கால்வாசி மங்கிய பிறகு நாம் போய்ப் பார்ப்பதும் ஒன்றுதான்; பார்க்காததும் ஒன்றுதான். ஏதோ பத்மநாபனிடம் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற ஒரு முறை போய் வந்து விடுவோம்'' என்று மனைவியிடம் சொல்லிவிட்டு, கம்பை ஊன்றிக் கொண்டே மாம்பலம் போய் வருவார். இவர் இவ்வளவு சிரமப்படுகிறார் என்ற விவரம் வட நாட்டில் இருந்த ஐயங்காருக்கு அப்போது தெரியாது.

ஃ ஃ ஃ

நரசிம்மாச்சாரியார் தூங்கி எழுந்தார். மணி மூன்றரை ஆகி விட்டது. ஓர் அரை மணி நேரத்துக்கெல்லாம் பத்மநாப ஐயங்கார், ரோட்டில் சென்ற ஒரு டாக்ஸியை நிறுத்தினார். இருவரும் அதில் ஏறிக் கொண்டு மாம்பலம் சென்றார்கள். பதினைந்து நிமிஷங்கூட ஆகவில்லை, வீட்டுக்கு முன்னால் போய் டாக்ஸி நின்றது. இறங்கியதும், தெருவில் நின்ற வாக்கிலேயே வீட்டைப் பார்த்தார் ஐயங்கார். பார்த்ததும் உடம்பில் அவருக்கு ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது. கண்களும் சற்று இருண்டு விட்டன. மெய்மறந்து, பேச்சு மூச்சின்றி அப்படியே நின்று விட்டார். வீடு முன் போலவேதான் இருந்தது. எந்தப் பகுதியிலும் எவ்விதச் சிறு சேதமும் ஏற்படாமல், கட்டி வைத்த நிலையிலேயே இருந்தது. ஒரே ஒரு பெரிய வித்தியாசம், மரங்களெல்லாம் பெரியவையாகிக் கப்பும் கவருமாகப் படர்ந்திருந்ததுதான். சமீபத்தில் வர்ணம் கொடுத்து, வெள்ளையும் அடிக்கப்பட்டிருந்ததால், புதுமை குன்றாமல் காட்சியளித்தது வீடு. இந்தப் பழுதற்ற நிலை ஐயங்காருக்கு ஒரு வகையில் துயரத்தையே கொடுத்தது. சேதமுற்றுச் சீரழிந்திருந்தாலும், அந்தக் கவலையில் கவனம் சென்றிருக்கும். அன்று கண்ட புதுமைத் தோற்றம் மாறாமல் இருந்தது, பெரிய வேதனைக்கே மூல காரணமாகி விட்டது.

வீட்டுக்குள்ளே போவானேன் என்று எண்ணிக் கொண்டே நரசிம்மாச்சாரியாருடன் பின்புறத்தில் உள்ள கிணற்றடியை நோக்கிச் சென்றார் ஐயங்கார். மாமரம் சாய்ந்த இடத்தில் விகாரமாக ஒரு சூனியம் விழுந்திருந்தது. இப்போது அவர் வருந்துவதற்குப் பதில் சிரித்துக் கொண்டார்.

மரம் விழுந்த செய்தியைத் திரும்பவும் விவரிக்கப் புகுந்த கிழவரின் பேச்சை மாற்றி அவரை முன்புறமாக அழைத்து வந்தார். வீட்டுச் சுவரின் ஒவ்வொரு பகுதியையும் உற்றுப் பார்த்தார். சுற்றிலும் நின்ற செடி கொடிகளைத் தனித் தனியாகப் பார்த்துப் பெருமூச்செறிந்தார். அநேகமாக எல்லாச் செடிகளுமே அவர் வைக்காதவை. தம் கையால் நட்ட மரங்களை உச்சிக் கிளையிலிருந்து தரைவரை கண்களால் அளந்தார். அப்புறம் வீட்டுக்குள்ளேயே போய், படிப்பதற்காகக் கட்டிய அறை, வரவேற்புக்காகக் கட்டிய ஹால், பூஜை அறை, சயன கிருகம், உதய காலத்தில் மனைவி மலரெடுக்கும்போது பார்த்து மகிழ்வதற்காகக் கட்டிய மாடி முகப்பு, நிலாச் சோறு சாப்பிட ஒதுக்கியிருந்த மேற்கோப்பில்லாத மாடிப் பகுதி.... அத்தனையையும் பார்த்தாகி விட்டது. பார்க்

கும்போது அனுபவிக்க வேண்டியதை அனுபவித்தும் ஆகி விட்டது. அப்புறம் என்ன? குடித்தனக்காரர்களுடன் சம்பிரதாயத்துக்கு இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டு வெளியே வர நினைத்தார். குடியிருந்தவரோ முந்திய மாதம் ஐயங்கார் எழுதியிருந்த கடிதத்தின் பிரகாரம் எப்பொழுது வேண்டுமானாலும் ஒரு மாத முன்அறிவிப்பின் பேரில் வீட்டைக் காலி செய்யத் தயாராக இருப்பதாகக் கூறினார். அதைக் கேட்ட ஐயங்கார் இலேசாகச் சிரித்தார். ''பார்க்கலாம்'' என்று மட்டும் ஒரு வார்த்தை சொல்லிவிட்டு விடை பெற்றுக் கொண்டு கிழவரோடு தெருவுக்கு வந்தார். இருவரும் நுங்கம்பாக்கம் திரும்பி விட்டார்கள்.

❖ ❖ ❖

அன்றிரவு சாப்பிட்டபிறகு படுத்துக் கொள்ளப் போகும்போது ''இவ்வளவு பிரமாதமான மாளிகையைக் கட்டி வைத்து விட்டு இந்தக் குடிசையில் தலை சாய்க்க வேண்டியிருக்கிறது! எல்லாம் ஒரு வேடிக்கைதான்!'' என்றார் கிழவர்.

''இது புதிய வேடிக்கை இல்லையே! முப்பது வருஷ வேடிக்கை'' என்றார் ஐயங்கார் அமைதியான குரலில்.

''நீ சொல்வது உண்மைதான் பத்து! வீட்டைக் கட்டினதிலிருந்து ஒரு நாள்கூட அங்கே நீ குடியிருக்க வில்லையே?''

''இப்போது எனக்கு அது என் வீடு, நான் கட்டிய வீடு என்று கூடத் தோன்றவில்லை. அதுவரைக்கும் க்ஷேமம். என் வீடுதான் என்றால் அந்தப் பாரம் என்னை ஒரு நிமிஷத்தில் அழுத்திக் கொன்றுவிடும்.''

''எதற்காகப் பாரம் என்கிறாய்? அருமையான சொத்து. லட்சம் கொடுத்தாலும் இந்த மாதிரி இடத்தில் இந்த மாதிரி ஒரு வீடு கிடைக்காது பத்து. மாம்பலம் அந்த நாளைய மாம்பலமில்லை. விஸ்தாரமான ரஸ்தாக்களும், பிரும்மாண்டமான மாளிகைகளும் பெற்று, எப்பொழுதும் கலகலவென்றிருக்கும் மாம்பலம் இப்போது குபேர பட்டணமாகி விட்டது.''

''வேண்டாதவனுக்கு வீடு குபேர பட்டணத்தில் இருந்தால் என்ன, இந்திர லோகத்தில் இருந்தால் என்ன?'' என்று ஐயங்கார் சொல்லவே அவர் தமாஷுக்குச் சொல்லவில்லை என்பதைப் புரிந்து கொண்ட கிழவர், ''வீட்டை விற்றுவிடலாம் என்று யோசனையா, பத்து?'' என்று கேட்டார்.

''விற்றுவிடலாம் என்று யோசனை இல்லை. வீட்டு நினைப்பை விட்டு விடலாம் என்று யோசனைதான்.''

பெரியவருக்குக் குழப்பமாக, புரியாத ஒரு பயமாகக் கூட இருந்தது. அவர் எதுவுமே பேசவில்லை.

''இந்த வீடு யாருக்குக் கட்டியது, எதற்குக் கட்டியது என்பது கூடத் தெரியாமல் போய்விடும் ஒரு காலம் வந்து விட்டது. அங்கே போய்க் குடியேறி வாழலாம் என்று இவ்வளவு தூரம் வந்த பைத்தியக்காரத்தனம் இப்பொழுதுதான் தெளிவாகத் தெரிகிறது. அந்த வீட்டைக் கட்டிய பத்மநாப ஐயங்கார் இப்போது இல்லை. இப்போது நான் வேற்று மனிதனாக நிற்கிறேன். வீட்டில் வாழ வேண்டியவர்களும் இப்போது இல்லை. இத்தனை வருஷ காலமும் அந்த வீடு உங்களையும் என்னையும் சேர்த்துப் பலருக்குப் பயமாகவே இருந்து வந்திருக்கிறது.''

''நீ பேசுவது அர்த்தமில்லாத பேச்சு, பத்து! உனக்குத் தனி வாழ்க்கை வாழ முடியவில்லையென்றால் டில்லிக்கே போய்ப் பையனோடு இரு. வீடு எப்போதும் போல் வாடகைக்கு இருந்து விட்டுப் போகட்டும்'' என்றார் நரசிம்மாச்சாரியார்.

''அது வேறு விஷயம். ஆனால் வீடு அதற்காகக் கட்டப்பட வில்லையே?''

நரசிம்மாச்சாரியார் கடைசியாக, ''அப்படியானால் என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று கேட்டார்.

''அதுதான் தெரியவில்லை. நீங்களே ஒரு வழி சொல்லுங்கள்.'' —

''அதுதான் சொன்னேனே, எப்போதும் போல் வாடகைக்கு விட்டு விட்டு டில்லிக்குத் திரும்பு. பிள்ளையோடு இரு.''

''இனி எங்கே திரும்புவது?.... உம், இந்த நேரத்தில் இதைப்பற்றியெல்லாம் யோசித்து யோசித்து மூளையைக் குழப்பிக் கொள்ளுவானேன்? விடியட்டும், பார்த்துக்கொள்வோம்'' என்று சொல்லி விட்டு, சுருண்டிருந்த படுக்கையை இழுத்துச் சரி செய்து கொண்டு ஐயங்கார் படுத்து விட்டார். ஆனால் கிழவர் தூங்கிவிட்ட பிறகும் அவர் தூங்கவில்லை.

❖ ❖ ❖

பத்மநாப ஐயங்கார் வழக்கத்துக்கு மாறாக அரை மணி நேரம் தாமதித்து விழித்து எழுந்தாலும் கலகலப்பாகவே கண் விழித்தார். தூக்கக் கலக்கம் படிந்திருந்த முகத்

அனாதி காலமாக இந்த நாட்டு மக்கள் அனைவர் மனத்திலும் பதிந்து வேர் ஊன்றி வந்த தருமமானது அழிந்து விடாமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டியது நம்முடைய கடமை. பணப் பேயானது தருமத்தை அழிக்கும்போது அதை உதாசீனமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் வீரியமற்ற வாழ்க்கை நமக்கு வேண்டாம். தரும விரோதமான ஒரு கூட்டம் நம்முடைய புனிதப் பண்பாடுகளை நாசம் செய்து வருகிறது என்று நிச்சயமாகத் தெரிந்து கொண்டபின் மற்றவர்கள் என்ன செய்கிறார்கள் என்று ஏன் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்? 'அவர்கள் எப்படியாவது போகட்டும், என்னைப் பொறுத்த மட்டும் தருமத்துக்கே வோட்டுப் போடுவேன்' என்று ஒவ்வொருவரும் முடிவு செய்து கொள்ள வேண்டும். அறத்துக்கும், ஆத்ம விடுதலைக்கும் உங்கள் வோட்டுரிமை பயன்படட்டும்.

—ராஜாஜி

> ராஜாஜியை நான் நன்கு அறிவேன். யாரிடமிருந்தும் எவ்விதமான ஆதரவும் தேவைப்படாத ஒரு தீரர் அவர். அவருக்கு இழைத்த தீங்குகளைச் சில மணிகளுக்கு மேல் — ஏன், சில நிமிடங்களுக்கு மேல் கூட — நினைவில் கொள்ளாத அளவுக்கு வேதாந்த மனப்பான்மை படைத்தவர். அவர் நுண்ணிய நகைச்சுவை உணர்வு பெற்றவர் என்பதையும் நான் அறிவேன். இதனால் தான் அவரைக் குறித்துச் செய்யப்படும் கேலிகளைக் கூட அவரால் ரசிக்க முடிகிறது. — காந்திஜி

தில் ஓர் அசாதாரணத் தெளிவும், பிரகாசமும் நிறைந்திருந்தன. உரிய காலத்தில் குளித்துச் சாப்பிட்டு விட்டுக் கிழவருடன் வெளித் திண்ணையில் வந்து அமர்ந்தார். பத்து நிமிஷ நேரம் ஏதேதோ பேசிக்கொண்டிருந்த அவர் சட்டென்று எழுந்து நின்றார். ''நான் கொஞ்சம் வெளியில் சென்று வர வேண்டும்'', என்று சொல்லி விட்டு வீட்டுக்குள் போனார். உடை மாற்றி ஜரிகை அங்கவஸ்திரத்துடன் வெளியே வந்தார்.

''முடிந்தால் நான் நாளையே டில்லிக்குத் திரும்ப வேண்டும் என்று முடிவு செய்து விட்டேன்'' என்று கிழவரிடம் சொல்லி விட்டு உட்கார்ந்தார்.

தம்முடைய யோசனையை ஐயங்கார் ஏற்றுக்கொண்டு விட்டார் என்று எண்ணி மகிழ்ச்சி அடைந்த கிழவர், ''பேஷ்! அது தான் சரி. கூட இரண்டு நாட்கள் இருந்து விட்டுப் போகலாம், பத்து. அவசரம் ஒன்றுமில்லையே!'' என்றார்.

''ஓர் அவசரமும் கிடையாது. எனக்கு இனி டில்லியும் ஒன்றுதான்; மதராஸும் ஒன்றுதான்'' என்று ஐயங்கார் மறுபடியும் புதிர் போட்டார். கிழவர் ஒன்றும் சொல்லவில்லை.

''நேற்று நான் சொன்னதுபோல் அது யாருக்கோ கட்டிய வீடு. அதனால் யாராவது அதை வைத்துஅனுபவிக்கட்டும். நீங்கள் சொன்னபடியே நான் டில்லிக்குப் புறப்படுகிறேன்'' என்றார் ஐயங்கார்.

''என்ன பத்து, நீ சொல்வது இப்பொழுது எனக்கு முழுக்க முழுக்கப் புரியவில்லை. ஏதோ சந்நியாசம் வாங்கப் போகிறவன் மாதிரி பேசுகிறாயே! நீ பிள்ளை குட்டிக்காரன். அவர்கள் வந்து குடியிருந்து விட்டுப் போகிறார்கள்...''

''அவர்களுக்கு இங்கே வர வேண்டிய அவசியமோ, சந்தர்ப்பமோ, ஆசையோ கூட இல்லை. ஒவ்வொருவனுமே இப்படி இரண்டு வீடுகளைக் கட்டிக் கொள்ளும் சக்தி யுள்ளவனாக இருக்கிறான். இந்த வீட்டைப் பற்றிய நினைவே அவர்களுக்கு இல்லை.''

''அப்படியானால் விற்று விடுகிறது.''

''இப்பொழுது என்னிடமிருக்கும் பணம் நான் இன்னொரு அறுபது வருஷங்கள் இருந்து செலவழித்தாலும்கூடக் கரையாது. வீட்டை விற்று என்ன செய்ய? யாருக்காகவோ இவ்வளவு காலமும் வாழ்ந்து, வாழ்க்கையை இழந்தது பெரிதில்லை; யாருக்காகவோ கட்டிய இந்த வீட்டை இழப்பதா பெரிது?''

''நீ விரக்தியினால் இப்படிப் பேசுகிறாய்!''

''அதுதான் இல்லை. என் மனைவி உயிரோடு இருந்து அவளோடு இப்போது நான் வந்திருந்தாலும் இந்த முடிவுக்குத்தான் வந்திருப்பேன். அவளும் நானும் இருந்தாலும் போய்விட்ட காலம் திரும்புமா? எந்தக் காலத்துக்காகவோ கட்டிய வீடு இந்தக் காலத்துக்குப் பொருந்துமா? போன வருஷம் தைத்த சட்டை கூட இந்த வருஷம் உடம்புக்குச் சேர மாட்டேன் என்கிறதே!''

பெரியவர் மௌனமாகக் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தார்.

பத்மநாப ஐயங்கார் பேச்சைத் தொடர்ந்தார். ''அதுதான் சொல்கிறேன், அந்த வீட்டைக் கொடுத்துவிடலாம் என்று முடிவு செய்து விட்டேன். அது தானமோ தர்மமோ அல்ல. அவசியமில்லாததைக் கழிக்கிறேன். இழந்தவற்றை ஈடு கட்ட அதுதான்வழி என்று தெரிகிறது. யாருக்காவது கொடுத்த பிறகு தான் அந்த வீட்டில் வாழ்ந்த நிறைவை மானசீகமாகவாவது பெற முடியும் என்று தோன்றுகிறது. இழந்த வாழ்க்கை கூட ஒருவேளை நிறைவு பெற்று விடலாம்.''

''நீ யாருக்குக் கொடுப்பாய்?''

''கொடுப்பதா கஷ்டம்?. இல்லை, ஏற்றுக் கொள்பவர்கள் உலகத்தில் கிடையாதா? நன்றாகச் சொன்னீர்கள்!'' என்று சொல்லி விட்டு ஐயங்கார் சிரித்தார். சிரிப்பு நின்ற பிறகு, ''ஒரு ஆஸ்பத்திரிக்குக் கொடுக்கலாம், ஒரு பள்ளிக்கூடத்துக்குக் கொடுக்கலாம். இப்படி ஏதாவது ஒரு நல்ல காரியத்துக்குக் கொடுக்கலாம். சரி, நேரமாகி விட்டது. நான் வருகிறேன். கொஞ்ச நேரம் போனால் வெயிலாகிவிடும். இரண்டொரு முக்கியஸ்தர்களைக் கண்டு எப்படி விஷயத்தை முடிப்பது என்று கலந்து பேசி விட்டு வருகிறேன்'' என்றார்.




பெரியவர் மிகப் பெரிய அதிர்ச்சிக்குள்ளானவர் போல், ஒன்றும் பேசாமல் அப்படியே சுவரில் சாய்ந்து விட்டார்.

''நான் வரட்டுமா?'' என்று சிரித்துக்கொண்டே சொல்லி விட்டு, செருப்பைக் காலில் மாட்டிக் கொண்டு தெருவில் கால் வைத்தார் பத்மநாப ஐயங்கார்.

உங்கள்

டார்ச்சில்

எஸ்ட்ரெலா

பொருத்தி

இரவில்







எஸ்ட்ரெலா

ப்ளாஷ் லைட் பாட்டரிகள்
டார்ச்கள் மற்றும் பல்புகள்



'சிறுகதைகள்' என்னும் தலைப்பில் ராஜாஜி எழுதிய கட்டுரை ஒன்று இந்த இதழில் வேறு ஒரு பக்கத்தில் வெளியாகியுள்ளது. பல ஆண்டுகளுக்கு முன்பே பேராசிரியர் கல்கி, ராஜாஜியின் கதை, கட்டுரை பற்றி எழுதிய இக்கட்டுரையையும் ஒப்புநோக்குவது பொருத்தமாயிருக்கும். — ஆசிரியர்

# ராஜாஜி மலர்

**கல்கி**

கதைகளில் எத்தனையோ வகைக் கதைகள் இருக்கின்றன. அராபியக்கதை, அத்தைப் பாட்டிக் கதை, விக்ரமாதித்தன் கதை, மதனகாமராஜன் கதை, தற்காலத்து நவீனச் சிறு கதைகள் — எல்லாம் இருக்கின்றன. உபநிஷதங்களிலும், பைபிளிலும் கூடக் கதைகள் இருக்கின்றன. இவற்றில் ராஜாஜியின் கதைகள், உபநிஷதக் கதைகளோடு சேர்க்கப்பட வேண்டியவை.

கட்டுரைகளில் எத்தனையோ வகைகள் உண்டு. ஒரு தடவை படித்து விட்டு எறிய வேண்டியவை, இரண்டு மூன்று தடவைகள் படித்துச் சிந்தித்துப் பயன் பெற வேண்டியவை, படிக்காமலேயிருந்தால் க்ஷேமம் என்ற இனத்தில் சேர்ந்தவை — இப்படிப் பலவகைக் கட்டுரைகள் உண்டு. பகவத்கீதையைப் போல் தினம் பக்தியுடன் பாராயணம் செய்ய வேண்டிய கட்டுரைகளும் உண்டு.

இந்தக் கடைசி வகையைச் சேர்ந்தவை ராஜாஜியின் கட்டுரைகள்.

சென்ற நாற்பதாண்டு காலத்தில் தமிழ் மொழியிலே எத்தனை எத்தனையோ வசன நூல்கள், கவிதை நூல்கள் — பதினாயிரம் லட்சம் என்ற கணக்கில் — வெளியாகி யிருக்கின்றன.

இவ்வளவு நூல்களிலே இன்னும் நூறு வருஷங்களுக்குப் பிறகு வரும் தமிழர் சந்ததிகள் படிக்கக் கூடிய நூல்கள் எவை என்று கேட்டால், பாரதியாரின் கவிதைகளும், ராஜாஜியின் கதைகள் — கட்டுரைகளும்தான் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

ஏனெனில் இந்தக் கதைகளில் வரும் பாத்திரங்கள் நம் காலத்து ஸ்திரீகள் புருஷர்களேயானாலும், அவர்களைக் கொண்டு விளக்கப்படும் உண்மைத் தத்துவம் முக்காலத்துக்கும் பொதுவானது; சாசுவதமானது; அழிவில்லாதது. உண்மைத் தத்துவத்தை விளக்கும் காரணத்தினாலே, கதையின் ஓட்டமும் சுவையும் குறைந்து விடுகின்றனவா? படிக்க ஆரம்பிக்கும் போதே, ''இதெல்லாம் பெரிய விஷயங்கள்; நமக்கு எங்கே விளங்கப் போகிறது?'' என்று தோன்றி விடுகிறதா?

ராஜாஜி அப்படியெல்லாம் நம்மைப் பயமுறுத்துவதில்லை. சின்னஞ் சிறு பிள்ளைகள் கூடப் படிக்க ஆசை கொள்ளும் முறையிலே கதையைத் தொடங்குகிறார். அப்புறம் கதையின் சுவாரசியத்திலே தங்கு தடை இல்லாமல் நம்மை இழுத்துக் கொண்டே போகிறார். கதையை முடிக்கும்போது, ''இத்தனை நேரமும் நாம் கதை படித்தோமா, வேத மந்திரம் படித்தோமா?'' என்று திகைக்கும்படி செய்து விடுகிறார்.

எளிய வாழ்வுக்கும் உயரிய சிந்தனைக்கும் ராஜாஜி உதாரண புருஷராக விளங்குகிறார். இந்த இரண்டு அம்சங்களையும் அவருடைய தமிழ் நடையிலும் காண்கிறோம்.

எளிமை என்றால், இதைவிட எளிமையாகத் தமிழ் எழுதவே முடியாது என்று சொல்லலாம். ஆனால், நடை எவ்வளவுக்கு எளியதோ, அவ்வளவுக்கு ராஜாஜி எழுதும் விஷயங்கள் உயர்வானவை.

இன்னும் ராஜாஜியிடம் நாம் காணும் ஒப்பற்ற தூய்மை, கட்டுப்பாடு, விவேகத்திட்பம் ஆகியவற்றையும் அவருடைய தமிழ்நடையில் காண்கிறோம். மலைச் சுனையில் உற்பத்தியாகிப் பாறைக் கற்களின் மீதும் கூழாங்கற்களின் மீதும் சலசலவென்று ஓடும் பளிங்கு போன்ற தூய்மையான ஓடை நீரில் எத்தகைய தெளிவை நாம் காண்கிறோமோ, அத்தகைய தெளிவை ராஜாஜியின் தமிழ் நடையில் காண்கிறோம்.

குற்றாலம், பாபநாசம் முதலிய மலைகளில் தெளிந்த நீரருவி ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் வரும்போது நடுவில் சில இடங்களில் ஆழமான சுனைகளில் விழுந்தும் வருவதுண்டு. அந்தச் சுனைகளில் கழுத்து அளவு ஆழமும், அதைவிட அதிகமான ஆழமுங்கூடச் சில இடங்களில் இருப்பதுண்டு. ஆனால் சுனையில் குனிந்து பார்த்தோமானால், அவ்வளவு ஆழத்தின் அடியில் கிடக்கும் கூழாங் கற்களும் சரற் கற்களும் நன்கு புலனாகும். அப்படியே ராஜாஜியின் கட்டுரைகளைப் படித்துக் கொண்டே போகும்போது சில சமயம் ஆழ்ந்த கருத்துக்களடைந்த பகுதிகளுக்கு வருகிறோம். ஆனால் ஆழத்தைக் கண்டு நாம் பயப்படுவதில்லை. அடியிலுள்ள முத்துக்களையும் ரத்தினங்களையும் தெளிவாகக் கண்டு அதிசயிக்கிறோம். சிலர் தொட்டதெல்லாம் பொன்னாகும் என்று உபசாரத்துக்குச் சொல்வதுண்டு. ராஜாஜி தொட்டதெல்லாம் தெளிவாகிறதென்று நிச்சயமாகச் சொல்லலாம்.






PEPS
for
COUGHS
COLDS






CASTOPHENE
A DELICIOUS
CHOCOLATE
LAXATIVE

# ஆஸ்திகம் தழைக்கிறது

ரஜனி

கொழும்பு, நவம்பர், 28உ

இலங்கையில் ஆஸ்திக வளர்ச்சிக்கு அரும் பணியாற்றும் பெருமை கொழும்பில் ஜயந்திநகர் என்ற ஜிந்துப்பிட்டித் தெருவிலுள்ள ஸ்ரீ சிவ சுப்பிரமணிய ஸ்வாமி கோவிலுக்கு எப்பொழுதுமே உண்டு. இங்குதான் சுமார் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் காந்தியடிகளின் கூட்டுப் பிரார்த்தனையைப் போன்ற ஒரு கூட்டுப் பிரார்த்தனை இயக்கம் ஆரம்பமாயிற்று. நாத்திக வாதம் இங்கு தலையெடுக்க ஆரம்பித்தபொழுது நெருக்கடியான கட்டத்தில் கூட்டுப் பிரார்த்தனை இயக்கம் இந்த ஆலயத்தில் தொடங்கி அது நாடெங்கும் பரவியது. அதுவே இலங்கை சைவர்களுக்கிடையில் ஒரு புதிய மறுமலர்ச்சியை ஏற்படுத்தியது. இந்த இயக்கத்துக்குத் தலையாய பணி புரிந்த பெரியார்கள் இருவர். ஒருவர் இன்று மதுரைமா நகரில் இருந்து கொண்டு அருள் ஒளி பரப்பி வரும் ஞானசம்பந்தர் ஆதின மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர பரமாசாரிய தேசிகர் அவர்கள். மற்றொருவர் காலஞ்சென்ற பெரியார் ஸ்ரீ திருவிளங்கம் அவர்கள். இந்த ஜயந்திநகர் ஆலயப் பரிபாலன சபையினர் இப்பொழுது நல்லதொரு பணியைச் செய்திருக்கிறார்கள்.

பிரதி வருடமும் இந்தியாவிலிருந்து ஆடிவேல் திருவிழாவின்போது பல ஆயிரம் யாத்திரிகர்கள் இலங்கைக்கு வருகிறார்கள். அவர்கள் கொழும்புக்கு வரும் பொழுது இங்கு தங்கிச் செல்ல வசதியான இடம் இல்லாதது பெருங் குறையாக இருந்து வந்தது. இந்த நீண்ட காலக் குறையை நிவர்த்தி செய்ய ஜயந்திநகர் கோவில் நிர்வாகிகளான தக்ஷிணத்து வேளாளர் மகமை பரிபாலன சபையினர் சுமார் ஒன்றே கால் லட்சம் ரூபாய் செலவில் அழகான தொரு மண்டபத்தையும் அதையடுத்து ஆறு வசதி மிக்க அறைகளையும் கட்டி முடித்துச் சென்ற வாரம் திறப்பு விழா நடத்தியிருக்கிறார்கள். கோலாகலமாக ஆரம்பித்த இந்த விழா டிஸம்பர் 8-ம் தேதி வரையில் நடைபெறுகின்றது. ஸ்ரீவில்லிப்புத்தூரைச் சேர்ந்த ஸ்ரீ இராமானுஜ அய்யங்கார் தினசரி மாலை ஏழு மணிக்கு மண்டபத்தில் ராமாயண கதாகாலட்சேபம் செய்து வருகிறார். அதற்குத் தினசரி ஏராளமான மக்கள் வருகை தருவது இலங்கையில் ஆஸ்திகம் எந்தமட்டில் வளர்ச்சி பெற்று வருகிற தென்பதை எடுத்துக் காட்டுகிறது. இந்த நல்ல பணிக்கு இரவு பகலாகப் பாடுபட்டு வரும் திரு சங்கரலிங்கம் பிள்ளை, திரு எம். எஸ். இராமையாப் பிள்ளை ஆகியவர்களைச் சைவ உலகம் என்றென்றும் மறப்பதற்கில்லை.

## தோட்ட மாணவர்களுக்குச் சோதனை

இலங்கையில் ரப்பர், தேயிலைத் தோட்டங்களில் வேலை செய்யும் இந்திய தொழிலாளர் குழந்தைகளுக்கு ஒரு கடுமையான சோதனை இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. முன்பெல்லாம் அவர்கள் தோட்டங்களுக்கு அருகிலுள்ள பட்டினங்களில் இருக்கும் கல்வி நிலையங்களில் சேர்ந்து படிக்க எவ்விதமான

## 'இலங்கையர்கோன்' மறைவு

தமிழகத்து இலக்கிய அன்பர்களுக்குப் பெருந் துயரமளிக்கும் செய்தி இலங்கையின் இலக்கிய வட்டாரத்திலிருந்து சமீபத்தில் கிடைத்திருக்கிறது.

இந்தத் தலைமுறையில் ஈழ நாட்டு மறுமலர்ச்சி இலக்கியத்தின் முன்னோடிகளில் ஒருவரும், சிறந்த நாடகாசிரியருமாகிய 'இலங்கையர்கோன்' அவர்கள் காலமாகி விட்டார்கள். சிவஞான சுந்தரம் என்னும் இயற்பெயரை உடைய திரு இலங்கையர்கோனின் மறைவு ஈழ நாட்டு முற்போக்கு இலக்கியத்துக்குப் பேரிழப்பாகும். இலங்கையின் தமிழ் மறுமலர்ச்சி இலக்கிய வரலாற்றில் இலங்கையர்கோனுக்கு நிகரற்ற இடமுண்டு. அம்பாறைமுன் கல் முனையில் டி. ஆர். ஓ. ஆகப் பணியாற்றி வந்த இலங்கையர்கோன் அவர்கள் ஈழத்து எழுத்தாளர் வட்டாரத்தில் பெரு மதிப்புக்குரியவர். அவரது மறைவால் வருந்தும் இலங்கை இலக்கிய அன்பர்களுக்குத் தமிழ்ப்பெரு மக்களின் சார்பாக நமது ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இடையூறுகளும் கிடையாது; இலங்கையர், அல்லாதார் என்ற வேற்றுமைகள் ஏதுமின்றிப் போதிய யோக்கியதாம்சம் உள்ள எல்லா மாணவர்களுக்கும் பள்ளிக்கூடங்கள் இடமளித்து வந்தன. இப்பொழுது கல்வி இலாகா ஒரு புதிய உத்தரவைப் பள்ளிகளுக்கு அனுப்பி வைத்திருக்கிறது. ஒவ்வொரு பள்ளியும் அதற்கு இரண்டு மைல் சுற்றளவில் உள்ள மாணவர்களையே அனுமதிக்க வேண்டுமென்பது முதலாவது உத்தரவு. இலங்கையர்களுக்கு இடமளித்த பின்னரே மற்றவர்களுக்கு இடமளிக்க வேண்டுமென்பது இரண்டாவது உத்தரவு. இவ்விரண்டு உத்தரவுகளின் பயனாகவும் தோட்டத் தொழிலாளரின் குழந்தைகளைச் சேர்த்துக் கொள்ளப் பள்ளிக்கூடங்கள் மறுத்து வருகின்றன. இது அந்தக் குழந்தைகளின் அறிவு வளர்ச்சியை அணை போட்டுத் தடுப்பதாக உள்ளது. இது மிகப் பெரிய அநீதி யென்றும் இந்த உத்தரவை உடனே வாபஸ் வாங்க வேண்டுமென்றும் திரு தொண்டைமான் கல்வி மந்திரியிடம் கோரியிருக்கிறார். அந்தக் கோரிக்கைக்குக் கல்வி மந்திரி இணங்குவாரென்று நம்பப்படுகிறது.

### அடையாள அட்டை

இலங்கையில் சட்ட விரோதமாகக் குடியேறுவோர்களைச் சுலபமாகக் கண்டுபிடிப்பதற்காக இலங்கைவாசிகள் அனைவருக்கும் அவர்களது புகைப்படங்களும் கைரேகை அடையாளங்களும் உள்ள அடையாளச் சீட்டுகள் வழங்குவது என்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. இந்தத் தகவலைப் பிரதம மந்திரி ஸ்ரீமதி பண்டாரநாயகா சென்ற வாரம் செனட் சபையில் அறிவித்திருக்கிறார். இலங்கையர்களுக்கு மட்டுமே அடையாளச் சீட்டுகளை வழங்க வேண்டுமென்பது அரசாங்கத்தின் முந்திய யோசனை. அந்த யோசனையின்படி செய்வதாக இருப்பின் பல பிரச்னைகள் தோன்றக் கூடும். நாடற்றவர்களாக்கப் பட்டிருக்கும் பத்து லட்சம் தோட்டத் தொழிலாளருக்கு, அவர்கள் இலங்கையர்கள் அல்லவென்று கருதி அடையாளச் சீட்டு வழங்காத பட்சத்தில் சட்டவிரோதக் குடியேற்றக்காரர்களைக் கண்டுபிடிக்க அடையாளச் சீட்டு முறை உதவாது. அத்துடன் பல்லாண்டுகளாக இங்கு தோட்டத் தொழிலில் ஈடுபட்டு வரும் தொழிலாளர் அடையாளச் சீட்டு இல்லாத காரணத்தால் எந்த நிமிடமும் சட்ட விரோதக் குடியேற்றக்காரர்களென்று நாடு கடத்தப்படும் ஆபத்து இருக்கவே செய்யும். இவைகளை யெல்லாம் உத்தேசித்துத் தற்சமயம் சட்டபூர்வமாக இலங்கையில் இருப்பவர்கள் எல்லோருக்கும் அடையாளச் சீட்டுகளை வழங்குவதென்றும், அடையாளச் சீட்டு இல்லாதவர்களை யெல்லாம் சட்ட விரோதமாகக் குடியேறியவர்களென்று முடிவு கட்டுவதென்றும் அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. இந்த நடவடிக்கை யெடுக்க ஒரு சட்டம் தயாரிக்கப்பட்டு வருகிறது.

### பல்கலைக் கழகத்திலே

இலங்கை பல்கலைக் கழக மாணவர்களின் இந்து சங்கம் சென்ற வாரம் ஓர் அழகான மலரைத் தயாரித்து வெளியிட்டு அதற்கு ஒரு வெளியீட்டு விழாவையும் பல்கலைக் கழகத்தில் நடத்தியது. இதற்காகத் திரு அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள் இங்கு விஜயம் செய்து அரியதோர் உரை நிகழ்த்தினார். பட்டப் படிப்புப் படிக்கும் தமிழ் மாணவர்களின் சமயப் பற்றை அவரும் மற்றச் சொற்பொழிவாளர்களும் விசேஷமாகப் பாராட்டினார்கள்.

# தலைவலியா ?

உடனே சிறிதளவு

# அமிர்தாஞ்சனம்

தடவுங்கள்

அது விரைவில்
குணமளிக்கும்

ஜலதோஷம், ஜுரம், வாயுப் பிடிப்பு போன்ற உபாதைகளிலிருந்து உங்கள் குடும்பத்தை காப்பாற்றுங்கள். ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்க வேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடுநாள் வரை நீடிக்கிறது.




அமிர்தாஞ்சனம் லிமிடெட், மதராஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புதுடெல்லி-1

JWT AM-14244

# நாகரிகமிக்க நல்வாழ்வுக் கலை

பாப்ளின்கள்

சாவரின் ஸ்டார் • கோல்டன் க்ரேடு
கோல்டன் மனார்க் • டெப்பாசிட்டர்
ரிஜென்டா

**பின்லே** — நேர்த்தியான ஆடைகளை அளிக்கும் ஆலயம்



தி பின்லே க்ரூப் ஆப் மில்ஸ்



# அமாவாசை இருளில்!

கதிர்

நுங்கம்பாக்கத்தில் புதிதாகக் கட்டிய பங்களா அது. கட்டி முடிந்து ஒரு வாரம் கூட ஆகவில்லை. பங்களாவைச் சுற்றி மார்பு உயரத்துக்குச் சுற்றுச் சுவர். ஏறிக் குதிக்க அதிக முயற்சி வேண்டியதில்லை. உள்ளே ஒரு மொட்டைத் தென்னை மரம். மட்டைகளை வெட்டியாகி விட்டது. மரத்தை வெட்ட வேண்டியதுதான் பாக்கி.

பங்களாவின் உள்ளே பல அறைகள். காஷாய வேஷ்டி நிறச் சுவர்களுக்குச் சுண்ணாம்பு பூசி யிருந்தனர். பூசிய சுண்ணாம்பு இன்னும் காயவில்லை. ஏன் மேல்தளத்து கான்கிரீட் ஈரம் கூட இன்னும் காயவில்லை.

எல்லாச் சுவர்களிலும் ஜன்னல்கள். எல்லா ஜன்னல்களுக்குப் பக்கத்திலும் கதவுகள். கதவுகளுக்கும் ஜன்னல்களுக்கும் கனமாகத் தெருப்புழுதி நிறத்தில் 'பெயிண்டு' அடித்திருந்தார்கள். பெயிண்டின் வாடை இன்னும் அடங்கவில்லை. பங்களாக் கதவைத் திறந்ததும் இந்தப் பெயிண்டு வாடைதான் 'குப்' பென்று வீசி மூச்சு முட்டச் செய்யும்.

இன்னும் ஒரு மாதம் போனால் தான் பங்களா புழக்கத்துக்கு உபயோகமாக விளங்கும். இருந்தாலும் அவருக்கு அவசரம். அப்புறம் இந்த மாதிரி பங்களா கிடைக்குமோ, கிடைக்காதோ என்ற கவலை.

இரு மதிவிழியன் (ராச்சிய ஓலைப் பொருள் வளர்ச்சி அதிகாரி) தமது குடும்பத்துடன் பங்களாவுக்குக் குடியேறிவிட்டார். குடியேறி, ஒரு லாரி வீட்டுச் சாமான்களை உள்ளே ஹாலில் கொண்டு போட்டதும், அவருக்கு மூச்சு முட்டியது. அவருடைய மனைவிக்கு இன்னும் அதிகமாக மூச்சுத் திணறியது. முதல் காரியமாக—சுத்தமான காற்று உள்ளே வரும்படி ஜன்னல் கதவுகளைத் திறந்து வைத்தார். கதவுகளைத் திறப்பது அவ்வளவு சுலபமாயில்லை. பெயிண்ட் இறுகிப் பலமாக ஒட்டிக் கொண்டிருந்தது. ஏதோ, இவ்வளவாவது சுத்தக் காற்று வந்ததே யென்ற திருப்தியுடன் ஹாலில் படுத்துக் கொண்டார்கள் முதல் நாள்.

அன்று அமாவாசை. நல்ல இருட்டு. இரவு இரண்டு மணி யிருக்கும். கரு மேகம் சூழ்ந்து வானில் ஒரு நட்சத்திரமும் காணப்படவில்லை. சிறு தூறல் வேறு உதிர்ந்து கொண்டிருந்தது.

பங்களா ஹாலில் மங்கலாக விடி விளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. அதைத் தவிர ஒரு சிறு வெளிச்சமும் கிடையாது. எங்கும் நிசப்தம். எங்கும் ஒரே அந்தகார மயம். இரு மதிவிழியன் உணர்வற்று மரக் கட்டைபோல் உறங்கிக் கொண்டிருந்தார். ஆனால், அவருடைய மனைவிக்குச் சரியாகத் தூக்கம்தான் கொள்ளவில்லை. ஒருவேளை, புது இடம் காரணமாக இருக்கலாம். அது எப்படி யிருந்தால் என்ன?

பின்புறம், சமையல் அறைப் பக்கமிருந்து முதலில் இரும்புத் துண்டு

ஒன்று கீழே விழ்வது போன்ற சத்தம் கேட்டது. மதிவிழியனின் மனைவி உறக்க நிலை கலைந்து ஓசை கேட்ட பக்கம் திரும்பிப் பார்த்தாள். சில விநாடிகள்வரை ஒன்றும் கேட்கவில்லை. ஒரு சிறு சத்தம் கூடக் கேட்கவில்லை. வெறும் மன நிகழ்வா யிருக்கலாம். அல்லது, பங்களா கட்டி முடிக்கும் அவசரத்தில் ஏதாவது ஓர் ஓரமாகக் கொத்தனார்கள் விட்டுச் சென்ற கருவி காற்றில் விழ்ந்திருக்கலாம் என்று நினைத்து அவள் கண்களை மூடிக்கொண்டாள். ஆனால், அவள் நினைத்தது சரியல்ல. மீண்டும் சமையலறையின் பக்கமிருந்து சத்தம். ''டக், டக்!'' என்று ஜன்னல் கதவுகளை இடித்துத் தள்ளும் சத்தம் கேட்டது. இப்போது அவளுடைய சந்தேகம் பறந்து விட்டது. திருடனேதான் ஜன்னல்களை நெக்கித் தள்ளுகிறான்.

மதிவிழியனை அவள் தனது முழங்கையில் முட்டி, ''எழுந்திருங்க, திருடன்!'' என்று தாழ்ந்த குரலில் கூறினாள். மதிவிழியன் விழித்துக் கொண்டு ''எங்கே?'' என்று கேட்டார். ''சமையல் அறைப்பக்கம் பாருங்க!'' என்றாள் அவர் மனைவி. அவள் கூறியது உண்மைதான். சாத்தப்பட்டிருந்த ஜன்னல் கதவு ஒன்று திறந்திருந்தது. இன்னொரு ஜன்னலை, திருடன் திறக்க முயன்று கொண்டிருப்பதைத் திரு மதிவிழியன் நேரிலேயே இப்போது பார்த்து விட்டார். இரண்டாவது ஜன்னலும் இப்போது திறந்து விட்டது. அதன் பின்புறம் திருடனின் நிழல்போல்தெரிந்தது.

மதிவிழியன் அலட்சியமாக, ஆனால் அந்தப் பங்களாவே அதிரும்படியாகச் சிரித்தார். திருடனின் தலை மறைந்தது. அதைக் கேட்டுவிட்டு அவன் ஓடிப் போயிருக்க வேண்டும். ஜன்னல் பக்கம் அவனைக் காணவில்லை. ''எதற்காக அப்படிச் சிரிக்கிறீர்கள், திருடனைப் பார்த்து?'' என்று மதிவிழியனின் மனைவி கேட்டாள்.

''சிரிக்காமல் என்ன செய்வது?'' என்று கேட்டுவிட்டு மதிவிழியன் கூறினான். ''இன்று பகல் முழுதும் அந்த இரண்டு ஜன்னல்களையும் திறப்பதற்கு எவ்வளவோ முயன்றேன். முடியவில்லை. பெயிண்டு காய்ந்து கதவுகளை அப்படிப் பிடித்துக் கொண்டிருந்தது. இப்போது அது திறந்து விட்டது. காற்று எப்படி வருகிறது பார். இந்த அமாவாசை இருட்டில் கூலியில்லாமல் நமக்காக ஓர் ஆள் வந்து வேலை செய்து விட்டுப் போனால் சிரிக்கத் தானே வேண்டும்!''

---

கிரிக்கெட்

# இப்படியும் நடக்குமா?

குஜாருமணி

பெயர்ப் பொருத்தம் அமைவது ரொம்ப அபூர்வம். நல்ல கண்ணு என்று ஒருவருக்குப் பெயர் இருக்கும். ஆனால் அவர் ஒன்றரைக் கண் ஆசாமியாகத் திகழ்வார். ஆனால் கிரிக்கெட் உலகிலே ஆங்கில கிரிக்கெட் வீரர் டபிள்யூ. ஜி. கிரேஸுக்குப் பெயரைப் போலவே கிரிக்கெட் ஆட்டமும் அழகாக அமைந்திருந்தது. அவர் ஆடும் சிறப்பையும் அழகையும் கண்டு அவருக்கு மிஸ்டர் கிரிக்கெட் என்றே ரஸிகர்கள் பெயர் சூட்டி விட்டார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

எந்தக் கிரிக்கெட் பந்தயத்துக்கு வந்தாலும் அவர் ஆட்டம் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விடும். அவர் வருகிறாரென்றால் அவரது ஆட்டத்தைப் பார்ப்பதற்காக மக்கள் திரளாகக் கூடுவார்கள்.

ஒரு சமயம் கிரேஸின் ஆட்டத்தில் ருசிகரமான சம்பவம் ஒன்று நடந்தது. மற்ற எல்லாப் பந்தயங்களிலும் நன்றாக ஆடி ரன்களை எண்ணிக் குவித்த கிரேஸ் ஒரு பந்தயத்தில் வெகுசீக்கிரமே 'அவுட்'டாகி விட்டார். அம்பயரும் அவர் 'அவுட்'டாகி விட்டதைப் பிரகடனப்படுத்தி விட்டார். கிரேஸ் இன்னும் விக்கெட்டை விட்டு நகரவில்லை. மக்கள் அதிசயத்துடன் திகைத்து நின்றனர். அம்பயர் சிலையாகத் திகைத்து நின்று விட்டார்.

அச்சமயம் கிரேஸ் அருகில் வந்த பந்து வீச்சு நிபுணரிடம், ''மிஸ்டர்! இன்று ரஸிகர்கள் என் விளையாட்டைக் காண வந்திருக்கிறார்கள். உங்கள் பந்து வீச்சைப் பார்ப்பதற்காக வரவில்லை. அவர்களை நான் ஏமாற்றத்தில் ஆழ்த்தலாமா?'' என்றாராம். எப்படியிருக்கிறது கதை!

ஃ ஃ ஃ

ஆஸ்திரேலியாவுக்கும் இங்கிலாந்துக்கும் அப்பொழுது டெஸ்ட் பந்தயங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. அந்தத் தருணத்திலே ஆஸ்திரேலியர்கள் தங்கள் ஆட்டத்தைப் பற்றிப் பிரமாதப் படுத்தி வந்தார்கள். ஆங்கில கிரிக்கெட் ஆட்டக்காரர் சார்லஸ் ப்ரை ஆங்கிலக் கோஷ்டிக்கு ஸ்டான்லியே நன்றாகப் பந்தை யடித்துப் பெருமையைத் தேடித் தருவார் என்று கருதினார். டெஸ்ட் பந்தயத்தில் நிச்சயம் இரண்டு சதங்களாவது அவர் போட்டு ஆஸ்திரேலியர்களைத் திணற அடிப்பார் என்று எதிர்பார்த்தார். அவர் கனவு நனவாகவில்லை; அடிபட்டு, உடல் நிலை சரி இல்லாததால் அவரது திறமையை ஐந்தாவது டெஸ்ட் பந்தயம் வரையில் காட்ட முடியவில்லை.

ஐந்தாவது டெஸ்டிலே முதல் இன்னிங்ஸில் ஸ்டான்லி பந்தை வாயு வேகமாகத் தாக்கி முப்பத்திரண்டு ரன்களை எடுத்துக் குவித்தார். சதமெடுக்கப் பாதிகூடத் தாண்டாத நிலையில் அவர் பந்தைப் பிரமாதமாகப் பவுண்டரி எல்லைக்கு அடிக்கும் மும்முரத்தில் தன்னிலை யிழந்து, கத்தி நடனம் புரியும்படியாகி, கடைசியில் விக்கெட்டிலுள்ள 'பெயில்ஸ்' குச்சிகளைத் தாக்கிவிட்டார். கடைசியில் அவர் ஆட்டம் இழக்கும் படியாகி விட்டது.

மாலையில் இந்தச் சம்பவத்தைக் குறித்து சார்லஸ் ப்ரை ஆஸ்திரேலிய கிரிக்கெட் மன்னர் டான் பிராட்மனோடு பேசிக் கொண்டிருந்தார்.

''என்ன! ஸ்டான்லிக்கு இந்த மாதிரி நடந்து விட்டது மிகவும் துரதிர்ஷ்டம்!'' என்றார் சார்லஸ் ப்ரை.

''துரதிர்ஷ்டமா? ஏன்?'' என்று வியப்புடன் கேட்டார் பிராட்மன்.

''பாதி டெஸ்ட் பந்தயங்களிலே அவர் அடிபட்டு விளையாட முடியாமல் போச்சு. பிறகு கடைசியில் ஆட்டம் பிடிக்கிற சமயத்திலே எதிர்பாராத விதமாக 'பெயில்ஸ்' குச்சிகளைத் தாக்கும்படியாகி விட்டது. உலகில் உன்னத நிலையில் தலைசிறந்து விளங்க வேண்டியவருக்கு இப்படி நேர்ந்தால் இது மாபெரும் துரதிர்ஷ்டம்தானே?''

''நிஜமாகவா? இதைத் துரதிர்ஷ்டம் என்றா கூறுகிறீர்கள்?''

''அவர் துரதிர்ஷ்டசாலி என்பதற்கு இதை விட வேறு சான்று வேண்டுமா?''

''இது நிச்சயம் துரதிர்ஷ்டமே இல்லை. ஆட்டக்காரர் பந்தைத்தான் அடிக்க வேண்டுமேயொழிய பெயில்ஸ் குச்சிகளை அடிக்க வேண்டும் என்ற நியதி இல்லையே?'' என்றார் பிராட்மன்.

சார்லஸ் ப்ரை அதிசயத்துடன் பிராட்மனை நோக்கினார். ஆனால் பிராட்மனின் முகம் வெற்றிப் புன்னகையில் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

## டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.)

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும் இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவந்தப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்டுகளிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்.




## ஹரிஜனங்களுக்கு ஒரு சரியான வழிகாட்டி

ஒருநாள் எனது கோவில்பட்டி இல்லத்தில் சில ஹரிஜன இளைஞர்கள் என்னைச் சந்தித்து, ஹரிஜனங்களிடையே புதிய எழுச்சி உண்டாகி யிருப்பதாயும் சுதந்திரக் கட்சிக்கு அவர்கள் பேராதரவு அளிப்பதாகவும் அதை நல்லவிதமாகப் பயனுக்கிக் கொள்ள வேண்டுமென்றும் என்னைக் கேட்டுக் கொண்டார்கள். ''உங்களில் பொறுப்பானவர்களைக் கலந்து கொள்ளாமல் எதுவும் செய்வதற்கில்லை'' என்று சொல்லி யனுப்பி விட்டேன். மறுவாரம் அதே கிழமையில் பெரியவர்களை அழைத்து வருவதாகச் சொல்லிப் போய் விட்டார்கள். அவர்கள் திரும்ப வருவார்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை. ஆனால் குறிப்பிட்ட தினத்தில் சுமார் ஐம்பது பேர்களைத் திரட்டி அழைத்துக் கொண்டு வந்து விட்டார்கள். இருபது கிராமங்களின் பிரதிநிதிகளும் ஆறு பஞ்சாயத்துப் போர்டு தலைவர்களும் அவர்களிடையே இருந்தார்கள்.

'உங்களுக்கும் இப்பகுதி ஹரிஜன எம்.எல்.ஏ.க்களுக்கும் மனஸ்தாபமா? நம்மையும் காங்கிரஸ்காரர்கள் தேடி வரட்டும் என்ற நோக்கத்துடன் இதைச் செய்கிறீர்களா?'' என்று ஆரம்பக் கேள்வியே முரட்டுத்தனமாகக் கேட்டு விட்டேன்:

''உச்சவரம்பு ஏற்படுத்தி மீதமாகும் நிலங்களை உங்களுக்கே பங்கு வைத்துக் கொடுக்கப் போவதாகக் காங்கிரஸ்காரர்கள் கூறுகிறார்களே! கோடிக்கணக்கான பணத்தை, ஹரிஜன முன்னேற்றத்துக்காகச் செலவு செய்வதாகச் சொல்கிறார்களே! அப்படியிருக்க, காங்கிரசை விட்டு, சுதந்திரக் கட்சியை நீங்கள் பின்பற்றுவானேன்?'' என்று தொடர்ந்து கேட்டேன்.

வந்திருந்தவர்களில் சுமார் ஏழு பேர்கள் பேசினார்கள். அவர்கள் கூறியதன் சாராம்சம் இதுதான்:

ஹரிஜனங்கள் தானம் விரும்பவில்லை. நியாயம்தான் கேட்கிறார்கள். உழைப்புக்குரிய ஊதியம் கிடைத்தால் போதுமானது. உத்தியோகஸ்தர்களுக்கும், காங்கிரஸ் தரகர்களுக்குமே சலுகைகள் பலனளிக்கிறதே அன்றி நடைமுறையில் ஹரிஜனங்களுக்குத் தீமையாகவே முடிகிறது. கடன் பளுவும் வியாச்சியமும் எத்தனையோ ஹரிஜனக் குடும்பங்களைக் கெடுத்து வாழ்க்கையைச் சீர்குலையச் செய்துவிட்டன!

காங்கிரஸ் கொள்கையாலும் காங்கிரஸ்காரர் செய்கையாலும் பிற சாதியினருடன் ஹரிஜனங்களின் நேசத் தொடர்பு பாதிக்கப்பட்டிருக்கிறது. வேற்றுமை உணர்ச்சியும் கலகமும் அதனுலேற்பட்ட வழக்குகளும் வளர்ந்து ஏழை ஹரிஜனங்கள் வாழ்வே பாழாகி விட்டது.

காங்கிரஸின் ஆசை வார்த்தைகளால் ஏமாந்து ஆடம்பர வாழ்க்கையும், தங்கள் தொழிலைக் கைவிட்டதன் விபரீத பலனும் தான் ஏற்பட்டிருக்கின்றன. காங்கிரஸ்காரர்கள், உத்தியோகஸ்தர்கள் இவர்கள் பின்னால் திரிவதும் சர்க்கார் அலுவலகங்களிலும் கோர்ட்டுகளிலும் காத்துக் கிடப்பதும்தான் ஹரிஜனங்களின் காரியமாகி விட்டன.

காந்திஜிக்கு அடுத்தாற் போல் ராஜாஜிதான் ஹரிஜனங்களின் நண்பர், தலைவர். ராஜாஜியின் வழியைப் பின்பற்றினுல் தான் ஹரிஜன சமூகம் முன்னேற்றமடையும் என்று அவர்கள் திடமாக நம்புகிறார்கள்.

கிராம ஹரிஜனத் தலைவர்களுக்கு இருந்த விஷய ஞானத்தைக் கண்டு நான் ஆச்சரியம் அடைந்தேன்.

மற்றப் பகுதிகளிலுமுள்ள ஹரிஜனங்களிடம் சுதந்திர இயக்கத்தைப் பரப்பும் பொறுப்பை இந்த ஹரிஜனத் தலைவர்களே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டேன். அதற்கிணங்க அவர்களும் நெல்லை, ராமநாதபுரம் ஜில்லாக்களில் ஹரிஜனங்கள் மிகுந்த சுமார் ஐம்பது கிராமங்கள் வரை சுற்றி வந்திருக்கிறார்கள். எங்கும் குதூகல வரவேற்பு. எல்லாச் சேரிகளிலும் காங்கிரஸ் பேரில் ஒரே வெறுப்பு! தமிழ் நாட்டின் தென் பகுதியில் சுதந்திர ஹரிஜன மகாநாடு நடத்த அம் மக்கள் துடித்து வருகிறார்கள்!

தூத்துக்குடி
21-11-61

மு. சி. வீரபாகு

## மாற்றத்தில் ஓர் ஏமாற்றம்

பழைய திட்டப்படி எஸ். எஸ். எல். ஸி. புத்தகத்தில் நான்காம் படிவத்திலிருந்து ஆறும் படிவம் வரை மாணுக்கனுடைய உயரம், எடை, மார்பு சுற்றளவு, விளையாட்டிலும் ஓட்டப் பந்தயத்திலும் அவனுடைய திறமை ஆகியவற்றைக் காட்டும் ஏடுகள் இடம் பெற்றிருந்தன.

ஆனால் தற்பொழுது புதிய பாடத்திட்டப்படி பத்தாம் வகுப்புப் புத்தகத்தில் இப் பகுதியையே காணும். ஞாபக மறதி கார

> நன்மை பயப்பதற்கு அடிப்படை அன்பு. எல்லா சாஸ்திரங்களும் இதைத்தான் சொல்லும். பூமியை மலைகள் தாங்குவது போலவும், மனித சரீரத்தை எலும்பு தாங்குவது போலவும் மனித சமூகத்தை அன்பு தாங்குகிறது. —ராஜாஜி

ணமா? அல்லது உடற்பயிற்சியைப் பற்றிக் கவலையில்லையா? இல்லாவிடில் உடற்பயிற்சி ஆசிரியர்களுக்கு வேலைப்பளு குறையத்தான் இந்த ஏற்பாடா? இப்படியெல்லாம் இருக்காது. புதிதாக மாற்றம் ஏற்படும் பொழுது ஏதாவது ஒன்றுசேர்க்கப்பட வேண்டும்; அல்லது எடுபட வேண்டும் என்னும் ஒரு 'நியதி' மேற்கொள்ளப் படுகிறதல்லவா? அதன்படியே இவ்வாறு செய்யப் பட்டிருக்கலாம். எப்படியானால் என்ன? பள்ளியில், பயிலும்பொழுதே நாட்டுப் பற்று, நல்ல உடற்கட்டு, கடமை, கட்டுப்பாடு, பண்பு முதலிய அருங் குணங்களை மாணவர்கள் பெற என். ஸி. ஸி., ஏ. ஸி. ஸி. போன்ற பயிற்சிகளுக்குப் பல லட்சம் ரூபாய்கள் செலவு செய்யும் நமது அரசினர், இருந்த பயனுள்ள ஒரு பகுதியையும் அடியோடு நீக்கி யிருக்கிறார்கள்!

எரகுடி
20-11-61

வ. இ. இராமராசன்

## ஏட்டுச் சட்டம் வீட்டுக்கு உதவுமா?

என் கணவர் தஞ்சை ஜில்லா போர்டு உயர்நிலைப் பள்ளியில் பத்து வருடங்களாக மொழிஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். 1-6-1960 லிருந்து சர்க்கார் புது உத்தரவுப் படி அவருக்கு ரூ 90+10 சம்பளம் கிடைக்க வேண்டும். 18 மாதங்களாகியும் பல வேண்டுகோள்கள் அனுப்பப்பட்டும் இந்தச் சம்பள விகிதம் அவருக்குக் கிடைக்கவில்லை. எழுதிய கடிதங்களுக்குப் பதிலும் இல்லை.

இது பழைய கதை. 1-5-61 முதல் புதுக் கதை. இந்தத் தேதியிலிருந்து, பயிற்சிபெற்ற ஆசிரியர் என்ற முறையில் 90-4-110-3-140 என்ற ஊதிய விகிதம் என் கணவருக்குக் கிடைத்திருக்க வேண்டும். சம்பந்தப்பட்ட எல்லா சர்ட்டிபிகேட்டுகளும் உரிய காலத்தில் அனுப்பப்பட்டு விட்டன. இதற்கும் இன்று வரையில் அமுல் தரப்படவில்லை. புதிதாக வேலைக்கு வருபவர்களுக்குச் சம்பளம் நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. ஆனால் பத்து வருடங்களாக ஆசிரியப் பணி புரிபவருக்கு இன்னமும் இந்தச் சம்பள உயர்வுச் சட்டத்தால் பலன் கிட்டவில்லை.

மேற்பெரும்பள்ளம்
21-11-61

ஏ. ஜயலெக்ஷ்மி

## வரலாறு கண்டறியா வண்டி

திருச்சியிலிருந்து மானாமதுரைக்கு மாலை மூன்றரை மணிக்கு ஒரு பாசஞ்சர் வந்து சேர வேண்டும் என்று கால அட்டவணையில் இருக்கிறது. ஆனால் இந்த வண்டி சரியான காலத்துக்கு மானாமதுரையை அடைந்ததாகச் சரித்திரமே கிடையாது. இந்தத் திருச்சி - மானாமதுரை பாசஞ்சர், மதுரை - இராமேசுவரம் பாசஞ்சரைச் சந்திக்கவேண்டும் என்று பெயர். ஆனால் இது எவ்வளவு நாட்கள் ஒழுங்காக இவ்வாறு சந்தித்திருக்கிறது? இந்நிலைமையைப் போக்க ரயில்வே நிர்வாகம் முற்படுமா?

மானாமதுரை
24-11-61

வின்சென்ட்

## விமோசனம் உண்டா?

கோடம்பாக்கம் ரயில்வே ஸ்டேஷனுக்கும் ராணி மேரி கல்லூரிக்குமிடையே இது வரை ஓடிக் கொண்டிருந்த 12-D பஸ்கள் சில வாரங்களாக ஒரு காரணமுமின்றித் திடீரென்று நிறுத்தப்பட்டுவிட்டன. இதற்கு ஈடு செய்வதுபோல் 12- (வடபழனி-சாந்தோம்) 'ரூட்'டில் இன்னொரு பஸ்ஸைச் சேர்த்திருக்கிறார்கள். இந்த மார்க்கத்தில் ரயில்வே கோட் காரியாலயம் செல்வதற்கு நாள் தவறாமல் காலதாமதம் ஏற்படுகிறது. மக்களது சௌகரியங்களை அதிகரிக்கத்தான் இயலவில்லை என்றால், இருந்து வந்த ஒரு சௌகரியத்தைக்கூடவா அகற்ற முற்பட வேண்டும்?

சென்னை-33
5-11-61

கே. வேதமூர்த்தி

## வட பழனியாண்டவர் கோடி அர்ச்சனை

அருணகிரியார் தென் பழனியாண்டவனைப் பாடும்போது 'ஈதலும் பல கோலால பூஜையும்' பற்றிக் கூறினார். அந்தத் தென் பழனியாண்டவனே சென்னை யம்பதியை வடபழனியாக்கி அருள் பாலிக்கும்போது இங்கு 'ஈதலும் பல கோலால பூஜையும்' செழிப்பதற்குக் கேட்கவா வேண்டும்? வட பழனியாண்டவனுக்கு டிசம்பர் 7ந் தேதியிலிருந்து கோலாகலமாகக் கோடி அர்ச்சனை நடத்த ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்கள் தலைமையில் ஒரு குழுவினர் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். 'நான் என் செய்யும், வினைதான் என் செய்யும், எனை நாடிவந்த கோள் என் செய்யும்?' என்று முருகன் அடியார் பாடினாரல்லவா? அதற்கேற்ப, 1962ம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் எட்டுக் கோள்கள் ஒன்று சேருவதால் ஏற்படக்கூடிய உற்பாதங்களைத் தவிர்க்கவே இந்தக் கோடி அர்ச்சனை நடக்கவிருக்கிறது. அன்பர் யாவரும் ஒரு சகஸ்ரநாம அர்ச்சனைக்கு ரூ. 10 வீதம் தந்து இந்தக் கோடி அர்ச்சனையை இரண்டு கோடியாகப் பூர்த்தி செய்து தரவேண்டும். தொகை அனுப்ப வேண்டிய முகவரி: பொருளாளர், கோடி அர்ச்சனைக் குழு. 4, வெல்டர்ஸ் தெரு, சென்னை-2.

# உங்கள் சிந்தனைக்கு...

**தண்ணீர் மீது கொசு நிற்கிறதே. எப்படி ?**

தண்ணீரில் பல கோடி தண்ணீர் மூலகங்கள் (Molecules) இருக்கின்றன. மூலகங்களுக்கிடையே கவர்ச்சி இருக்கிறது. ஆகவே தண்ணீர் ஒரு பாத்திரத்தில் நிற்கும்போது தண்ணீர் மூலகங்கள் இணைந்து ஓர் ஏடு போல் மேலே படர்ந்திருக்கின்றன. கொசு காலை வைக்கும் போது கொசுவின் கால் இந்த ஏட்டைத் துளைத்து உள்ளே செல்வதில்லை. ஆகவே அவை சுலபமாக மிதந்து நடக்கின்றன.

**சில வகைத் தண்ணீருடன் சோப்பு எளிதில் கரைபடுவது இல்லை. ஏன் ?**

தண்ணீரில் கால்சியம் மக்னீஷியம்-பைகார்பனேட், சல்பேட், குளோரைடு போன்ற பொருள்கள் கலந்திருக்கின்றன. இவை சோப்புப்போட்டவுடன் சோப்பை எடுத்துக் கொண்டு திரி திரியான ஒரு வெள்ளைப்பொருளை உண்டாக்குகின்றன. இப்படி நீரில் இருக்கும் எல்லா உப்புக்களும் தீர்ந்த பிறகுதான் நீர் சோப்புடன் கலந்து நுரை தருகிறது. இத்தகைய தண்ணீரினால் நமக்குச் சோப்பு நஷ்டம்.

**கட்டபொம்மன் மண்ணெண்ணெய் விளக்குக் கம்பங்களை வீதிதோறும் நாட்டியிருந்தான். உண்மையா ?**

இல்லை. கட்டபொம்மன் காலத்தில் எண்ணெய் விதைகளிலிருந்துதான் எண்ணெய் எடுத்து விளக்கு எரித்தார்கள். கட்டபொம்மன் காலத்துக்குச் சுமார் ஐம்பது ஆண்டுகள் கழித்துத்தான் 1859ல் மண்ணெண்ணெய் கண்டுபிடிக்கப்பட்டது. பூமியிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயைப் பக்குவப் படுத்தினால் பெட்ரோல், மண்ணெண்ணெய், பசை முதலியவை கிடைக்கின்றன.

**பாரதியார் ஜுரமாய்க் கிடந்தபோது பெனிசிலின் ஊசி போட்டுக் கொண்டு குணமானார். சரியா ?**

பாரதியார் அந்திம காலத்தில் ஜுரமாய்க் கிடந்தபோது பெனிசிலின் கண்டுபிடிக்கப்படவில்லை. முதல் பெனிசிலின் போரில் காயமுற்ற ஒரு வீரனுக்கு அளிக்கப்பட்டது. போதுமான அளவில் இல்லாததால் அவன் இறந்தான். அதற்குப் பின் சுமார் பதினைந்து ஆண்டுகள் கழித்துத்தான் — இரண்டாம் உலகப் போரின் போதுதான் — அது பெருமளவில் தயாரிக்கப்பட்டது.

**மோட்டாரை முதலில் ரஷ்யர்கள்தான் கண்டுபிடித்தார்கள். வாஸ்தவம்தானா?**

''மோட்டாரை முதலில் ரஷ்யர்கள் தான் கண்டுபிடித்தார்கள். ஆனால் அதை ஓட்டுவது எப்படி என்பதை அமெரிக்கர்களிடமிருந்து கற்றார்கள்'' என்றொரு கேலிப் பழமொழி உலவி வருகிறது. என்றாலும் மோட்டார்களை முதலில் உருவாக்கிய பெருமை ஜெர்மானியரையே சேரும். 1876-ல் நிக்கோலஸ் ஆட்டோ என்பவர் அநேகமாக இன்றைய பெட்ரோல் எஞ்சினைப் போலவே இயங்கும் ஓர் எஞ்சினைச் செய்தார். ஒன்பது வருஷங்களுக்குப் பிறகு இதனையே சிறிய அளவில் தயாரித்துச் சைக்கிள் ஒன்றில் பொருத்தி ஓட்டினார் டைம்லர் என்பவர். இதில் கெரோஸின் பயன்பட்டது. அதே வருஷத்தில் பென்ஸ் என்ற இன்னொரு ஜெர்மானியர் பெட்ரோலில் இயங்கும் மூன்று சக்கர வண்டி யொன்றைத் தயாரித்தார். இன்றைய மோட்டார் இவற்றிலிருந்து வளர்ந்த ஒன்றுதான்.

**முகத்துக்குப் பூசும் பவுடரில் முக்கியமாக என்னென்ன பொருள்கள் கலந்துள்ளன ?**

இயற்கையில் கிடைக்கும் மாக்கல் மாவு (மக்னீஷியம் சிலிகேட்) உலர்ந்த சைனாக் களிமண், மக்னீஷியம் கார்பனேட், துத்தநாகம் அல்லது மக்னீஷியம் சேர்ந்த சோப்புத் தூள், துத்தநாக ஆக்சைடு (சிங்க் ஆக்சைடு) இவை கலந்துதான் செய்யப்படுகிறது. சில சமயம் நிறம் அளிக்க இரும்பு ஆக்சைடு அல்லது சாயங்கள் சேர்க்கப்படுகின்றன. மணம் தர வாசனைப் பொருள்களும் கலக்கப் படுகின்றன.

**டி. டி. டி. இது எதன் சுருக்கம் ?**

டைகுளோரோ, டைபினைல், டிரை குளோரோ ஈதேன் என்பது இதன் முழுப் பெயர். இதைச் சுருக்கமாக டி. டி. டி. D. D. T. என்கிறோம். இது ஒரு பூச்சி மருந்து. மண்ணெண்ணெயில் கலந்து இதைத் தெளிக்கலாம். இது விஷம். ஆகவே உணவுப் பொருள் மீது தெளிக்கக்கூடாது; குழந்தைகள் கைக்கெட்டும் படியும் வைக்கக் கூடாது.

**வாஷிங் சோடாவுக்கும் ரொட்டிச் சோடாவுக்கும் என்ன வித்தியாசம் ?**

துணி வெளுக்கும் சோடாவில் ஒரு குறிப்பிட்ட எடையில் இருக்கும் காரம் (சோடியம் ஹைட்ராக்சைடு) அதே எடையுள்ள ரொட்டி சோடாவில் இருப்பதைவிட அதிகம். ரொட்டி சோடா சலவைச் சோடாவுடன் ஒப்பிட்டு நோக்கும்போது குறைந்த காரம் உடையது. அதனால்தான் ரொட்டி, அப்பளம், சமையல் செய்ய அது உபயோகப்படுகிறது. ரொட்டிச் சோடாவை அதிக நாட்கள் வைத்திருந்தால் அது மெதுவாகச் சலவைச் சோடாவாக மாறும்.

**இந்திய அணுசக்தி நிலையத்தின் தலைவர் யார் ?**

எச். ஜே. பாபா என்பவர். அகில உலகிலும் அணு சக்தி ஆராய்ச்சியில் இவர் ஒரு சிறந்த நிபுணர். அணுசக்தி ஆராய்ச்சி செய்யவும் அணு சக்தி நிலையம் ஏற்படுத்தவும் இந்திய அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப் பட்டுள்ள நிலையத்தின் தலைவர். இவரின் கீழ் சுமார் எண்ணூறு விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்கின்றனர்.

தொகுத்தவர்

உதயமூர்த்தி

நெஞ்சில் கொஞ்சம் அநுதாப உணர்ச்சியோடுதான் நான் ராமானுஜத்தைப் பார்க்கச் சென்றேன். மனிதர் பல் வலியால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார் என்று தகவல் கிடைத்தது.

"ஐயா! நீர் உம்முடைய அருமையான முருங்கை மரத்திலிருந்து சேகரித்துக் கொடுத்த கோந்து ஒட்டவில்லை!" என்று ஒரு குரல் அழுவதற்காகச் சென்ற முறை சென்றிருந்தேன்.

"நல்ல கோந்து கிடைப்பதும் நல்ல மனைவி அமைவதைப் போன்று அவரவர் அதிருஷ்டத்தைப் பொறுத்தது ஐயா!" என்று ஒரே வரியில் பதில் சொல்லிவிட்டு நாக்கை மடித்துச் சின்னப் பையன் மாதிரி 'டொக் டொக்' என்று ஓசை எழுப்பினார். அந்த ஓசை ராமாநுஜத்தின் 'டிரேட் மார்க்' மாதிரி! இனங்காண முடியாத ஆத்ம திருப்தியின் விசேஷ வெளியீடாகச் சில சமயங்களில் மனிதர் இவ்வாறும் சமிக்ஞைகளைத் தோற்றுவிப்பது எங்களுக்கெல்லாம் பழகிப் போன விஷயம்.

மனிதரால் இம்முறை பல்வலி காரணமாக அம்மாதிரி சேஷ்டை எதுவும் செய்ய முடியாது என்று சிரித்துக் கொண்டே அவர் வீட்டுப் படியில் காலை வைத்தேன். என் தலையைக் கண்டதும் படுக்கையிலிருந்தபடியே, கூப்பாடு போட்டு வரவேற்றார். மனிதருக்கு இதுவும் பழகிப் போன விவகாரம். பல் வலியையும் மீறி அது வெளிவந்திருக்கிறது என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்!

நான் அருகில் சென்று உட்கார்ந்ததும், "ஓய்! இந்த உலகத்தில் பல் வலி இல்லாதவர்களெல்லாம் தற்போதைக்கு எனது எதிரிகள்" என்று என்னைப் பார்த்துப் போர் முரசு கொட்டினார்.

நான் விழித்தேன்.



''பயப்படாதீர்! உமக்குப் பல் வலி ஏதும் கிடையாதென்றாலும் சினிமாக்களில் வரும் இரட்டை வேஷம் மாதிரி நீர் நமது நண்பரும் கூட!'' என்று 'கடகட' வென்று சிரித்துக் கொண்டே அபயம் அளித்தார். ஆனால் அடுத்த விநாடி, ''ஆ! உயிர் போகிறதே!'' என்று கன்னத்தை அமுக்கிக் கொண்டார்.

''என்ன ஓய்! பல் வலி என்று இப்படிப் படுத்து விட்டீரே! உமக்கெல்லாம் ஓடி ஆடி எப்பொழுதும் எதையாவது செய்துகொண்டிருக்கா விட்டால் பொழுது போகாதே!''

''என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்! இப்படிப் படுத்துக் கொண்டதனால் புதிதாக எத்தனை விஷயங்கள் தெரிய வந்தன என்கிறீர். உதாரணத்துக்கு உமது தலைக்கு மேலே பாருமேன், சொல்கிறேன்!'' என்றார்.

நான் பேசாமல் சிரித்துக் கொண் டிருந்தேன்.

''அட, பாருமேன், ஐயா!'' என்று விரட்டினார்.

நான் மேலே பார்த்தேன்.

''பார்த்தீரா! உமக்கு என்ன தெரிந்தது? ஒன்றும் தெரிந்திருக்காது! நானே சொல்லி விடுகிறேன். மொத்தம் விட்டக் கழிகள் பதினேழு. இந்தக் கோடியிலிருந்தும் அந்தக் கோடியிலிருந்தும் ஒரு முறைக்கு இரு முறைகள் நன்றாக எண்ணிப் பார்த்து விட்டுத்தான் சொல்கிறேன்...!



''ஆறாவது விட்டக்கழியைப் பாரும்- இடது கோடியில் வெள்ளையா ஒரு பூச்சிக் கூடு தெரிகிறது. போன வாரம் எனக்கு இந்தப் பல் வலி வந்திருக்கப்படாதா? அப்பொழுதே இது என் கண்ணில் பட்டிருக்கும். மீனுக்குட்டி கீழே விழுந்து முட்டிச் சில்லைப் பேர்த்துக் கொண்டு நின்ற பொழுது அதை எடுத்துக் 'கப்'புனு அப்பி யிருக்கலாம். போகட்டும்...

''எட்டு—இல்லை—ஒன்பதாவது கழியில் சின்னதா ஓர் ஓட்டை தெரிகிறது பாரும். அதற்குள் ஒரு குளவி 'ஜில்'லுனு போறதும் வரதுமா காலட்சேபம் பண்ணிக் கொண்டிருந்தது. கடைசியாக உள்ளே போய் அஞ்சு நிமிஷமாச்சு. நானும் பார்த்துக் கொண்டே இருக்கிறேன். அது வர வழியாகக் காணோம் — நீர்தான் வந்து நிற்கிறீர். ஆயிற்றா? பதின்மூன்றாவது கழியில் பாரும். ஒரு பல்லி சர்க்கஸ்காரன் மாதிரி பக்கவாட்டில் தொத்திக் கொண்டு இரண்டு மணியா ஒரே பழியாகக் கிடக்கிறது.''

உற்சாகமாகச் சொல்லிக் கொண்டு வந்தவர், ''ஆ! என்ன வலி, பிராணன் போகிறதே!'' என்று முகவாயை அமுக்கிக் கொண்டார்.

''போதும் ஐயா, ஏன் இந்தப் பல் வலியில் அலட்டிக் கொள்கிறீர்?'' என்று மெதுவாகச் சொல்லி வைத்தேன்.

''என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்? இதையும் பாரும்; சொல்கிறேன். கடைசிக் கழி சுவரோடு சேரும் மூலையில் பார்த்தீரா? பென்சிலால் ஏதோ எழுதியிருக்கிறது. அந்த மொச்சைக் காய்க் கொட்டை எழுத்து நம்ம சுந்துப் பயலுடையதுதான். 'கே. சுந்தரராமன் இரண்டாவது படிவம் 'அ' பிரிவு, ப. உ. பள்ளி, காஞ்சிபுரம், சென்னை ராஜ்யம், தமிழ் நாடு, இந்தியா, ஆசியா, பூலோகம்' என்று ஒன்றின் கீழ் ஒன்றாக முழ நீளத்துக்கு எழுதியிருக்கிறான். சுண்ணாம்பு அடிக்கிறவன் ஏணியைக் கொண்டு வந்து சாத்தின போதுதான் சுந்துப் பயல் 'கபால்'னு ஏறித்

தன்னுடைய மெய்க் கீர்த்தியை'ப் பொறித்திருக்கிறுன். கழுதை வரட்டும், சொல்கிறேன். இரண்டு முதுகிலே சாத்தணும்!'' என்று உற்சாகமாகச் சொன்னவண்ணம் பல்லைக் கடிக்கப் போனவர், ''ஆ! உயிர் போய்விட்டதே!'' என்று மீண்டும் கத்திஞர்.

அவர் கத்தி ஓய்வதற்கும் வெளியிலிருந்து அவர் மருமான் சாரங்கன் உள்ளே வருவதற்கும் சரியா யிருந்தது.

''என்ன மாமா பல் வலி எப்படி இருக்கிறது? உம்...!'' என்ருன் சாரங்கன்.

''அது இருக்கட்டும். முதலிலே இதைப் பார்த்தாயாடா?''

சாரங்கன் கூர்ந்து பார்த்து, '' நம்ம கந்துப் பயல் 'கைவண்ணம்''' என்ருன்.

''எலே! ரசிக்கிருயா? எல்லாம் உன் கையாலாகாத்தனம்தான் அந்தக்கழுதை இப்படிக் கொட்டம் அடிக்கிறுன்...!''

ராமானுஜம் சொல்லிக் கொண்டே இருக்கும்போது எங்கிருந்தோ பாய்ந்து வந்த டென்னிஸ் பந்து ஒன்று பறந்து அலமாரியிலிருந்த கண்ணுடி சீசாவைத் தாக்கியது. 'ஸிலிங்' என்ற சத்தத்துடன் சீசா கீழே விழுந்து உடைந்தது.

''பலே, பிரமாதமான குறி!'' என்று வியந்தான் சாரங்கன். ''டேய்!'' என்று ராமானுஜம் ஓர் அதட்டல் போட்ட பிறகுதான் தனது அசட்டுத்தனம் விளங்கியது சாரங்கனுக்கு. அதற்குள் வியர்க்க விறுவிறுக்க ஓடிவந்தான் கந்துப் பயல்.

அவனைப் பார்த்ததும் ராமானுஜத்தின் ஆத்திரம் பின்னும் அதிகமாகியது. ''எலே, என்னடா இது?''

''ஒண்ணுமில்லே. சும்மா ஒரு 'ஷாட்' அடித்தேன். சீனுதான் 'எங்கே அடியேன் பார்ப்போம்'ஞன்... வந்து....''

''கழுதை! இப்போ உன் முதுகில் நான் இரண்டு 'ஷாட்' அடிக்கிறேன், பார். வீட்டுக்குள்ளேயாடா பந்து விளையாடுகிறது? செய்கிறது அத்தனையும் படு விஷமம். டே, சாரங்கா! அந்தப் பந்தை எடுடா இப்படி. அவன் விளையாடுவதைப் பார்த்து விடுவோம்.''

சாரங்கன் அதீதமான உற்சாகத்தோடு பாய்ந்து பந்தை எடுத்து ராமானுஜத்தின் கையில் கொடுத்தான்.

கந்துவின் பந்தை ஜாக்கிரதையாக ஒளித்து வைத்துவிட்டு என்னுடன் புறப்பட்டார் ராமானுஜம். எனக்குத் தெரிந்த பல் டாக்டரிடம் அழைத்துச் செல்வதாக நான்தான் கூறினேன்.

டாக்டர், ராமானுஜத்தையும் அவருடைய வலி மிருந்த பல்லையும் நன்ருகப் பரிசோதித்து விட்டு ஏதோ ஒரு மருந்தைத் தடவினுர். அவர் ஒவ்வொரு முறையும் ராமானுஜத்தின் பல்லை 'டொக், டொக்' என்று தட்டிக் காண்பிக்கும்போது ராமானுஜம் அலறினுர்.

ஏதோ மாத்திரைகளின் பெயரை எழுதிக் கொடுத்து விட்டு மூன்று நாட்களுக்குப் பிறகு பல்லைப் பிடுங்கிவிட வேண்டும் என்று கூறினுர் டாக்டர்.

''அப்பொழுது நிச்சயம் பல்லைப் பிடுங்கி விட வேண்டியதுதான் என்று சொல்லுங்கள்'' என்று ஒரு முறைக்கு இரண்டு முறைகள் உறுதிப்படுத்திக் கொண்டார் ராமானுஜம்.

''ஆமாமய்யா அதுதான் சொன்னேனே'' என்ருர் டாக்டர் சற்றுக் கடிந்தாற்போல்.

வெளியில் வந்த ராமானுஜம் டாக்டரின் உதவியாளரிடம், ''ஒரு பல்லைப் பிடுங்க டாக்டர் எவ்வளவு சார்ஜ் செய்வார்?'' என்று கேட்டார்.



பதினைந்து ரூபாய் ஆகலாம் என்று பதில் வந்தது.

''என்னது? பதினைந்து ரூபாய் என்று சொன்னீர்!'' என்று வாயைப் பிளந்தார் ராமானுஜம். திரும்பி வரும் போது, ''ஓய்! இது நமக்குக் கட்டுப்படியாகாது'' என்றார்.

''எது?''

''பதினைந்து ரூபாய்க்குப் பல்லைப் பிடுங்குவதுதான்.''

''பிறகு? இப்படியே அவஸ்தைப் படப்போகிறீரா? நல்ல கஞ்சன்தான்!''

''அட, போம் ஐயா! இப்போதே இலேசாக ஆடிக் கொண்டிருக்கிறது. பல்லைக் கடித்துக் கொண்டு எப்படியாவது நானாகவே ஆட்டிப் பிடுங்கி விட்டால் பதினைந்து ரூபாய் மிச்சமாகுமே என்று நினைக்கிறேன்.''

நாங்கள் அவர் வீட்டை நெருங்கும் போது வீட்டு வராந்தாவில் சிறுவர்கள் ஒரே கொட்டமடித்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். கந்துப் பயல் ராமானுஜம் ஒளித்து வைத்திருந்த பந்தைத் தேடி எடுத்துத் தன் சகாக்களுடன் 'வாலி பால்' விளையாடிக் கொண்டிருந்தான்.

ராமானுஜத்துக்கு இதைப் பார்த்ததும் மாபெரும் கோபம் வந்துவிட்டது. ''பாரும்! அந்தப் பயலை என்ன பாடு படுத்துகிறேன்'' என்றார் ராமானுஜம், பல் வலியையும் மறந்து.

தரையோடு தரையாகப் பம்மிச் சென்றார் ராமானுஜம். எல்லோரும் விளையாட்டுமும்முரத்தில் இருந்தார்கள்.

''பாருடா, நான் ஒரு 'கட்' அடிக்கிறேன், இதை எடுங்களேன், பார்க்கலாம்'' என்று சவால் விட்டபடி கந்துப் பயல் எழும்பி அடித்த பந்து பதுங்கிச் சென்ற ராமானுஜத்தின் முகத்தில் 'படீர்' என்று தாக்கியது.

'ஆ!' என்று ஓர் அலறல் கிளம்பியது அவரிட மிருந்து. அவ்வளவுதான்.. பயல்கள் அனைவரும் மூலைக்கு ஒருவராகப் 'பிய்த்துக் கொண்டு' ஓடினார்கள்.

அலறல் கேட்டு உள்ளே இருந்து வந்த சாரங்கன் மீண்டும் போய் ஒரு சொம்பில் தண்ணீர் கொண்டு வந்தான். ராமானுஜம் தண்ணீரைக் கொப்புளித்து உமிழ்ந்த பொழுது செந்நீருடன் ஏதோ ஒரு பொருளும் கீழே விழுந்தது.

''என்ன மாமா இது?'' என்று கேட்டான் சாரங்கன்.

ராமானுஜம் கூர்ந்து பார்த்துவிட்டுத் தமது முகவாயில் கடைவாய்ப்புறம் விரலால் அழுத்திப் பார்த்தார்.

''டே, பல்லுடா. விழுந்து விட்டது போலிருக்கிறது'' என்று உற்சாகத்துடன் கத்தினார்.

''சரிதான். கந்துப் பயல் உமக்குப் பதினைந்து ரூபாய் மிச்சமாக்கி விட்டான். அவன் நீர் ஒளித்து வைத்திருந்த பந்தை எடுத்து விளையாடியதற்காகக் கோபித்துக் கொண்டீரே. இப்பொழுது பாரும் அவன் செய்த உதவியை'' என்றேன்.

உள்ளே வந்து ஆசுவாசப்படுத்திக் கொண்ட ராமானுஜம், ''டே, சாரங்கா அந்தச் கந்துவைக் கூப்பிடுடா இப்படி. பாவம், பயல் நடுநடுங்கிக் கொண்டிருப்பான். அவனுக்கு நல்லதாக ஒரு பெரிய பந்தே வாங்கிக் கொடுத்துவிட வேண்டும். பாவம், மார்க்கர் பங்காரு கொண்டு வந்து தரும் டென்னிஸ் பந்தையே வைத்து விளையாடுகிறான்'' என்றார் நன்றிப் பெருக்குடன்.

ஆனால் கந்துப் பயலைத்தான் அந்தப் பிராந்தியத்திலேயே காணவில்லை!



பண்டிட் டி.கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்துக்கும் பலத்துக்கும்

ஆயுர்வேதாஸ்ரமம் (பிரைவேட்) லிட்.
மதராஸ்-17

## மலச்சிக்கலும் மூல வியாதியும்

மூல வியாதி அல்லது மலக் குடலின் உட்புறம் வெளிப்புறமுள்ள இரத்தக் குழாய்கள் வீங்குவதன் மூலம் ஏற்படும் இரத்தப் பெருக்கு. இவை உண்டாவதற்குக் காரணம் அடிக்கடி ஏற்படும் மலச்சிக்கல் உபாதையின் காரணமாக மல நிவர்த்தி செய்ய மிகவும் கஷ்டமாகவும் உபத்திரவமாகவும் இருக்கிறது. மலச் சிக்கல் அதிகமாகி, வலியை உண்டாக்கும். சரும வெடிப்புகளுடன் மூல வியாதியும் அதிகமாகிறது. மூல வியாதியின் தொல்லை ஒழிந்தால் தான் குடலிலிருந்து அசுத்தங்களை வெளியேற்றுவது சுலபமாகும். ஹெடன்ஸா அதைத்தான் செய்கிறது. வலியையும் நமைச்சலையும் அகற்றி நிச்சயமாக நிவாரணமளிக்கிறது. அதனைத் தொடர்ந்து உபயோகிப்பதால், மூலம் சுருங்கி நிவாரணம் கிடைக்கின்றது. பிரசித்தி பெற்ற ஜெர்மன் மூல நிவாரணியான ஹெடன்ஸாவில் அவயவத்தை மறத்துப் போகும்படி செய்யக் கூடிய மருந்து ஒன்றும் சேரவில்லை. துணியில் கறையுண்டாக்காது. உபயோகிப்பதும் சுலபம். ஒவ்வொரு மருந்துப் பெட்டியிலும் ஒரு சிறு பிளாஸ்டிக் மூக்குக் குழாயும், அதனை உபயோகிக்கும் முறைகள் அடங்கிய குறிப்பும் உண்டு. மூல வியாதி என்றால் அதற்கு ஹெடன்ஸாதான் ஏற்ற மருந்து. இன்றே ஹெடன்ஸா உபயோகித்துப் பாருங்கள். இப்போது இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது.

DZ - 952A

**Iris INK** ஐரிஸ் இங்க்



தங்கு தடையில்லாமல்
கவர்ச்சிகரமாக எழுத ...

5 மங்காத நிறங்களில்

ரிஸர்ச் கெமிகல் லாபரடரீஸ்
சென்னை & பங்களூர்.



# சட்டை

வையவன்

''தர்மமாவது, நீதியாவது! எல்லாம் பொய் சார். மனிதன் தன் தனிப்பட்ட வாழ்க்கையில் எந்த விதமான தலையீடுகளும் இல்லாமல் இருப்பதற்காக, தன்னுடைய சுயநலத்தை முன்விட்டு இட்டுக் கட்டிய ஓர் அழகான கற்பனை இது. உதாரணத்துக்கு வேண்டுமானால் பாருங்க. எந்த விஷயம் உலகத்திலே ரொம்பப் பஞ்சம்னு தோணுறதோ, அதையே அடிச்சு அடிச்சு ஒவ்வொரு பெரியவங்களும் சொல்லிட்டு வராங்க! இப்போ நீதி நூல்களை எடுத்துப்போம். சும்மா 'குரோஸ்' கணக்கிலே நம்ம பாஷையிலே கிடக்கு. என்ன அர்த்தம்? மனிதன் தன் மனத்தினோட நீங்க சொல்கிற அந்த உயர்ந்த மட்டத்துக்குப் போயி கனவு கண்ட கற்பனை தானே தர்மம்? அது ஏன் வாழ்க்கையோட ஒட்டல்லே? அதனுடைய ரத்தத் துடிப்புக்கும், இந்த மாதிரி மயக்கத்துக்கும் கொஞ்சங்கூடச் சம்பந்தமில்லே. ஸோ, அது கற்பனையாகவே நிற்கிறது!''

பாதரஸ விளக்குகளின் எல்லையைத் தாண்டுகையில், ஜட்காவுக்குள் அப்துல்லாவினால் வெகு திறமையாக அடுக்கப்பட்டிருந்த மனிதர்களின் நடுவேயிருந்து அந்தக் குரல் கிளம்பியது... வேலூரின் முனிசிபல் எல்லையைக் கடந்து விட்ட அந்த ஜட்கா காட்பாடி ரயில்வே ஜங்ஷனை நோக்கிப் பறக்க முயன்று கொண்டிருந்தது. அந்த ஜட்கா வண்டியின் ஆறு மனிதர்களில் இருவருக்கு மேற்கண்ட வாதம் உப்பு சப்பற்றே, சாப்பிட்டாயா, தூங்கினாயா என்பது போலன்றி யோசிக்கிற கஷ்டத்தைக் கொடுக்கிறதாகவோ தோன்றியதனால், சும்மா இருந்தார்கள்.

'ஹாரர் ஆப் டிராகுலா' என்கிற பேய்ப் படத்தைப் பார்த்து விட்டு, அன்று இரவு வேலூரில் தங்கியிருக்க வசதி யிருந்தும் அந்தப் படத்தின் கிலி இதயத்தைப் பலமாகப் பீடித்த காரணத்தால், அன்றைய எக்ஸ்பிரஸுக்கேபோய் விட விரும்பிய இளைஞன், பேச்சுப் பராக்கில் விவாதத் தீயை ஏறத் தள்ளினான்.

''நீ இன்னு பாயி, இப்படிப் பேசறே? தர்மோம் நியாயமில்லாமே பூமி எப்படி பாயி சுத்தும்? ஜலா அடி அடிக்கிறயே!''

இருள் மூடியிருந்த சாலையில் இரண்டோர் உருவங்கள் அசைவதைப் பார்த்து, சக்கரத்தின் நடுவே சாட்டைக் கோலைக் கொடுத்து, பாதசாரிகளை உஷார்ப் படுத்தியபடி ஜட்காக்கார சாயபு தன் ஆட்சேபத்தைத் தெரிவித்தான்.

''நான் சொன்னது, உனக்குப் புரிஞ்சுதாப்பா மொதல்லே! பூமி எப்படியாவது சுத்திக்கிட்டுப் போவட்டும், நீ தர்மம்னு என்னு நினைக்கிறே?''

''நா அத்தினி படா படிப்பாளி இல்லே பாய்! நீ இன்னுன்னு என்னைக் கேட்டா எப்படி?''

''பயப்படாதே சாயபு! தர்மம்னு ஒன் வண்டியோட்டற விஷயத்தையே எடுத்துக்க! காட்பாடிலே யிருந்து வேலூருக்கு மிஞ்சி மிஞ்சிப் போனு நாலு மைல் இருக்குமா? அவ்வளவு தூரத்துக்கு எட்டுப் பேரை மூட்டை கட்டி இந்த வண்டியிலே போட்டிக்கினு ஒன் நீலவேணிக் குதிரையைப் பூட்டிக்கிட்டு.. கோவிச்சுக்காதே சாயபு, சும்மா தமாஷ் தான்!....போவறயே! வாடகை எவ்வளவு வாங்கறே?''

ஜட்கா சாயபு ஏதோ ஆத்திரமாகப் பேச வாயெடுத்த போது, குந்து காலிட்டுக் கொண்டு, கைகளைக் காலின் மீது கோத்தபடி, இரண்டு முழங்கைப் பிடிப்பிலும் மடியின் மேலிருந்த ஒரு பேண்டு மௌனத்தை நகரவொட்டாமல் பற்றியிருந்த ஆசாமி முனகுகிற குரலில் மூக்கால் அழுதான்.

''அத்தைக் கேளுங்கய்யா? இம்முட்டுண்டு தூரத்துக்கு நாலணாவாம். போனவாட்டி நான் வந்தப்ப ரெண்டணாவுக்கு ஏத்திக்கிட்டுப் போவறதுக்கு ஆளில்லாமே ஜட்கா வண்டியெல்லாம் சீரளிஞ்சுது!''

''அரெ நீ சும்மா உட்கார்பா! பெர்ஸா ரெண்டணு குடுத்திட்டே. ஒம் பாட்டன் காலத்திலே, நீ வேலூர் வந்தியே அப்போ கண்ணாலத்துக்கு ஊனத்றதுக்கு இன்னு துட்டு கொடுத்தான்? எட்டு ரூபா. அதே ரேட்டுக்கு வாரியா? நான் ரெண்டணாவுக்கு ஏத்திக்கிட்டுப் போறேன்!''

வண்டியில் நாலைந்து சிரிப்புகள் எழுந்தன. அந்த ஆசாமி ஏற்கெனவே, வண்டியில் ஏறுவதற்கு முன்பே தன் ஒன்பது வருஷங்களுக்கு முந்திய அனுபவத்தில், எவ்வளவு கொடுத்திருக்கிறேன் என்பதைத் தெரிவித்துச் சண்டை பிடித்து வேறுவழியில்லாத காரணத்தால் ஜட்காவில் உட்கார்ந்தான். வெளியூரிலிருந்து கல்யாண வீட்டு வாசிப்புக்காக வந்த ஒரு தாலாந்தரமான (யூனிபார யோக்கியதையில்லாத) 'பேண்ட் ஸெட்'டில் அவனும் ஓர் ஆள். இள நரையோடிய புருவமும், வதங்கிய கத்திரிக்காய் போல்

கருங்கிய முகமும், கன ஷோக்காக வெட்டி விடப்பட்டிருந்த ஹிட்லர் மீசையும். இமையின் மேல் புருவச் சதை தொங்கி, சதா புகார் சொல்கிற பார்வை உள்ள, மங்கிய கண்களின் மேல் ஓர் அனுதாபத்தை ஏற்படுத்தியது. அவன் கிழவன். கிராப்புத் தலை.

''இன்னா சாயபு, நா என்னா சம்பாரணை சம்பாதிச்க மெத்தை கட்டிப்புட்டேன்? அட, அவன் எம்பது ரூபாதான் குடுக்கிட்டுமே, தோ பாரேன், அந்க பேருவர்றேம். இதிலே என்னா பொழைக்கிறது. ரயில் சார்ஜு, ஜட்கா கூலி....''

''அரெஸ்க்கி! மறுபடியும் இன்னாய்யா அது? மூக்காலே அய்வுறே; பிசாத் நாலணா. நீ குடுக்க வாணும்... ஓடுய்யா!''

அந்த இளைஞன் குறுக்கிட்டான். ''என்னா பாய்! என்னமோ கேட்டேனே; பதில் சொல்லல்லியே.''

''பதில் இன்னா பாய் சொல்றது? இதோ பாக்கிறயே!''

''இருந்தாலும், நீ ரொம்ப அநியாயம் சாயபு! உன் சொல் பிரகாரம் வண்டி ஓட்டறதிலேயே நீ தர்மத்தைக் காட்டக் காணோமே!''

''அநியாயமா, இன்னா சொல்றே?''

''உன்னோட வாயில்லாத குதிரை மேலுக்கு, ஒம்பது ஆள் பாரத்தைப் போட்டு சம்பாரிக்கிறியேஇதுதர்மமா?''

''இன்னா பண்ணோட்டம்? இந்த ஆசாமி மாதிரி நாலணாக் காசுக்கே மூக்காலே அய்தா, சவாரியை நான் எப்படி பாய் சமாளிக்கிறது? வண்டி சொந்தக்காரனுக்கு மூணுருபா. அல்லா, இந்தப் பக்கீருக்குன்னு பத்துப் பன்னெண்டு கொழந்தே கொடுத்துருக்காரு. வூட்டுக்குப் போனா கய்யா முய்யான்னு படா பேஜாரு. இதிலே எப்படி பாயி, குதிரைக்கு நான் 'சப்ளிக்' பண்ணட்டும்?''

வண்டி, நிலக்காவலுக்காகச் சாலையோரத்தில் ஒரு பணக்காரரால் போடப்பட்டிருந்த விளக்கை நெருங்கிய போது, இடது காதில் பீடி செருகிய அப்துல்லாவின் தோற்றம் ஒரு மஹாவீரனைப்போல் தெரிந்தது. பன்னிரண்டு குழந்தைகளைப் பெற்று, அவைகளில் ஒன்றுகூடச் சிதறாமல் கொள்ளாமல் பன்னிரண்டு அவன் காலைச் சுற்றிக் கொண்டிருக்க, சாயம் போன ஒரு பழைய வண்டியையும், வயதான ஒரு குதிரையையும் வைத்துக் கொண்டு பிழைப்பு என்கிற வீர சாகசத்தால், நிமிர்ந்து நிற்கிற அவன், வீரனில்லாமல் வேறென்ன?

''அதுக்குத்தான் சொல்றேன் சாயபு! இன்னிக்கு உனக்குள்ள அதே கஷ்டங்கள் ரொம்ப நாளைக்கு முந்திகூட, தர்மத்துக்குச் சாஸ்திரம் எழுதிச் சகல காபந்துகளும் செஞ்சி வச்சவங்க காலத்திலேயும் இருந்தது. அதனாலேதான் அவங்க எழுதி வச்சாங்க. என்ன சார், நீங்க பேசவே இல்லை?'' என்று யாரை நோக்கித் தன்னுடைய விவாத ஞானத்தை விசினானோ, அவரைக் கிண்டினான் அந்த இளைஞன்.

அவர் வாய் திறந்தார்; கண்ணாடியைத் தள்ளியபடி!

''நீங்க சொல்றதை நான் யோசிக்கப் பார்க்கறேன்! என்னோட 'டிபார்ட்மெண்ட் சர்வீஸ்லே, தர்மம்னு ரொம்பக் கேலியான விவகாரம். யூ ஸீ தி மென் டாலிடி ஆப் தி மென், - மனிதனோட மனோபாவத்தைப் பாருங்க - அனுபவ சாத்தியமில்லேன்னு நல்லா தெரிஞ்ச பிற்பாடும், மனிதன் தார்மீகக் கோட்பாடுகளை ரசிக்கிறான்; மரியாதை பண்றான். நீங்க சொல்லுறப்பிலே, அது மனுஷனோட வாழ்க்கையிலே ஒட்டலலே. பணம் பணம்னு மூக்காலே சதா அழுதுண்டு, பேயாப் பறக்கையிலே, வாழ்க்கையைக் கூட அனுபவிக்காமே வெறுமே காகிதமாயும் உலோகங்களாயும் பணத்தெ அடுக்கி அடுக்கி அழகு பார்க்கற வாள்ளாம் கூடத் தர்ம நியாயம்னு பேசறது, எனக்கு ரொம்ப விசித்திரமாகத்தான் படறது! வெதர் தே வாண்ட் டு பீ ஷீல்டட்?—இந்தக் கவசத்திலே தாங்களே பதுக்கிக்கொள்ள விரும்பறாளா?''

உற்சாகத்தோடு இளைஞன் குறுக்கிட்டான். ''அப்ஸொலியூட்லி! நிச்சயமா...?''

''இன்னாங்க சாமி; அப்படிச் சொல்லிட்டீங்க? தருமமும் நீதியும் இல்லேன்னா லோகம் ஒரு கட்டிலே நிக்குங்களா? பண்ணுற அநியாயத்தை அவனவன், சாவறத்துக்குள்ளே பட்டுட்டுத்தானே, நாறிப் போயி சாவறான்? மொத மொத சௌக்கியமா இருந்தாக்கூட, வினையை எல்லாம் நாமதானே சாமி அறுக்கணும்? அதை நம்ப தலையிலே தானே சொமக்கணும்?''

ஒரு நீண்ட காலப் பிரலாபத்தை வெளியிடுவது போல, வார்த்தைகள் எந்தத் தலையீடுமின்றி இதயத்திலிருந்து வெளிப்பட்ட சத்தியமான ரூபத்தோடேயே, மேனக்காரரின் வாயிலிருந்து வந்தன.

''ஆமாய்யா யோவ், என்கிட்டே நாலணாக் காசை ஏமாத்திட்டியானா, இன்னொரு எடத்திலே எட்டணா வுட்டுடுவே'' என்று ஜட்காக்காரன் குறுக்கிட்டான்.

''இன்னாய்யா மனுசன் நீ, பொல்லாத் துட்டே பார்த்துட்டே! இப்ப

# மக்ளீன்ஸ் பற்களை வெண்மையாக்குகிறது என்பதற்கான ஆதாரம்

## 1 அதை உணருங்கள்

பற்களில் கறை படிந்திருக்கிறதா? அது இயற்கையான வெண்மையை மறைக்கிறது. இப்போது மக்ளீன்ஸ்கொண்டு பல் துலக்கி அது கறையை எவ்வாறு அகற்றுகிறதென்று உணருங்கள்.

## 2 அதை ருசியுங்கள்

நீங்கள் அனுபவிக்கும் அந்த குளுமையான ருசிக்குக் காரணம் மக்ளீன்ஸில் இருக்கும் 3 கலவைப் பொருள்களும் நிரம்பட வேலை செய்வதால்தான். அவை பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கி பாதுகாக்கின்றன.

## 3 அதைப் பாருங்கள்

உங்கள் புன்முறுவலில் காணும் வெண்மையைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள். உங்கள் பற்களை முன்பிருந்ததைவிட மக்ளீன்ஸ் பற்பசை இன்னமும் வெண்மையாக்குகிறது. நீங்களே இதைப் பரீட்சித்துப் பாருங்கள்.






வெள்ளை அல்லது குளோரோபில் சேர்ந்தது.

இன்றே மக்ளீன்ஸ் உபயோகிக்கத் தொடங்குங்கள். இப்பொழுது எளிதில் கிடைக்கிறது.

MTP/I/P/4/61-TAM

எனக்கிருக்கிற கஷ்டத்தைக் கேட்டியானு, என் நிலைமை தெரியும்! பாருங்க சாமி, காக்கால்னுக்குல்லாம் கணக்குப் பாக்க வேண்டியதாகப் பூடிச்சுங்க. கையாலே கஷ்டப்பட்டுத்தூக்கிவளர்த்த புள்ளீங்க, கையைக் கழுவிட்டு அவனவன் பொண்டாட்டியோடே பூட்டானுங்க. நானும் கெய்வியும் தானுங்க. முடி வெட்டறேன், மருந்து குடுக்கிறேன், மேளம் வாசிக்கிறேன்; ஒண்ணும் கட்டுபடி ஆவல்லீங்க! கெய்விக்கு ரொம்ப நாளா சீக்கு. மனசுலேயே சீக்கு. எங்கப்பனுக்கு நா ஒண்ணுமே கொற வெக்கில்லீங்க. பொணம் மாதிரி கட்டிலிலேயே விழுந்து கெடப்பாரு! சாப்பாடு, அது இது எல்லாம் அதுமேலேயே தான். என் கையாலே தண்ணி வாங்கிக்கிட்டுத்தான் உசிரே விட்டாரு. நமக்கேனுங்க இந்தக் கஷ்டம்? அவனுங்க, காலத்திலே அவனுங்கள்ளாம் என்னு கெதி ஆவானுங்களோ?''

மேளக்காரர் சோகத்தின் கொச்சையில் தொண்டையில் விரக்தி மேலிடச் சம்பந்தமற்று, கூச்சமின்றித் தம் துக்கங்களை அரங்கேற்றி விட்டார். சிறிது நேரம் அந்த ரஸ பேதமான சம்பாஷணையின் காரணமாக, ஒரு மௌனம் நிலவியது. வண்டி மட்டும் குதிரைக் குளம்புகளின் சீரான சப்த லயத்தோடு, ஒலித்தபடி நடந்தது. இருட்டிலே, லாடம் உராய்ந்து நெருப்புப் பூக்கள் கொத்துக் கொத்தாய்த் தார் ரோட்டில் பறந்தன.

''நீநல்லதுதானேய்யா செஞ்சே! உனக்கேன் இப்படி ஆச்சு? தர்மவானுக்குத் தர்மம் பிரயோசனப் படாதப்போ, அதனுலே உபயோகம் என்ன? ஏதோ உன்னைப் போல நாலு பைத்தியக்காரனுங்க, தர்மம் தர்மம்னு கட்டிக்கிட்டு அழவேண்டியதுதான்!'' அந்த இளைஞன் மேளக்காரரின் கூற்றை ஆட்சேபித்தான். சாயபுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

''என்னு சாமி, இப்படிப் பேஸ்றியே! ஒங்கப்பன் அம்மால்லாம் உன்னே இவ்வளவு வளர்த்தப்பறம் தானே உனக்கு இவ்வளோ யோஜனே வந்திடுச்சு. தர்மமில்லேன்னு கண்ட இடத்திலேயே எல்லாரும் குத்திக்கிட்டுச் செத்துப் போவாங்களே!''

''அப்படிப் பண்ணினுனுங்களே, ஒங்களேத்தான் சாமீ! எங் கெய்விக்குப் புத்தி வந்ததா? எம் மொதப் பிள்ளே பொண்டாட்டி கொழந்தே பெக்கறப்போ ரொம்பக் கஷ்டப்பட்டுட்டா! அப்போ அவனும் எங் கெய்வியும் திருப்பதி சாமிக்குக் கும்பிட்டுக்கிட்டாங்க. அந்தப் பய, சாமியில்லே பூதமில்லேன்னு, கொழந்தே பொறந்தப்பறம் பேச்சு மாறிட்டான். இப்போ கெய்வி என்னேத் தொளேக்கிறு! கும்பிட்டபடி குடுக்கல்லேன்னு, அவுங்களுக்கு ஏதாச்சியும் வந்துடுன்னு திருப்பதிக்குப் போவ என்னேப் பிய்க்கிறு. இந்த வாட்டி பதினேஞ்சு ரூபா கெடச்சிருக்கு! அதிலே தான், அடுத்த தபா பூடணும்.''

மேளக்காரருடைய அந்தக் கிழவியின் தாய்மைப் படம், ஜட்கா சாயபுவின் மனத்திரையில் இடம் பெற்று அவனை நெகிழ வைத்தது.

''இப்படியும் கொஞ்சம் இருக்குதுங்க! இதெல்லாமும் தர்மந்தானே! யூ மஸ்ட் அண்டர்ஸ்டாண்ட் இட்.''

''நோ, நொந்நொ! நீஸ் ஆர் செண்டிமெண்டல், தாய்மைக்



கும் குறிப்பிட்ட எல்லே இருக்கணுங்க. ரொம்ப ரொம்ப உணர்ச்சி வசப்பட்டுப் பார்க்கறப்போ, வேணுன்னு இதை நியாயங்கலாம்!''

வண்டிக்காரச் சாயபுக்குக் கொஞ்சம் புரிந்தது; கொஞ்சம் புரியவில்லை. இந்தத் தோரணையான சிந்தனை அவனுக்கு இல்லாத போதும், மனத்திலென்னமோ ஆட்சேபணைதான். சொல்ல வரவில்லை; அதனால் சொல்ல முடியவில்லை.

''ஐ அப்ஜெக்ட் யூ! செண்டிமெண்டலே இல்லேன்னு....''

கண்ணாடி அணிந்தவர் பேச்சை முடிப்பதற்கு முன்பாக வண்டி ஒரு டீக்கடையை மெள்ளக் கடந்தது.

''பாய், பாய்! கொஞ்சம் வண்டியை நிறுத்து. டீ குடிக்கணும்!'' மேளக்காரர் வண்டிக்காரனைக் கேட்டுக் கொண்டதோடு வண்டியிலிருந்து இறங்க ஆரம்பித்தார்.

''அடே எறங்காதேய்யா! நான் கூப்பிட்டு வாங்கித் தரேன்!'' என்று சொல்லி விட்டு சாயபு, 'நடேசா, ஸ்டாங்கா ஒரு டீபோடுப்பா!'' என்றான்.

மேளக்காரர், ''பாய், நீயும் சாப்பிடுய்யா. ஒரு டீ வாங்கிக்க. நான் காசு தர்றேன்'' என்றார்.

''இன்னா, வாடகையிலே கழிச்சுக்கிறியா?''

''இல்லேப்பா; வாங்கிக்க!''

டீ இரண்டு வந்தது. பழக்கத்தின் காரணமாக, அந்தச் சூட்டிலேயே அதை ஒரு மூச்சில் குடித்துவிட்டுச் சாயபு அவசரப்பட ஆரம்பித்தான்.

''ஜல்திப்பா, ஜல்தி! வாயில்லா ஜீவன். ஓடினுக்க, அதுக்குக் கஷ்டம் தெரியாது. நிக்க வெச்சி கொடுமை பண்ணாதே!''

''தோ, தோ!'' படபடப்பில் சட்டையின் மேலும் மேளத்தின் மேலும் சற்றுச் சிந்தியபடியே மேளக்காரர் கிளாஸைக் கொடுத்து விட்டு, ஜேபியில் கை விட்டார். சடக்கென்று கை பின்னுக்கு இழுத்தது. பதைப்போடு மேல் சட்டைப் பையைத்தடவினார். இடுப்பு வேஷ்டியின் முடிச்சை அவிழ்த்து உதறினார்.

''ஐயையோ, என் பணம் போச்சே!'' என்று ஏறக்குறைய கத்தவே கத்தி விட்டார் அவர்.

''காணோமா, என்னய்யா 'ஜோக்' பண்றியா? சரியாப் பாரய்யா?'' என்று நகர்ந்த குதிரையை இழுத்துப் பிடித்தான் அப்துல்லா.

''சத்தியமா சாயபு! ஐயோ, பதினஞ்சு ரூபா. மூணு அஞ்சு ரூபா நோட்டு. அங்கேருந்து சரியா தொட்டுத் தொட்டுப் பாத்துக்கினு வந்தேனே! என்னு கெதி? போறதுக்குச் சார்ஜுக்குகூடக் கையிலே இல்லியே.''

''சரியா ஏந்திரிச்சுப் பார்யா! கீழே எங்கேயாச்சும் வுழுந்துட்டிருக்கும்.'' இவ்வளவு நேரம் மௌனம் சாதித்த நபர்களில் ஒருவன் கூறினான்.

அதைத் தொடர்ந்து அனைவரும் கீழிறங்கி, அவரவர் இடத்தைத் தட்டிப் பார்த்தும் புல்லின் மேல் விரித்திருந்த ஜமக்காளத்தைத் தட்டி உதறித் தேடியும்கூடக் கிடைக்கவில்லை.

''ஐயோ சாமி! நான் என்ன பண்ணட்டும்? பதினஞ்சு ரூவா ஆச்சே. செய்விக்குப் பதில் சொல்லணுமே.''

மேளக்காரர் பிரலாபிக்கத் தொடங்கினார். அது கேவலம் பதினைந்து ரூபாயாயிருந்த போதிலும், அதை இழந்து விட்டு அவர் படும் துக்கத்தில் அதன் அருமை பெரிதாயிற்று.

''அரெஸ்கி, என்னய்யா பண்றது? டீக்குக்காசை நான் குடுத்துடறேனய்யா! எவ்வளவோ பூட்சி. இதுக்குப் போயி பொட்டச்சி மாதிரி அய்வுறியே'' என்று மிரட்டித் தேறுதல் சொன்னான் ஜட்கா வண்டிக்காரன்.

ஆயினும் பழகிப் போன அந்த இருட்டை வெறித்துப் பார்த்தபடியே வண்டியைச் செலுத்திக் கொண்டு வந்த அவன் மனசு குழம்பத் தொடங்கி விட்டது.

'அரே அல்லா! அந்த நோட்டு இவன்தா? என்னென்னவெல்லாம் நெனச்சோம். பெரிய பையன் ஜாஹீதுக்கு வைத்தியர்கிட்டே கொடுத்து ஊசி வாங்கிப் போடலாம், குதிரைக்குப் புதிசாச் சேணம் மாத்திட்டு இன்னிக்காவது நல்ல தீனி வாங்கிப் போடலாம்னெல்லாம் நெனச்சேனே. ஜட்கா சக்கரத்து ஓரத்திலே வுளுந்திருந்திச்சு. அது இவன்துதான்னு என்ன நிச்சயம்?'

'மூணு அஞ்சு ரூபா நோட்டுங் கறானே! நமக்குக் கெட்சதுகூட மூணு அஞ்சு ரூபா நோட்டுத்தானே? இவனதுன்னு அதிலே எய்தியா இருக்குது?'

'ஆனா இவன்துதான் போலேயிருக்கு! மன்சன் ரொம்பக் காப்ரா ஆய்ட்டான். குடுத்திடலாமா?'

'எதுக்குக் குடுக்கணும்? ஜாஹீதுக்கு நேத்து ராத்திரிகூட இருமி இருமித் தூக்கமே வர்லே. பதினஞ்சு ரூபா நல்ல சமயத்துக்குத்தான் கெட்சிருக்கு!'

யோசனைகள் ஊசலாட ஊசலாட மனம் ஒரு நிலையில் நிற்கவில்லை. உள்ளேயிருந்து மேளக்காரரின் அங்கலாய்ப்பு, தன் துரதிருஷ்டத்தை நொந்து கொண்டது.

'சே, ரொம்பப் பாவமாத்தான் இருக்கு. குடுத்திடலாமா? இன்மே




# பரிசீலனைக்குப் பின் விநியோகம்

மோட்டார் உறுப்புகள் உற்பத்தியாளர் நம் நாட்டில் பலர். உறுப்புகள் விநியோகத்தை மேற்கொள்ளுமுன், நாங்கள் ஒவ்வொரு உறுப்பையும் தரம், நயம், உழைப்பு முதலியவற்றிற்கு பரிசீலனை செய்து, பின்புதான் ஏற்றுக்கொள்கிறோம். இக்காரணத்தினால்தான், "டிவிஎஸ் விநியோகிக்கும் உறுப்பு, உழைப்பில் சிறந்தது" என்பது பழமொழிபோல் உலவுகிறது.

நாங்கள் விற்பனை செய்யும் இந்தியாவில் தயாரித்த உறுப்புகளில் சில:

'ஸ்டாண்டர்ட்' பாட்டரி; 'அல்லைட்' பல்புகள்; 'பெரோடோ' பிரேக் லைனிங்; 'பென்னர்' பான் பெல்டுகள்; 'டபின் லேப்' சேஸிஸ் பாகங்கள்; 'எச் அண்ட் டி' பிரேக் டிரம்கள்; 'மைகோ' பியூயல் இஞ்செக்ஷன் பாகங்கள்: 'டிரான்கோ' (இந்தியன்) வால்வுகள்; 'கானரா' ஸ்பிரிங், லீவுகள்; QHL - RANE டை ராடு எண்டுகள்; 'ஹெல்லா' ஹாரன்கள் (இந்தியன்)

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ்**
**பிரைவேட் லிமிடெட்.**
மதுரை-திருச்சி-திருநெல்வேலி-புதுக்கோட்டை-சேலம்-கோயமுத்தூர்




**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**
மதராஸ்-பெங்களூர்-செகந்திராபாத்

**மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்**
மதராஸ்-பெங்களூர்

JWT/TVS-1499A

குடுக்கிறது அவ்ளோ நல்லா இருக்காது. திருப்பதி சாமிக்கு அவங்க சம்சாரம் கும்பிட்டுக்கிட்டதாமே, சாமி துட்டையா திருட்டுனோம்.'

'திருட்டுனோமா! எங்கேய்யா திருட்டுனோம்? நீயே வுளுந்து கெடந்துச்சி.... எடுத்துக்கிட்டோம். பாக்கிட்டேலயாக் கையை வுட்டோம், இல்லியே!'

'சொந்தக்காரன் யாருன்னு தெரிஞ்ச பிற்பாடு, வெச்சுக்கினு இருந்தா அது, ஹராம் வேலைதானே!'

'அல்லா நல்ல சமயமாப் பார்த்துக் குடுத்திருக்காரு. இது திருட்டில்லே.'

'பாவி இவ்ளோ கஷ்டப்பட்றானே? நம்பளைப் போல் தொழில் செய்றவன் தானே? தொழில் செஞ்சு காசெ வுட்றதுன்னு, அவனுக்கு எவ்ளோ கஷ்டமா யிருக்கும்?'

வண்டி ஜங்ஷனைச் சமீபித்துவிட்டது.

''நிறுத்து பாய்! எங்கியோபோறியே?'' என்று குரல் கேட்டதும் அப்துல்லா கடிவாளத்தை இழுத்துப் பிடித்தான். ஒவ்வொருவராக இறங்கினர். அனைவரும் வாடகையைக் கொடுத்ததும் வாங்கிக் கொண்டான். மேளக்காரர் கொடுக்க வரும் போது ''வாண்டாய்யா!'' என்று கரகரத்த குரலில் தடுத்தான்.

''இல்லேப்பா, வெச்சிக்கோ. பாவம், உங் கஷ்டம் எனக்கென்னத்துக்கு?'' என்று மேளக்காரர் வலுக்கட்டாயமாக நாலணாவை அவன் கையிலே வைத்து விட்டார்.

மனசில் விழுந்த அடியுடன் அப்துல்லா வண்டியைத் திருப்பினான். ஆனால் மனசில் விழுந்த அடியின் பாதை அதிகரித்துவிடவே, வண்டியைத் திருப்பி நிறுத்திக் கீழே குதித்தான்.

ஆவேசத்தோடு சட்டைப் பையிலிருந்து பதினைந்து ரூபாயை - அந்த மூன்று ஐந்து ரூபாய் நோட்டுக்களை- எடுத்தான்.

''இந்தாய்யா, உன் துட்டு!'' என்று மேளக்காரரின் கையிலே வைத்தான்.

சட்டென்று அந்தக் கண்ணாடிக்காரர், இளைஞன் இவர்கள் முகங்களில் இகழ்ச்சிக்குறி பரவியது.

''யோவ் சாயபு, நீ படா ஆள்யா? இந்த வண்டிக்காரப் பசங்களே பக்கா கேடிங்கன்னு கேட்டிருக்கேன். துட்டே அடிச்சுட்டு, திருப்பிக் கொடுக்க மேஷ மீனம் பாத்தியா?''

''பெரிய தர்மவான் மாதிரி பேசிவியேய்யா! இவ்வளவுதானா? எப்போ எடுத்தே. பாக்கெட்லே கையெ வுட்டு எடுத்துண்டியோ?''

''பக்கா ஆளையா நீ!''

இவ்வளவுக்கும் மத்தியில் மேளக்காரர் அதிர்ச்சியுற்று, தம் புருவங்களைச் சுளித்தவாறு நின்றிருந்தார். பணத்தை வாங்கக் கை நீண்டது. அப்துல்லா, உடம்பு சுருங்கிப் போனவன் போல் ரூபாயை நீட்டினான். அவன் மனத்தை மேளக்காரர் சம்சாரத்துடைய தாய்மைப் படம்தான் அலங்கரித்திருந்தது.

''என்னய்யா, சாயபு? இந்தக் காசு உனக்கு அவ்வளவு அவசியமா?'' தர்மத்தைக் குறித்து எந்த ஆராய்ச்சியும் செய்யாது, மூடம்போல் வந்த மேளக்காரர்தான் அப்துல்லாவை அப்படிக் கேட்டார்.

அப்துல்லா அதற்குப் பதில் சொல்ல எண்ணினான். நாக்கூடத் தடுமாறிற்று. ஆனால் தலை குனிந்து கொண்டான்.

''சொல்லுய்யா, பரவாயில்லே!''

''எம் புள்ளைக்கு இருமலு, பாய் இருமலு!''

மேளக்காரர் முகத்தில் அந்தக் குரலின் குழைவைக் கேட்ட மாத்திரத்தில் ஒரு திடுக்கிடு பிறந்தது.

''இந்தா, வச்சிக்கோ! இந்தத் துட்டை வச்சிக்கோ. புள்ளையைக் காப்பாத்து. உன் புள்ளையாவது உன்னைக் காப்பாத்தட்டும்.''

மறுபடியும் தன்னிடமே வாபஸான அந்தப் பணத்தை அப்துல்லா மல்கும் கண்ணீரோடு, உற்றுப் பார்த்தான்.

''இல்லே பாய், வேணும்! அல்லா உனக்கு நல்லது செய்வாரு. இப்போ எனக்கும் பணம் வேணும்.''

''என்னய்யா மனுசன் நீ, நான் மனசு வந்து கொடுக்கிறேன். வாங்கிப்பியா....'' – மேளக்காரர் ஆதங்கத்தோடு அப்துல்லாவின் துக்கங்களை மனசுத் திறன் பரிச்சயம் செய்து கொண்டு பேசுவது போல் பேசினார்.

''இரண்டணாக் காசுக்கு மூக்காலே அழுதவரா பதினைஞ்சு ரூபாயைத் தூக்கிக் கொடுக்கிறார்?''

''திஸ் ஆர் ஸெண்டிமெண்டல்ஸ்! வாங்க ஸார், போவோம்'' என்று அவர்கள் இருவரும் நடந்தனர். தர்மத்தின் உரிந்த சட்டையைத் திருப்பித் திருப்பிப் பரிசீலித்த வண்ணம் விவாதிக்கத்தான் அவர்கள் தயார். தர்மம் தன் சட்டையைத்தான் மாற்றிக்கொள்கிறது; ஜீவனை அல்ல என்பது அவர்களுக்கு விளங்கவில்லை. பேதைமை நிறைந்த அந்த மேளக்காரரும், ஜட்காக்காரனும் வழி வழியாய் வந்த அந்தத் தர்மத்தின் சுகத்தை இரு வேறு கோணங்களில் அனுபவித்த வண்ணம் இரண்டு திசைகளில் பிரிந்தார்கள்.

# நேர்த்தியான பின்னல் வேலைகளுக்கு துருவா தான் முதலில் தேவை



அவள் ஒரு கம்பீரமான பெண்மணி. மிகவும் நேர்த்தியான துருவா நிட்டிங் வுல்லைப்பற்றி அவளுக்கு நன்றாகத் தெரியும்.



தரத்தில் மிகவும் சிறந்த துருவா வுல்லையே அவளுடைய குழந்தைகளுக்கு உபயோகிக்கிறாள்—அவை 100% பரிசுத்தமான வுல்களென்பதை அவள் அறிவாள்.



மிருதுவான துருவா பேபிவுல்லை அவள் குழந்தை விரும்புகிறாள்—சுருங்காத மற்றும் சாயம்போகாது-டெட்டி-வுல்.



துருவாவின் எப்போதும் சாயங்கள் பல வித அழகிய கலர்களை அவளுக்கு அளிக்கின்றன.
3—ஸ்டார் மற்றும் 4—ஸ்டார் பிராண்டுகள்.



அவள் குடும்பத்திலுள்ள அனைவருக்கும் துருவா வுல்லையே உபயோகிக்கிறாள்.

## துருவாவுக்கு முதல் பரிசு

துருவா வுல்லை உபயோகித்து வுல் நிட்வேர் டிசைன் போட்டியில் கலந்து கொண்ட புது தில்லி ஸ்ரீ ஜகதீஷ் சோகால் முதற் பரிசு பெற்றார். மிகவும் நேர்த்தியான நிட்டிங் வேலைகளுக்கு எப்பொழுதும் நீங்கள் துருவா வுல்லையே உபயோகியுங்கள்.

**துருவா வுல்லன் மில்ஸ் பிரைவேட் லிட்., பம்பாய்**

எல்லா வியாபார விபரங்களுக்கும் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும் : ஜே. அண்ட் பி. கோட்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
பம்பாய் : 61 பாலட்டன் ரோடு / டில்லி : கார்டின் பாண்டியன் ரோடு / மதராஸ் . 19, வால்டெக்ஸ் ரோடு
கௌஹாத்தி : ஏ. டி. ரோடு, பேடஜோபாரி, அஸ்ஸாம்

# நடிப்புக்காக அல்ல..

சௌரி

கல்பனா-

அறுபது நாழிகையும் அநேகம் அநேகம் உயிரினங்களையும், அவைகளின் பலப்பல செயல் விநோதங்களையும் இயக்கிக்கொண்டு காலம் எனும் நீள்வண்டி நேரப் பகுதிகளைப் பின் தங்க விட்டு முன்னேறி விரைவது போல் ஓடிக் கொண்டிருந்தது புகைவண்டி.

பிரயாணிகள் வெகுநேரத் தவிப்புக்குப்பிறகு விடியற் காலையை உவகையுடன் வரவேற் றார்கள். அந்தக் கருக்கல் பொழுதிலும் வண்டி நிற்கும் ஒவ்வொரு சிறு நிலையத்திலும், ஒரு பெட்டி எதிரே மட்டும் ஆண்கள் கூட்டம் கூடி வந்து மொய்க்கத் தவறுவதில்லை.

குறிப்பிட்ட பெட்டியில் பிரயாணம்செய்து கொண்டிருந்த தாமினிக்கும் பூங்கொடிக்கும் இந்தக் காட்சி இயல்புக்கு மாறாக, வெறுப் பையே விளைவித்தது. அதே வரிசையில் உட் கார்ந்திருந்த மற்ற மூன்று யுவதிகளுக்கும் காட்சிக் கும்பல் குவிவதில் வழக்கம் போல் உற்சாகம் பிறந்தது. அந்த மூவ ரும் முதற் பார்வையிலேயே எக்ஸ்ட்ரா நடிகைகள் போல் தோன்றினர்.

''இந்த அழுகல்களுக்கும் சக்கூட்டம் வந்து மொய்க்கா விட்டால், மவுசு கிடையாது. பாரேன், இதுகளை! பல்லேயும் கண்ணையும் காட்டிக் கொண்டு தளுக்காட்டம் ஆடுவதை'' என்று பூங்கொடியின் காதருகில் கூறினாள் தாமினி.

''மெள்ளப் பேசடி தாமினி! உனக்கு எப்போதுமே அசட்டுத் துணிச்சல் அதிகம். காதில் விழுந்தால் ஒன்னுக்கு நாலாய்த் துப்பி விடுவார்கள். '' - தோழியை அடக்கி னாள் பூங்கொடி.

''ஆமாம்! என்ன இல்லாததைச் சொல்லி விடப் போகிறார்கள்? படத்திலே ஆண்களை மயக்கி வயிறு வளர்க்கிற கூட்டமானாலும், இடம் காலம் என்று பார்க்க வேண்டாமா?''

''போதும், தாமினி! தெரியாதவர்களுக் கும் நம் பெருமையை நீ விளம்பரப்படுத்தி வைக்காதே. இந்தப் பிரயாணக் காலத்திலா வது, நாமும் நாலு பேரைப் போல் இருப்ப தாகக் காட்டிக் கொள்வோம்.'' பூங்கொடி மேலும் சங்கடப்பட்டுக் கொண்டாள்.

''உன் மாதிரிப் பூஞ்சை மனசு உள்ளவள் இந்தத் தொழிலுக்கே வந்திருக்கக் கூடாது. பாவம்! யார் தலைவிதியை யார் மாற்ற முடி கிறது?'' என்று தாமினி பேச்சுக்கு முத்தாய்ப்பு வைத்தாள்.

மென்ன நடந்த உரையாடல் எதிரே தூங்கி வழிகிறவர்களுக்கு அரைகுறையாகத் தான் கேட்டிருக்கும். பெட்டிக்குள் நுழைந் ததுமே இவர்களைப்பற்றி ஓரளவு அறிமுகமாகி விட்டது மற்றவர்களுக்கு.

இரவு எட்டரை மணிக்குச் சென்னையில் ஏறிய கூட்டம். வெளிக்காட்சிப் படப்பிடிப் புக்காகத் தஞ்சை போகவேண்டும் என்று அறி விக்கப்பட்டபோது, தாமினிக்குச் சங்கடமாக இருந்தது. போவதா வேண்டாமா என்று குழம்பினாள். இப்போதுதான் துணை நடிகை களுக்குள்ளே அவளுக்குச் சற்று உயர்வான பாகம் கிடைத்திருக்கிறது. இதை உதறி விட்டால், பிழைப்பில் நிரந் தரமாக மண் விழுந்து விடும். ஆற்றாமையுடன் புறப்பட்டு விட்டாள் தாமினி.

ரிசர்வேஷன் சிறுதலாகத்தான் கிடைத் தது. துணை நடிகைகளை ஒரே பெஞ்சியில் உட்கார வைத்து விட்டு, பக்கத்துப் பெட்டி யில், உதவியாளரும், துணை நடிகர்களும் அமர்ந்திருந்தார்கள். பெரியவர்கள் தனிக் காரில் வசதியாக வந்து சேர்வார்கள் என்று ஏற்பாடாகி யிருந்தது.

இரவு நேரத்தில் இந்த இடைத்தரக் கலை ஜீவிகள் நுழைந்ததுமே ரயில் பெட்டியில் தனியாக ஒரு கலகலப்புப் பரவியது. வயோதி கர்கள் விநோதப் பார்வையோடு முணு முணுத்தார்கள். இளவட்டங்கள் பார்வை யாலேயே விழுங்கிவிடுவதுபோல் பார்த்தனர்.

அந்த வரிசையில் தாமினிதான் நல்ல அழகி. பேச்சிலும் துடிதுடிப்பு உண்டு. பூங்கொடி பதவிசானவள். அமைதியான அழகும் வாளிப்பும் கொண்டவள். பயந்த குணத்தவள்.

எதிரே இருந்த இளம் பெண்ணின் மடியி லிருந்த குழந்தை எம்பி எம்பித் தாமினியை

நாடிப் பாய்ந்தது. குழந்தையின் தாய் அருவருப்பை அடக்கிக் கொண்டு, குழந்தையைத் தன் மடிக்குள் புதைத்துக் கொண்டாள். கைகளை நீட்டிக் குழந்தையை வாங்கத் தாமினிக்கு ஆவல் உந்தினாலும், ரோஷமுள்ள மனசு அதற்கு இடந்தரவில்லை.

குழந்தையை வைத்துக் கொண்டிருக்கும் அந்தப் பெண் ரயிலடிக்கு வந்தபோது எவ்வளவு உற்சாகமாக இருந்தாள்? தலைச்சன் பேறு பெற்ற புண்ணியவதி. வயது இருபது இருக்கும். மேனியின் வண்ணமோ வளமோ அப்படியொன்றும் பிரமிக்க வைக்கிற வனப்பைப் பெற்றிருக்கவில்லை. ஆனால், குடும்பத் தலைவியாகி விட்ட மதிப்பும், தாயாகித் திகழும் பெருமிதமும் கூடி, 'அம்மன் விக்கிரகத்துக்கு ஜீவகளை ஏறினால் எப்படி இருக்கும்?' என்று எண்ணத் தூண்டின.

''குழந்தைக்கு என்னம்மா பேர்?'' என்று தாமினி கேட்டாள். அந்தப் பெண் தாமினியின் கேள்வி காதில் படாதது போல் பதில் பேசாமல் இருந்து விட்டாள். மறுமுறையும் தாமினி கேட்ட போது, அவள் பதில் சொல்லவில்லை. அவன் தான் பதில் சொன்னான்: ''சுந்தர்!''

வசனம் சொல்வார்களே, ஆசை வெட்கம் அறியாதென்று, அப்படித்தான் தாமினி பறந்தாள்! அந்தத் தாழங்குருத்துக் குழந்தையை வாரி அணைத்து முத்தமிட்டுக் கொஞ்சிக் குலாவக் கைகளை நீட்டி யாசித்தாள்.

''வேண்டாம், வேண்டாம். இங்கேயே இருக்கட்டும்.'' செவிட்டிலே அறை கொடுத்த மாதிரிப் பதில் சொல்லி விட்டாள் அந்தக் குழந்தையின் தாய்.



பெட்டிக்குள் வந்ததும், அவள் கணவன் - இருபத்தைந்து வயதுதான் அவனுக்கு இருக்கும், நல்ல அழகன்-தாமினி கோஷ்டியின் ரசிகனாகி விட்டான். தாமினி ஆதரவோடு அந்தத் தம்பதியைப் பார்த்தாள். முக்கியமாக அந்தக் குழந்தையைத்தான் பார்த்தாள். தெய்வப் பால் குடித்த குழவி மாதிரி, பிரும்மானந்தப் பெருவகையை மென்னகையால் புலப்படுத்திக் கொண்டிருக்கும் பரம ஞானியைப் போல் அந்தக் குறுஞ்சிரிப்போடு இணைத்த இனிப்பைப் பார்த்தாள். இல்லை, தரிசித்தாள் தாமினி. தான் - தனது எல்லாமே அவளுக்கு மறந்து போய்விட்டன.

குழந்தையைக் கொஞ்சலாக நோக்கிச் சிரித்தாள். தாயை மதிப்புடன் பார்த்து முறுவல் புரிந்தாள். குழந்தையின் தகப்பன் தனக்காகத்தான் இதெல்லாம் என்று நம்பி நைப்பாசையுடன் இளித்தான்.

''ஆசைப்படுகிறாளே, கொஞ்சம் கொடேன் குழந்தையை'' என்று சிபாரிசுசெய்த கணவனை, அந்தப் பெண் ஒரு முறைப்பு முறைத்தாளே பார்க்கணும்! அசட்டுச் சிரிப்புடன் அடங்கி விட்டான் புருஷன்; இந்த அடக்குமுறை தாமினிக்கு மிகவும் பிடித்திருந்தது. அந்தப் பெண்ணிடம் அவளுக்குத் தனி மதிப்பு ஓங்கியது.

குழந்தை அப்போதும் தாமினியைப் பார்த்துக் கையசைத்துக் குறுஞ்சிரிப்பை மலர்த்திக் கொண்டிருந்தது. அனாதை ஜீவன் நல்ல உணவுக்காக ஏங்கி நிற்குமே, அப்படி ஏங்கினாள் தாமினி.

''தாமி! உனக்கு ஏனடி இந்த ஆசை? அவமானம் கூடவா உனக்கு உறைக்கவில்லை?'' பூங்கொடி மெல்லக் கடிந்து கொண்டாள்.

> வேதத்தைச் சரியான இசையுடன் பயில்கிறவர்கள் அதைப் பிறருக்கும் புகட்ட வேண்டும். அந்த அந்த இடத்தில் இருப்பவர்கள் தினமும் அதிகாலையில் வீதிகளில் அரை மணி நேரம் வேதகோஷம் செய்தால் அந்த அந்த இடங்களில் சாந்தியும் சக்தியும் நிலவி க்ஷேமம் பெருகும். —ராஜாஜி

''பூங்கொடி! இந்தத் தாயிடத்திலே அவமானப்படுவது நமக்குப் பெருமையானது. கணவனோடு வராதிருந்தால், இவள் மாதிரி நம்மிடம் பரிவுடன் இருப்பவளைக் காண முடியாது. பக்கத்திலே அழகான நல்ல மனைவியை வைத்துக் கொண்டு, அந்த மனிதன் நம்மை என்ன முறைப்பு முறைக்கிறான் பாரேன்! அவன் வெறுப்புக்கே இதுதான் வித்து.''

''ஊற்று நீரைப் பக்கத்திலே வைத்துக் கொண்டு, பாசி படிந்த குட்டை நீருக்கு ஆசைப்படுகிறானே மனிதன், பாவம்!'' பூங்கொடி உணர்ந்து பேசினாள்.

இப்போது பொழுது புலர்ந்து, கலகலப்புப் பரவியது. குழந்தை கண் விழித்ததும், தாமினியைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, பிஞ்சுக் கைகளை விரித்து ஆட்டியது.

தாமினிக்கு, தான் சிறு குழந்தையாக இருந்த போது, இப்படித்தான் எல்லாரிடமும் வேற்றுமை இல்லாமல் தாவிக் கொண்டிருந்ததைப் பற்றிப் பாட்டி சொன்னதெல்லாம் நினைவுக்கு வந்தது.

''நீ அப்பவே பிடிச்ச அழகான ஆண்பிள்ளைகளிடத்திலே தாவுவே. பெண் பிள்ளைகளிலேயும் நல்ல லட்சணமாயும் நகை நட்டு நிறையப் போட்டுக்கிட்டு இருக்கிறவளாயும் இருந்தால்தான் நீ போவே. சிரிச்சு மயக்கிற தந்திரம் உனக்கு அந்த வயசிலேயே படிஞ்சிருந்திச்சடி! பயாஸ்கோப்புக்காரின்னுகூட, உன்னைக் கேலி செய்வாங்க.'' இதை அம்மாயி அவள் பட்டணத்துக்குப் புறப்படுகிற நாள் வரைக்கும் அவளிடம் சொல்லிக் கொண்டிருந்தாள். அப்போதெல்லாம் அந்தப் பேச்சு இனித்தது; பெருமையாகவும் தோன்றியது. இப்போதோ?...

தாமினிக்கு இதற்குமேல் சிந்திக்கவும் பிடிக்கவில்லை. வண்டி மாயவரத்தில் வந்து நின்றது. விழித்தெழுந்த புள்ளினங்களின் கலவரம் போல் ஒலியாலும் செயலாலும் ரயில் வண்டியில் ஒரு கலகலப்புப் பரவியது. அந்தப் பெட்டிக்கு எதிரே ரசிகர் கூட்டம் குவிவதற்கு முன்பே, தாமினியும் பூங்கொடியும் வெளியே போய் விட்டார்கள். வண்டி புறப்படுகிற நேரத்தில் தான் இடத்துக்குத் திரும்பி வந்தார்கள். சில பழைய பிரயாணிகள் இறங்கிப் போய்ப் புதுப் பிரயாணிகள் சிலர் வந்து சேர்ந்தார்கள்.

புதுத் தெம்புடன் வண்டி புறப்பட்டது.

''பூங்கொடி! என்ன யோசனையிலே ஆழ்ந்திருக்கிறாய்?''

''தாமி, நீயும் இந்தப் பெண்ணைப் போல் ஒரு குடித்தனப் பெண்ணாக இருந்திருக்கக் கூடாதா என்று ஏங்கிக் கொண்டிருக்கிறேன்.'' - இதன் பின் சில நாழிகைகள் பயணம் மௌனமாகத் தொடர்ந்தது.

வண்டி மல்லியத்தில் வந்து நின்றது. ஒரு தொண்டு கிழவி அந்தப் பெட்டியில் ஏறிக் கொண்டாள்.

குப் குப்பென்ற ரயில் சத்தத்தையும் மீறிக் கொண்டு, கிழவியின் தனிக்குரல் பீறி வந்தது:

''தள்ளாத வயசுக்காரி, சாமி!
கொஞ்சம் தயவுபண்ணுங்க, சாமி!
தருமம் தலைகாக்கும், சாமி!''

பழகி வெறுத்துப் போன பிச்சைக் காட்சி தான். எவரும் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. ஐந்து நிமிஷங்கள் நகராமல் நின்று கத்தியதற்குக் கூலியாக நாலு நயா பைசாக்கள் அவள் தகரக் குவளையில் வந்து விழுந்தன.

எதிர் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒரு முதிர்ந்த அம்மாள் - கணவரை இழந்தவள் - தாமினியிடம் ஏதோ நச்சு நச்சென்று கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பன்னிரண்டு வயதுப் பையன் வெகு உற்சாகமாக அவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தான். ''எனக்கும் சினிமாவுக்கும் ஸ்நானப்பிராப்திகூட இல்லே. நான் பள்ளிக்கூட வாத்தியாரம்மா'' — என்று வாய் கூசாமல் புளுகினாள் தாமினி.

''நீங்க சினிமாக் கம்பெனியிலே வேலை பார்க்கிறவான்னு நினைச்சேன். ஸ்கூலிலே வாத்தியாரம்மாவாக இருக்கிற விஷயம் நீங்கள் சொல்லித்தான் நம்ப முடியறது.'' விஷமத்தைக் குரலிலே தொனிக்கச் செய்து கொண்டு அந்த அம்மாள் சொன்னதைக் கேட்டதும் தாமினி சிரித்து விட்டாள்.

''ஏன் உங்களுக்கு இப்படித் தோணித்து?''

''இல்லே, முகபாவம் அப்படி இருப்பதாகப் பட்டது. இந்தக் காலத்திலேதான் எல்லாரும் எல்லா டிரஸ்ஸும் பண்ணிக்கிறாளே!''

''எல்லாரும் எல்லாம் தெரிந்து கொண்டு விட்ட மாதிரி இருக்காங்களே. எங்கே, எதிலே நாகரிகம் புகுந்து கொள்ள வில்லே?'' உள்ளே நுழைந்த கிழவியைப் பார்த்துக் கொண்டே தாமினி எதிராளியை மடக்க முயன்றாள். பக்கத்திலிருந்த பையன், அந்த அம்மாள் காதருகில் சில சினிமாப் பேர்களைச் சொல்லி, அவைகளில் தாமினி மாதிரியே ஒருத்தி நடிப்பதை நாலாவது தடவையாக முணுமுணுத்துக் கொண்டிருந்தான். அந்தத் துப்புக் கிடைத்த தெம்பில்தான் அந்த அம்மாள் தாமினியைக் கண்ணி வைத்துப் பார்த்தாள். தீர்மானமாக மறைத்துப் பேசுகிறவளிடம் எப்படி உண்மையை நிரூபிக்க முடியும்? பூங்கொடி ஒரு பத்திரிகையை முகத்துக்கு எதிரே மறைப்பாகப் பிரித்து வைத்துக் கொண்டு, சங்கடத்தைச் சமாளித்தாள்.

''தள்ளாத வயசுக்காரி, தாயே!
தயவு கொஞ்சம் பண்ணம்மா, தாயே!
தருமம் தலை காக்கும் தாயே!''

எதிரே இந்தக் குரலைக் கேட்டதும், தாமினிக்கு ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்தது. குனிந்திருந்த முகம் தானே நிமிர்ந்து கொண்டது. பூங்கொடி பரிவுடன் கிழவியைப் பார்த்தாள். ''பாவம், தள்ளாத வயசிலே இப்படித் தவிக்க

என் புதிய

# உஷா

## தையல் மிஷினில் தைப்பது உற்சாகமளிக்கிறது.

## சிக்கனமும் கூட!

உஷா தையல் மிஷின் வாங்குவதற்கு முன்னால் வீட்டில் தைப்பது அவ்வளவு நல்ல பொழுதுபோக்கு என்பது தெரியவே தெரியாது. அற்புதமாக பயனளிக்கக் கூடிய ஒரு நல்ல முதலீடு கூட. நாமே தைக்கும்பொழுது செலவு குறைவல்லவா? ஆகவே, இப்பொழுது என் விருப்பப்படியே அதிகமாக துணிமணிகள் தைத்துக்கொள்கிறேன்.

மிக நேர்த்தியான தையலை அளிக்கும் என் உஷா மிஷின் நீடித்து நன்றாக உழைக்கக் கூடியது. என்னால் உஷா மிஷின் இல்லாமல் இருக்கவே முடியாது.

"உஷாவில் தைத்து பணத்தை மிச்சப்படுத்துங்கள்" என்கிறார்களே அது உண்மையே.



நீங்கள் இதற்கு முன்பு தைத்ததே இல்லையென்றாலும் உஷா எம்ப்ராய்டரி டெய்லரிங் பள்ளியில் சேர்ந்து குறைந்த செலவில் அதி விரைவில் தைக்க கற்றுக்கொள்ளலாம். உங்கள் வீட்டிற்கருகிலுள்ள உஷா டீலரைக் கேளுங்கள். அல்லது விவரங்களுக்கு போஸ்ட் பாக்ஸ் 2130, கல்கத்தாவிற்கு எழுதுங்கள்.

ஜே இஞ்சினீரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31

வேண்டியிருக்கிறதே'' என்று அங்கலாய்த்தாள். தாமினி முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தவள் ஏதும் பதில் சொல்லவில்லை. அந்தப் பிச்சைக்காரக் கிழவியின் முகத்தை வேண்டுமென்றே தன் பார்வையிலிருந்து விலக்க முயல்வது போல் இருந்தாள் தாமினி.

கிழவி எதிரே வந்து நின்றவள் நகர்கிற வழியைக் காணோம். இரு பெண்களையும் பார்த்துக் கொண்டே நின்றாள். கருங்கி வதங்கி ஆட்டம் கண்டுவிட்ட அந்தக் கிழவி முகத்திலிருந்து எந்த உணர்ச்சியும் தெளிவாகப் புலப்படவில்லை.

''பாட்டி! உனக்கு யாரும் வேண்டப்பட்டவங்க இல்லையா? தள்ளாத வயசிலே ஏன் இப்படித் திண்டாடுறே?'' — இவ்வாறு பூங்கொடிக்குக் கேட்காமல் இருக்க முடியவில்லை.

''ஒரு மகன் இருக்கிறான், பூமிக்குப் பாரமாய், சோத்துக்குத் தண்டமாய். நான் ஒருத்தியா யிருந்திட்டால், இப்படி லோலாயம் போட்டுக்கிட்டு, கை நீட்டி வயிறு வளர்க்கணுங்கற மொடை இல்லே, கண்ணே! உங்களைப் பார்த்தால்....''

தாமினி சட்டென்று எட்டணாவை எடுத்துக் கிழவியின் குவளையில் போட்டு விட்டு, ''பூங்கொடி! நீ ஏதாவது போடுவதானால் போட்டு விட்டு அனுப்பு. இங்கே இந்தத் தொணதொணப்பெல்லாம் வேண்டாம்'' என்று கடிந்து கொண்டாள். பூங்கொடி ஒரு ரூபாய் நோட்டைக் கிழவியின் கையில் வைத்து மூடி, ''பாட்டி, உங்கள் உடம்பையும் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

''உங்களுக்கு எந்த ஊரம்மா?'' என்று கிழவி பரிவுடன் கேட்டாள்.

''இந்தா, உனக்கு ஏன் இந்த அநாவசிய விசாரிப்பெல்லாம்? காசு வந்தாயிடிச்சு. வந்த வழியாய்ப் போய்ச் சேர்!'' என்று தாமினி இரைந்தாள்.

கிழவி விவரம் தெரியாத ஏக்கத்துடன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றாள். அவள் அடுத்த பெட்டியில் ஏறிக் கொள்கிற வரைக்கும் பார்த்துவிட்டு, அடுத்த பெட்டியில் ஏறி விட்டாள் என்பது உறுதியானவுடன் ஓர் ஆசுவாசப் பெருமூச்சை விட்டு விட்டு, ''பூங்கொடி! உனக்கேன் இந்தக் கிழத்தின் மேல் இவ்வளவு கரிசனம்?'' என்று கேட்டாள்.

''என் அம்மாயி இருந்தால் இப்போ இந்த வயசுக்காரியாகத்தான் இருப்பாங்க. அவங்க நினைவு வந்து விட்டது. என்னிடத்திலே அவங்களுக்கு எத்தனை பிரியம் தெரியுமா?''

''என் அம்மாயிகூட என்னிடத்திலே நிரம்பவும் நேசமாகத்தான் இருந்தாங்க. அவங்க வார்த்தையைக் கேட்டுக்கிட்டு வீட்டோட இருந்திருந்தால், இந்தக் கிழவியோட கூட நானும் பாடிக்கிட்டு வந்து, குவளையை நீட்டி நீட்டிப் பிச்சை எடுத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்.''

''ஏன், தாமி இப்படிச் சொல்கிறாய்? அப்போது, இந்தக் கிழவி உன் அம்மாயியாக இருப்பாங்களோ?''

''அவங்க ஏன் பிச்சைக்கு வருவாங்க? மரியாதைப்பட்டவங்களாச்சே. உழைத்துச் சம்பாதிக்கக் கூடியவங்க. அவங்க ஏற்பாட்டுப்படி நான் தலையாரி மகனைக் கல்யாணம் கட்டிக் கொண்டு இருந்திருந்தால், சோத்துக்குப் பிச்சை எடுக்க வேண்டியதுதான். மகா கிரிசை கெட்ட பயல் அவன். திருட்டுக் கள்ளைக் குடிச்சுப்பிட்டு, ஒநாய் மாதிரி வந்து விழுவான். ஓடி வந்தேனோ பிழைத்தேனோ?''

புகைவண்டி குத்தாலத்தில் வந்து நின்றது. தாமினி முகம் கழுவி, உடை மாற்றிக் கொள்ளச் சென்றாள். அவள் வந்த பிறகு, பூங்கொடி போக வேண்டும். வழக்கம் போல் ரசிகர்கள் கூட்டம் ஜன்னல் பக்கத்தில் குவிந்திருந்தது.

கிழவி மறுமுறையும் தன்னுடைய பெட்டிக்குள் நுழைவதைக் கண்ட பூங்கொடிக்கு ஒரே உற்சாகம். எதிர் கொண்டழைத்தாள்.

''பாட்டி, உனக்கு எந்த ஊர்?''

''பிச்சைக்காரிக்கு எல்லாம்தான் ஊரு. மாயவரத்துக்கும் கும்பகோணத்துக்குமா போய் வருவேன். கார்டு, டேசன்மாஸ்டரு எல்லாரும் நல்லவங்க; கண்டுக்காத மாதிரி இருந்து விடுவாங்க. ஆமாம், நீங்க எந்த ஊரு? மதராஸ்காரங்களா?'' என்று ஆதுரத்துடன் விசாரித்தாள் கிழவி.

## வழக்கறிஞர் திரு இராமசுவாமிக் கோனார் மணிவிழா

நெல்லை வழக்கறிஞரும், பொதுப் பணிகள் பல ஆற்றி வருபவருமான திரு க. இராமசுவாமிக் கோனார் பி. ஏ. பி. எல். அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழா முன்னீர்க்குளம் கிராமத்தில் நவம்பர் 24-ந் தேதி ஆறு மணிக்குச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. பாளையங்கோட்டை நகர் மன்றத் துணைத் தலைவர் திரு ஆதிமூலதாஸ் தலைமை தாங்கினார்.

இறை வணக்கத்துக்குப் பின் கேரளப் பல்கலைக்கழக ரசாயனப் பகுதியைச் சேர்ந்த திரு என். இராமையா எல்லோரையும் வரவேற்றுப் பேசினார். தலைவரின் பாராட்டுத் தலைமையுரைக்குப் பின், பொதுப்பணிக் கழகங்கள், சமூக சேவை மன்றங்கள் இவை சார்பிலும், தனியார் சார்பிலும் திரு கோனாருக்கு மலர் மாலைகள் அணிவிக்கப்பட்டன. திரு திருநீலகண்டக் கோனார் பொன்னாடை போர்த்தினார். திரு இராமசுவாமிக் கோனாரின் உருவப் படத்தை ஓய்வு பெற்ற வர்த்தக அதிகாரி திரு இராமசாமி தாஸ் திறந்து வைத்தார். மணிவிழா மலரை வெளியிட்டு நாகர்கோவில் திரு பண்டார நம்பியார் சொற்பொழிவாற்றினார். மணிவிழாக் குழுவினரின் சார்பாக நெல்லை இந்துக் கல்லூரிப் பேராசிரியர் திரு எஸ். இராமச்சந்திரன் நன்றி கூறினார்.

''ஆமாம், பாட்டி!''

''பயாஸ்கோப் கம்பெனியிலே வேலை பார்க்கிறீங்களா?''

''இல்லே, பாட்டி. பள்ளிக்கூடத்திலே வாத்தியாரம்மா வேலை பார்க்கிறோம்.'' — மறுபடியும் பொய் கிளம்பியது.

''பக்கத்திலே இருந்த பெண் உன் தங்கச்சியா?'' என்று கேட்டாள்.

''தங்கச்சி மாதிரிதான்.''

''அவள் பேரு?''

''தாமினி டீச்சர்னு கூப்பிடுவாங்க.''

கிழவியின் முகம் சுருங்கியது. ஏதோ உற்சாகக் குறைவு இடுங்கிய கண்களில் நிழலாடியது.

தாமினி புத்தாடையும் புது மெருகுமாக வந்து உட்கார்ந்தாள். ''அப்சரஸ் தோற்று விடுவாள்.'' எதிரே அமர்ந்திருந்த வம்பளப்பு அம்மாள் முணு முணுத்துக்கொண்டாள்.

கிழவி தாமினியை ஏறிட்டுப் பார்த்தாள். அவளிடம் ஏதோ கேட்கத் துடித்தாள். அதற்குள் தாமினி பயந்ததுபோல் ''பூங்கொடி! நான் பக்கத்துப் பெட்டிக்குப் போகிறேன். அடுத்த ஸ்டேஷனில் வந்து சேர்கிறேன்'' என்று சொல்லி விட்டு அவசரம் அவசரமாகப் போய் விட்டாள். வண்டி புறப்பட்டது.

''ஏம்மா பூங்கொடி, நீகூட இஸ்கூல் டீச்சராகத்தான் இருக்கிறாயா?'' — ஏக்கத்துடன் கேட்டமாதிரி இருந்தது கிழவியின் குரல். ஒரு கணம், உண்மையைச் சொல்லி விடலாமா என்று பூங்கொடி நினைத்தாள். தாமினிக்கும் எதிர்ப் பக்கத்துக்காரர்களுக்கும் பயந்து கொண்டு, பொய்யை மேலும் வலியுறுத்திச் சொன்னாள். கிழவி மேலே பேசவில்லை.

அடுத்த ஸ்டேஷன் வந்ததும் கிழவி பக்கத்துப் பெட்டிக்குப் போய் விட்டாள். பூங்கொடி மாயவரத்தில் வாங்கின பலகாரப் பொட்டலத்தைக் கிழவிக்குக் கொடுத்து வழியனுப்பினாள். தாமினி பக்கத்தில் இல்லாதது பூங்கொடிக்கு வெறிச்சென்று இருந்தது.

அடுத்த ஸ்டேஷனில் ரயில் வந்து நின்றது. தாமினி எதிர்பார்த்தபடி திரும்பி வரவில்லை. பக்கத்துப் பெட்டியில் உள்ள துணை நடிகர்களுடன் பேசிக் கொண்டிருப்பாள் என்று எண்ணிக் கொண்டாள் பூங்கொடி.

**வ**ண்டி ஆடுதுறையில் நின்றதும்தான் தாமினி திரும்பிப் பூங்கொடியிடம் வந்து சேர்ந்தாள்.

''இவ்வளவு நேரம் அங்கே என்ன செய்து கொண்டிருந்தாய்?'' என்றாள் பூங்கொடி.

''அந்தக் கிழவியிடமிருந்து தப்பித்துக் கொள்ளப் போனேன். சனியன் அங்கும் வந்து தொலைத்தது.''

''தாமி, உனக்குத்தான் இப்படிப்பட்டவர்களிடம் அநுதாபம் அதிகமாயிற்றே. நீ ஏன் இந்தக் கிழவியை இவ்வளவு வெறுக்கிறாய்?''

''துப்புத் துலக்குகிறவன் மாதிரி, பின்னாலேயே வந்து பன்னிப் பன்னிக் கேள்வி கேட்டால் ஆத்திரம் வராமல் என்ன செய்யும்? ஒரு டிக்கெட் கலெக்டரைப் பார்த்து, அவளை இழுத்துப் போய் வெளியே விட்டு விடச் சொல்லி விட்டேன். அதோ பார், ஸ்டேஷன் பக்கம் போவதை'' — தாமினி கோபத்துடன் சொல்லி விட்டு, வெளிப்பக்கம் கையைக் காட்டினாள். இரு போர்ட்டர்கள் கிழவியைக் கட்டாயப்படுத்தி அழைத்துச் சென்றார்கள். கூடவே ஒரு டிக்கெட் பரிசோதகரும் போனார்.

கிழவி, பூங்கொடி நின்ற பக்கத்தைக் காண்பித்து, ''ஒரே ஒரு வார்த்தை அந்தப் பெண்ணிடம் கேட்டு விட்டு வந்து விடுகிறேன் ஒரு நிமிஷம். சத்தியமாய் நான் வண்டியில் ஏறிப் போகவில்லை. ஒரு நிமிஷத்துக்கு விடுங்கய்யா!'' என்று கதறினாள். அவளை வெளியே விட்டு விட்டுத்தான் திரும்பினார்கள். இதைப் பார்த்துக் கொண்டிருந்த பூங்கொடிக்கு அழுகையே வந்து விட்டது.

''தாமினி! நீ இவ்வளவு கிராதகியாக இருப்பாயென்று நான் நினைக்கவே யில்லை.''

''பக்கத்துப் பெட்டிக்கு அவள் வந்தபோது நம் ஆசாமிகளிடம் சொல்லி ஒவ்வொரு ரூபாய் போடச் சொன்னேன். இன்றைக்கு நல்ல வரும்படி — கிழவிக்கு.''

''தர்மமும் செய்து விட்டு, நாயை இழுத்துப் போகிற மாதிரி வெளியே கொண்டு போய்த் தள்ளச் செய்கிறாயே, பாவி!''

''நான் அப்படிச் செய்யாவிட்டால், அவளே என்னை அப்படி இழுத்துக் கொண்டு போய் விடுவாள் போலிருந்தது.''

''உன்னை இழுத்துப் போகக் கிழவிக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?''

''நான் மட்டும் பைத்தியமா?''

பூங்கொடி கண்களைத் துடைத்துக்கொண்டு வெறிக்கப் பார்த்தவாறு, ''தாமினி! நெஞ்சைத் தொட்டுச் சொல். இதே உன் அம்மாயியாக இருந்தால், நீ இப்படிச் செய்வாயா?'' என்று கேட்டாள்.

இந்தக் கேள்வியைச் செவியுற்றதும் தாமினி பூங்கொடியை ஒரு கணம் முகம் வெளிறிட ஏறிட்டுப் பார்த்துவிட்டு, ''பூங்கொடி, அந்தக் கிழவிதான் என் அம்மாயி. அதனாலேதான் நான் அப்படிச் செய்தேன். வயோதிகம் காரணமாக என்னை அவள் புரிந்து கொள்ள முடியவில்லையோ, பிழைத்தேனோ?'' என்று நெஞ்சம் விம்மச் சொன்னாள்.

''என்ன! நீ பலமுறை பணம் அனுப்பியும் திருப்பி அனுப்பிவிட்ட அந்த அம்மாயியா இவள்? அடி பாவி, இதை நீ ஏன் அப்போதே என்னிடம் சொல்லவில்லை? இவ்வளவு நேரம் நீ வெறுப்பாக இருந்ததெல்லாம் வெறும் நடிப்புத்தானா?''

கண்களில் பொங்கி வழிந்த நீர்ப்பெருக்கைத் துடைத்துக் கொண்டு, வெளியே கிழவி சென்ற பக்கம் பார்த்தாள் தாமினி. ஜன்னல் பக்கம் குழுமியிருந்த ரசிகர்களில் ஒருவர், ''சோக நடிப்புக்கு ஒத்திகை நடக்கிறதப்பா, கவனி!'' என்றார். சிரிப்பொலி கலகலத்தது. அப்போதும், இரு நடிகைகளின் நெஞ்சங்கள் அழுது கொண்டிருந்தன. நடிப்புக்காக அல்ல; மெய்யாகவே!

---

Printed & Published by R. Ananthana rayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

அடைந்திட்டோம்
அழகென்னும் குலச் செல்வம்...







அழகுசாதன
சோப்புக்களில்
அரசியர்க்கரசி

# மகாராணி
## சந்தன சோப்

வாதுமை எண்ணெய் கலந்துள்ள சோப்

செல்வச் சந்தன மரம் தந்த சத்தும், சரும நெகிழ்ச்சிக்கான மிகத் தூய தாவரத் தைலங்களும் இணைந்து உருவாகியுள்ளது மகாராணி. அன்னச் சிறகு போன்ற மென்மைப் பொலிவையும், சல்லாத் துகில் போன்ற சருமத் தெளிவையும் நமக்கு அருள்வது மகாராணி சந்தன சோப்...

MHR. 4A-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு